# வரலாற்றில் இலங்கையும் காயல்பட்டினமும்

ஆசிரியர் :
தமிழ்மணி - தாஜுல் உலூம்
**மானா மக்கீன்**

**மணிமேகலைப் பிரசுரம்**



தபால் பெட்டி எண் : 1447
7 (ப.எ.4), தணிகாசலம் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
தொலைபேசி : 4342926
தொலைநகல் : 0091-44-4346082
மின் அஞ்சல் : manimekalai@eth.net

# நூல் விவரம்


| | |
|---|---|
| நூல் தலைப்பு | ➢ வரலாற்றில் இலங்கையும் - காயல்பட்டினமும் |
| ஆசிரியர் | ➢ மானாமக்கீன் |
| மொழி | ➢ தமிழ் |
| பதிப்பு ஆண்டு | ➢ 2001 |
| பதிப்பு விவரம் | ➢ முதல் பதிப்பு |
| உரிமை | ➢ ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | ➢ 11.2 கி.கி. |
| நூலின் அளவு | ➢ கிரௌன் சைஸ் (12½ x 18½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | ➢ 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | ➢ 304 |
| நூலின் விலை | ➢ ரூ. 65.00 |
| அட்டைப்பட ஓவியம் | ➢ திரு. *சாய்* |
| லேசர் வடிவமைப்பு | ➢ *கிறிஸ்ட் டி.டி.பி. சென்டர்*, சென்னை - 24. |
| அச்சிட்டோர் | ➢ *ஸ்கிரிப்ட் ஆப்செட்*, சென்னை - 94. |
| நூல் கட்டுமானம் | ➢ தையல் |
| வெளியிட்டோர் | ➢ *மணிமேகலைப் பிரசுரம்* சென்னை - 17. |




'வரலாற்றுப் பாரம்பரியம் பற்றிய உணர்வும் பிரக்ஞையும் ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் சார்ந்த சமூகத்திற்கும் மிக அவசியமானதாகும். தனிமனிதனுக்கு நினைவாற்றல் என்பது எப்படியோ அப்படியே ஒரு சமூகத்திற்கு அதன் வரலாறும். நினைவாற்றலை இழந்த மனிதன் நடைப்பிணமாக காட்சியளிப்பான். அவ்வாறே வரலாற்றை இழந்த சமூகமும்.

- முனைவர் (கலாநிதி) எம்.ஏ.எம். சுக்ரீ
பணிப்பாளர் நாயகம், ஜாமிஆ நளீமிய்யா
வேர்விளை (இலங்கை)



**உலகெலாம் பரவிய நலஞ்சேர் மக்கள்**

*இறைநெறியை அமெரிக்கர்க் கெடுத்து ரைப்பார்*
*எம்பெருமான்மொழிபேசி இலங்கைசெல்வார்*
*மறைநெறியை சிங்கப்பூர் உணரச் செய்து*
*மலாயாவும், பர்மாவும் வியக்க வாழ்வார்*
*நிறைநெறியால் அரபுநாட்டின் குடிகளாகி*
*நெஞ்சார ஹாங்காங்கில் ஜப்பான் நாட்டில்*
*குறையறியாக் குடியேற்றம் கண்டி ருப்பார்*
*குலம்விளக்கும் திருக்காயல் பதிப்பி றந்தார்!*

**- கவிஞர் மு. காஜா முஹ்யித்தீன் எம்.ஏ.**
(1978.ம் ஆண்டில் 'காவியக் காயல்' என்ற நூலில் பாடியது.)





அப்பாப்பள்ளித் தெரு
அத்திமரத்தார் வீடு
மர்ஹூம் **ஆனா கானா** அவர்களுக்கு
அர்ப்பணம்



காலத்திற்குக் காலம் சென்னைத் தண்ணீர்ப் பிரச்சினையைச் சந்திக்கிறது. சரியான தீர்வு கிடைக்காமல் தவிக்கிறது.

இதே நிலை அரை நூற்றாண்டுக்கு முன் காயல்பட்டினத்தில் காணப்பட்டது.

ஆறு ஆண்டுகள் நீடித்தது நிலைமை. அப்புறம் 2ம் உலக மகாயுத்த முடிவில் ஊர் மக்களே ஒரு முடிவுக்கு வந்து ஆறரை இலட்சம் செலவில் தண்ணீர்த் திட்டம் அமைத்தனர். இதற்கெனவே ஐக்கிய முன்னேற்றம் சங்கம் ஒன்று அமைக்கப்பட்டது. கனம் ஆனா கானா அவர்களையே தலைவராகவும் ஆக்கினார்கள்.

அப்பொழுது அவர்கள், இலங்கை - கொழும்பில் இரண்டாம் குறுக்குத்தெருவில் ஒரு காசுக்கடை முதலாளியாகக் கொடிகட்டிப் பறந்தார்கள். 29.5.1945ல் கொழும்பிலேயே ஆறரை இலட்ச நிதிக்கு அடிகோலினார்கள். அப்பொழுதே ஐம்பத்தொரு ஆயிரம் அள்ளி வழங்கினார்கள். அத்தனை பெரிய தொகையின் இப்போதைய பெறுமதியைக் கணக்கிட்டால் யாருக்கும் புல்லரிக்கும்.

அவ்வாறு அப்பொழுது ஆரம்பித்த தண்ணீர்த் திட்டத்தால் இப்பொழுது ஆத்தூரிலிருந்து நல்ல குடிநீர் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

அவ்வாறு காயல்பட்டின தண்ணீர்த்திட்டத்திற்கு அள்ளி வழங்கிய அவர்கள், இன்று தமிழ்நாட்டில் சரித்திரம் சமைத்துவிட்ட சத்துணவுத் திட்டத்திற்கும் முன்னோடியாக திகழ்ந்தார்கள். காயல்பட்டின - ஆறுமுகனேரி மேனிலைப்பள்ளியில் இவர்கள்தம் சொந்தச் செலவில் ஹாஜி எல்.கே. லெப்பைத்தம்பி அவர்களது வழிகாட்டலில் நடத்திய



மதிய உணவுத்திட்டத்தை நேரில் கண்ட அன்றைய முதல்வர் காமராசர் அதனைப் பின்னர் தமிழ்நாட்டில் அறிமுகம் செய்தார். எம்.ஜி.ஆர். அரசில் அது பிரபலமானது.

அபிமானிகள் அறியாத இன்னும் ஒன்று உண்டு. அது என் சொந்த வாழ்க்கையோடு பிணைந்தது. என் காலஞ் சென்ற தந்தையார் அவர்கள் ஒரு (தங்க) அரிப்பு வியாபாரி. அன்னாருக்கும், கணம் ஆனா கானா அவர்களுக்கும் தொழில் தொடர்பு இருந்தது. அந்த வகையில் இந்த, உங்கள் எழுத்தாளரின் 11வது வயதில் வள்ளல் பெருந்தகையின் அறிமுகம் எனக்குக் காயல்பட்டினத்திலேயே கிடைத்தது என்றால் அதிசயமே!

என் தந்தையார் அவர்கள் தன் இறப்பை முன்கூட்டியே உணர்ந்தோ என்னவோ காசுக்கடை முதலாளியைக் கொண்டு காசு சம்பாதித்துக் கொள் என்று மறைந்தார்கள்.

14 - ஆவது வயதில் அவர்கள் நிறுவனத்தில் நானும் ஓர் ஊழியனானேன். ஆனால் என் கரத்திலோ எழுதுகோல். என்னை ஒரு வர்த்தகனாக்குவதில் அவர்கள் தோற்றுப்போய் என் எழுத்தார்வத்தை ஊக்கினார்கள். இலங்கைத் தினகரனுடன் அப்போது தான் நிறைந்த தொடர்பேற்பட்டது. வானொலித் தொடர்புகளை வளர்த்துக் கொள்ளவும் வசதிகள் செய்து கொடுத்தார்கள். ஒரு கடையின் ஊழியனுக்குக் கனவிலும் நடக்காத சங்கதிகள். எந்தச் சமயத்திலாவது என்னைப் பற்றியும் இரண்டு வார்த்தைகள் எழுது என்று கட்டளையிட்டிருக்க மாட்டார்கள் அத்தனை தன்னடக்கமானவர்கள்; தற்புகழ்ச்சி அற்றவர்கள்.

மிகவும் சுருக்கிச்சொல்ல வேண்டுமானால், தங்கப்பாளங்கள் புடம்போடப்படும் 170 ஆம் இலக்கம் இரண்டாம் குறுக்குத்தெரு ஏ.கே. முஹம்மது அப்துல்காதர்

நிறுவனத்தில் நான் ஓர் எழுத்தாளானவதற்குப் புடம் போடப்பட்டது. கனம் முதலாளி அவர்களுடன் நிறுவனத்தின் முகாமையாளர் தீவுத்தெரு ஏ.கே.எம். ஷாஹுல் ஹமீது மர்ஹூம் அவர்களுக்கும் பங்கு உண்டு.

கனம் ஆனா கானா முதலாளி அவர்களே, நான் என் இளவயதில் தந்தையை இழந்தபொழுது, திக்குத்திசை தெரியாமல் தவித்தபொழுது, தந்தைக்குத் தந்தையாக அரவணைத்து என்னையும் ஊர்க்காரனாக வரித்துக் கொண்டு ஒரு வாழ்க்கை அமைத்துத்தர முயன்றீர்கள். ஆனால் இறைவனது எண்ணப்படியும் திட்டப்படியும் அல் -கலம் கை ஏந்தினேன். அல்ஹம்துலில்லாஹ்.

அந்த வகையில், இப்பொழுது ஒரு பன்னூலாசிரியனாகப் பரிணமித்து இந்த மிலேனிய ஆண்டில் வரலாற்றில் இலங்கையும் காயல்பட்டினமும் ஆய்வில் அமிழ்ந்து, முத்தும் மாணிக்கமுமாகத் தகவல்களைத் தேடிப்பிடித்திருக்கிறேன்.

அத்தனையையும் உங்களுக்கு - உங்களுக்கே அர்ப்பணித்து அகமகிழ்கின்றேன்.

இப்போதைய எனது ஆசை எல்லாம், எனது ஒரே மகள் - பங்களாதேஷில் மருத்துவம் கற்கும் மகள் - ஒரு சிறந்த மகப்பேற்று மருத்துவராக (டி.ஜி.ஓ.) எதிர்காலத்தில் மணம் பரப்பிட வேண்டும் என்பது தான். இன்ஷா அல்லாஹ். தாங்கள் பல கல்வித்துறை காரியங்களுக்கும் முன்னின்றவர்கள். அவ்வகையில், என் மகளின் அறிவுப்பசி தீரவும் இறைவனிடம் இறைஞ்சிடுங்கள். சுவர்க்கவாதியான தங்கள் வேண்டுகோளை அவன் கபூலாக்குவான்.

என்றும் நன்றி மறவாத எனது அன்னையாரும் நானும்

**மானா மக்கீன்.**



# ஒரு நல்ல பட்டினம்

"முத்தமிழ்க் காவலர் -"

**டாக்டர் கி.ஆ. பெ. விசுவநாதம்**

உலகின் ஐந்து கண்டங்களையும் சுற்றி வந்த அறிஞர்களாலும்கூடக் காண முடியாத நல்ல பட்டினம் ஒன்று உண்டு. அது கள்ளுக்கடைகளே இல்லாத பட்டினம்; காவல்துறை நிலையங்களே இல்லாத பட்டினம். திரைப்படக் கொட்டகைகள் ஒன்று கூட இல்லாத பட்டினம்.

இப்பட்டினத்திற்கு இன்னொரு சிறப்பும் உண்டு. கொலைகாரர்களே இல்லாத மக்களையும், தூக்கு மேடை ஏறாத சமூகத்தினரையும் கொண்டபட்டினம் இது. தெருக்கள் தோறும் பள்ளிவாயில்கள். வீதிகள் தோறும் வேதபாடசாலைகள். வீடுகள் தோறும் திறமைசாலிகள். கடல் கடந்து சென்று பொருள் தேடி சிக்கனமாக வாழ்ந்து எஞ்சிய பொருளைப் பல நல்ல அறச் செயல்களுக்கு வழங்கி வாழ்பவர்கள்.

இந்நகரத்தில் ஏழைப்பணக்காரன் என்ற வேற்றுமை கிடையாது. சாதி வேற்றுமையும் இல்லை. சமய வேற்றுமையும் இல்லை. எங்கு பார்த்தாலும் சமத்துவம். எங்கு பார்த்தாலும் சகோதரத்துவம்.

எந்தச் சமூகத்திலும் காண முடியாதபடி தங்களின் தாய்மொழியை, தூய்மையாகவும், அழகாகவும் இனிமையாகவும் பேசி வருபவர்கள்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பு பாண்டிய மன்னனால் ஆளப் பெற்று வந்த துறைமுகப் பட்டினங்களில் இதுவும் ஒன்று. இப்பட்டினம் சென்னைப் பட்டினமும் அல்ல, நாகப்பட்டினமும் அல்ல, காவிரிப்பூம்பட்டினமும் அல்ல, ''காயல்பட்டினம்'' நெல்லையிலிருந்து முப்பத்து ஆறுகல், தூத்துக்குடியிலிருந்து பதினெட்டுகல், திருச்செந்தூரிலிருந்து ஐந்து கல்.

பாழ்பட்ட நகரங்கள் பல உள்ள இவ்வுலகில், பண்பட்ட நகரம் ஒன்று தமிழகத்தில் காணப்படுவது தமிழும், தமிழரும், தமிழகமும் பெற்ற பேறாகும்.

- நன்றி : காயல்பட்டினம் தேர்வு நிலைப்
பேரூராட்சி நூற்றாண்டு நிறைவு
சிறப்பு மலர் - 1990
(ஆசிரியர் : காயல் மகபூப்)
வெளியிட்டாளர் : ஹாஜி மர்ஹூம் வி.எஸ்.எஸ். லெப்பை.

---

நான், "விடைபெறும் வேளை" 295ஆம் பக்கத்தில் உள்ளது. படிக்கத் தவறாதீர்கள்.

---



## நூற்றாண்டை நோக்கி...



காயல் காந்தி
**எல்.கே. ஷெய்கு முஹம்மது**
(பெத்தாப்பா)
(யாழ்ப்பாணத்தில் வாழ்ந்தவர்கள். தற்சமயம் திருச்சியில்)



அல்ஹாஃபிழ் அல்ஹாஜ்
**நா.கு. முஹம்மது அப்துல் காதிர் முஃப்தி**
(எஹலியகொடையில் வாழ்ந்தவர்கள் தற்சமயம் காயல்பட்டினத்தில். இளவயதுப் படம்.)



**ஆலிம் மு.கா. செய்யிது அஹமது அபூதாஹிர்**
(தற்சமயம் குருநாகலில். இளவயதுப் படம்.)



முத்து காக்கா
**விளக்கு முத்து முஹம்மது லெப்பை**
(இலங்கையில் வாழ்ந்தவர்கள் தற்சமயம் காயல்பட்டினத்தில்.)

## பவளம் பார்த்தவர்கள்...



அல்ஹாஜ் பி.ஏ. சதக்
(தற்சமயம் கொழும்பில்)



தங்ஙள்
எம்.என்.எம். அப்துல் காதிர்
(தற்சமயம் கொழும்பில்)



அல்ஹாஜ் எம்.எஸ். ஷெய்கு சம்சுதீன் மக்கீ
(தற்சமயம் சென்னையில்)

கவனிக்க : இலங்கையில் வாழ்ந்து பவளம் பார்த்த பலருள் என் கண்களில் கண்டவர்கள் இம்மூவரே.



## இரத்தினத் துவீபத்தில் மணம் பரப்பிய பலருள் சிலர்...

(இந்நிழற்படங்கள் வரிசைப்படுத்தப்படவில்லை.)





பா.கு. பல்லாக்கு லெப்பை ஆலிம்



ஹாஜி எல்.கே. லெப்பை தம்பி



ஹாஃபிஸ் எம்.கே.ஒ.எம். முஹம்மது மீராசாகிபு



ஹாஜி பி.எஸ். சுலைமான்


ஹாஜி பி.எஸ். அப்துல் காதர்


ஹாஜி எஸ்.ஒ. ஹபீபு


ஹாஜி வாவு எஸ்.
மொகுதூம் முஹம்மது


ஹாஜி கத்திபு செய்யது
அஹமது


ஹாஜி எல்.கே. ஷேக்னா
லெப்பை


ஹாஜி எல்.கே. ஷம்சுதீன்




ஹாஜி எம்.எம். சேகு
அப்துல் காதர்


ஹாஜி எம்.எம். செய்யது
அலவி


ஹாஜி காணி எம்.எஸ்.எம்.
அப்துல் காதர்


ஹாஜி எஸ்.எம். சகாப்தீன்


ஹாஜி எல்.கே. சுலைமான்


ஹாஜி எல்.கே. காழி
அலாவுதீன்


விளக்கு மாமா
ஹாஜி வி.எம்.எஸ். லெப்பை


பற்றோலை
கண்ணாடி ஆலிம்


ஹாஜி ஏ.கே. சாஹுல் ஹமீது


ஜனாப் எல். கனி


ஹாஜி கத்தீப் சலீம்


ஜனாப் எஸ்.டி. வெள்ளைத் தம்பி




ஹாஜி வாவு
ஷாஹுல் ஹமீது


ஹாஜி பிரபு
ஜெய்னுல் ஆப்தீன்


ஹாஜி கே.ஏ. செய்யது அப்துல் காதிர் பி.எஸ்.சி.


ஜனாப் செய்கு நூர்தீன்


ஹாஜி. பி.ஏ. முகியித்தீன்


ஹாஜி செய்யது அப்துல் ரஹ்மான்



ஹாஜி மிஸ்கீன் சாகிப் பாஸி



அப்பா ஹாஃபிஸ்
கம்பல்பக்ஸ்



ஹாஜி டி.ஒ.வி. அஹ்மது
சுலைமான்



அல்ஹாஃபிஸ் மீயன்னா
அபுல்ஹஸன்



ஹாஜி க.வி. முஹம்மது
நூஹு



ஜனாப் பி.எம்.எஸ்.
இப்ராஹிம்





## கல்ஹின்னை - காயல்பட்டினம்
## இணைந்த கரங்கள்



இங்கே படத்தில், இடமிருந்து வலமாக ஹாஜி முஸ்லிம் சலாஹுதீன் ஜே.பி. ஆலிஜனாப் ஏ. டபிள்யு. ஹிழுறு முகம்மது ஹல்லாஜி, வேர்விளை வள்ளல்- கல்வித்தந்தை எம்.ஐ.எம். நளீம் ஹாஜியார் ஜே.பி. ஆகியோரைக் காண்கிறீர்கள். தகவல்களுக்கு மறுபக்கம் செல்க...

கண்டிப் பிரதேசத்தில் அக்குறணை - மாத்தளை வழித்தடத்தில் உள்வாங்கி **கல்ஹின்னை** ஊர் உள்ளது.

சிங்களப்பகுதியான இங்கே வாழும் முஸ்லிம்களுக்கு இஸ்லாம் ஒரு கண்ணிலும் இன்பத்தமிழ் மற்றொரு கண்ணிலும்.

**'மலையகத்தின் தமிழகம்'** என்றும் அழைப்பதுண்டு.

கல்வியால் உயர்ந்தவர்களும், ஆன்மிகத்திலும் இலக்கியத்திலும் உன்னதம் பெற்றவர்களும் அதிகமதிகம்.

இங்கே ஓர் இளைஞர். தம் தந்தையாருக்குச் செலுத்தும் நன்றிக்கடனாக அவர் நாமத்தில் ஒரு நூலகம் அமைத்திருக்கிறார். அதுவும் அவர் வாழும் காலத்திலேயே! அல்-மனார் தேசியப்பாடசாலையில் அமைந்துள்ள அது, அக்கல்விக்கூடத்தையும் பெருமைப் படுத்துகிறது.

இவ்வாலிபர் கொழும்பில் கல்வி கற்கும் காலத்தில் படு சூரர்! எதில்? ஏதாவதொரு தொழில் பழகிக்கொள்வதில்! பாடசாலை முடிந்ததும் நேராக 2ஆம் குறுக்குத்தெரு மாணிக்க மனிதர் (வணிகர்)களுடன் கலந்துவிடுவார்! அவருக்குக் காயல்பட்டினவாசிகள் தோன்றாத்துணை! பலரிடம் சிறந்த பயிற்சி பெற்றுள்ளார்.

இன்றையப் பொழுதில் உழைப்பால் உயர்ந்த ஒரு மாணிக்க மனிதர். தொழிலும் சரி. வள்ளல் தன்மையிலும் சரி.

பெயர்கூட அபூர்வமானதே! **'முஸ்லிம்'** என்பது அவர் நாமம். **"முஷான் இண்டர்நேசனல்"** என்ற அவரது நிறுவனத்தின் பெயரிலும் புதுமை!



காயல்பட்டினத்தார் மீது மிகுந்த அன்பும் அபிமானமும் கொண்டிருக்கும் அவர், இந்த மிலேனிய ஆண்டில் (2001) செய்திருக்கிற ஒரு பெரிய மகத்தான சாதனை, **இரத்தினக்கல் ஏற்றுமதி ஒன்றை காயல்பட்டின வாசிக்கே செய்திருப்பது!**

ஹாஜி முஸ்லிம் நினைத்தால் உலக நாடுகளில் எந்தவொரு நிறுவனத்திற்கும் ஏற்றுமதி செய்யலாம். ஆனால் அவர் விரும்பியது, காயல்பட்டின மண்ணின் மைந்தர்களது தொடர்பினையே!

ஹாங்காங்கில் மிக வெற்றிகரமாகச் செயல்பட்டு வரும், **"சின்சியர் எண்டர்பிரைசஸ்"**, **"முஷான் இண்டர்நேசன"**லுடன் சங்கமம்!

**அதாவது, கல்ஹின்னையும் காயல்பட்டினமும் தங்கள் கரங்களை இறுகப்பற்றிப் பிடித்துக் கொண்டுள்ளன! (நூற்றாண்டுகாலத் தொழில் தொடர்புகள் அனைத்துலக மட்டத்தில்!)**

அல்ஹம்துலில்லாஹ்.

இன்று ஹாங்காங்கைத் தலைமையகமாகக் கொண்டியங்கும் **"சின்சியர் எண்டர்பிரைசஸ்"** நிறுவனர் **ஹாஜி ஏ.ஆர். அப்துல் வதூத்** அவர்களும் அவரது செல்வப்புதல்வர் **ஏ.டபிள்யூ. ஹிழுறு முகம்மது ஹல்லாஜி** அவர்களுமாவர்.

சுமார் 29 வயது நிரம்பியுள்ள இந்த இளைஞரும், **ஹாஜி முஸ்லிம் சலாஹுதீன்** சமாதான நீதிபதி (ஜே.பி.) அவர்களும் தொழில்துறையில் இணைந்த கரங்களாகச் செயல்பட்டுக்கொண்டிருக்கின்றனர்.

இவ்வாய்வு நூல் அச்சுக்குப்போகும் சமயத்தில், ஆலிஜனாப் ஹிழுறு முகம்மது ஹல்லாஜி அவர்களுடன் சில நிமிட நேர்முகமொன்று ஏற்பட்டது. ஆஹா! அந்த அடக்கமும், அந்த இன்முகமும் ஒவ்வொரு இளைய தலைமுறைக்கும் அவசியமானவொன்று. தாம் ஒரு பாரம்பரியக் குடும்பத்துப்பிள்ளை என்பதை நிரூபித்தார்!

உண்மைதான்! பழம்பெரும் மாணிக்க வணிகர் **'ஒத்தமுத்து'** குடும்பத்து **எம்.எம். உமர்** ஹாஜி அவரது தாய்வழிப்பாட்டனார். தந்தை வழித் தோன்றலில் மர்ஹூம் **எம்.ஏ.எம். அப்துல் ரஷீத்** ஹாஜி அவர்கள்.

மகிழ்ச்சி. மிலேனிய ஆண்டில் இரு இளைஞர்களும் சாதனைக்குமேல் சாதனை புரிந்து, வரலாற்றுப் பேருண்மைகளை உயிர்ப்பித்தவண்ணம் உயர்ந்து உயர்ந்து செல்ல இறை கிருபை கிடைப்பதாக.

*கடைசியில் சொல்ல இருந்தவொன்று:*
*ஹாஜி முஸ்லிம் அவர்கள், உலகளாவியப்*
*புகழும் பெருமையும் பெற்றுள்ள "கண்டி மவ்லானா"*
*அல்ஹாஜ் எச். சலாஹுத்தீன், அனைத்திலங்கை*
*சமாதான நீதவான் அவர்களது அருமைச் செல்வர்களுள்*
*ஒருவராவார்! தகவலின் முக்கியத்துவம் கருதி இவ்வாக்கம் ஆய்வுக்கு முன்னமே இடம் பெற்றுள்ளது.*
*அனைத்துப்புகழும் அவனுக்கே!*








அஷ்-ஷெய்கு **ஹாஜி எம். இஸட். ஜலீல் முஹையத்தீன்** (குதுபிய்யா மன்ஜில் கொழும்பு, காயல்பட்டினம்) 20

* **ஹாஜி மு.கா. செய்யிது அபூதாஹிர் ஆலிம்** (குருணாக்கல்)
* **ஹாஜி பி.எ. சதக்** (கொழும்பு)
* **ஹாஜி ('தங்கள்') எம்.என்.எம். அப்துல்காதர்** (கொழும்பு)
* **ஹாஜி டி.ஏ.எஸ். அப்துல்காதர்** (திருச்சி)
* **டாக்டர் எஸ்.எல். முஹம்மது லெப்பை எம்.பி.பி.எஸ்** (திருச்சி)
* **டாக்டர் எம்.எஸ். அஷ்ரஃப் எம்.டீ., எஃப்ஐ.சி.ஏ.** (திருச்சி)
* **ஹாஜி வாவு எம்.எம். சம்சுதீன்** (காயல்பட்டினம் பைத்துல்மால் தலைவர்)
* **ஹாஜி எம்.எம். முத்துவாப்பா** (ஹாங்காங்-இலங்கை)
* **ஜனாப் காயல் மகபூல்** (காயல்பட்டினம்)
* **ஹாஜி பி.எம்.எஸ். அமீர் அப்துல்லா** (ஹாங்காங்)
* **ஜனாப் எஸ்.ஐ.எம். மொஹிதீன்** (கண்டி)
* **ஜனாப் பி.எம்.ஏ. பல்லாக்கு** (கொழும்பு)
* **ஜனாப் எம்.கே.எம். இப்ராஹிம்** (கொழும்பு).
* **ஹாஜி அப்துல் காதிர் முஹம்மது நூஹு** (கொழும்பு).
* **ஜனாப் ஏ.ஜி.ஏ. அஹமது ரிஃபாய்,** (கீழக்கரை)
* **லயன் எஸ்.எஸ்.எம். சதக்கத்துல்லா** (சென்னை).

# உள்ளே...





வரைபடத்தில்

இலங்கையும் காயல்பட்டினமும்

NORTH

சென்னை

தமிழ்நாடு

வங்காள விரிகுடா

திருச்சி

தஞ்சாவூர்

காரைக்கால்

நாகூர்

நாகப்பட்டினம்

தேவிப்பட்டினம்

மதுரை

கோட்டைப்பட்டினம்

யாழ்ப்பாணம்

பாசிப்பட்டினம்

தொண்டி

இராமநாதபுரம்

இராமேஸ்வரம்

மன்னார்

பேட்டை (நெல்லை)

மேலப்பாளையம்

தூத்துக்குடி

காயல்பட்டினம்

திருவனந்தபுரம்

பூவார்

தேங்காப்பட்டினம்

அனுராதபுரம்

மன்னார் குடா

வளை குடா

புத்தளம்

சிலாபம்

கண்டி

இலங்கை

நீர்கொழும்பு

கொழும்பு

வேர்வலை

காலி

வெலிகாமம்

மாத்தறை

அம்பாந்தோட்டை

மூதூர்

ஏராவூர்

காத்தான்குடி

கல்முனை

இந்தியப் பெருங்கடல்

# இலங்கை - காயல்பட்டினம்

# இதயக்கனிகள்



எதிர்ப்பக்கத்திலிருந்து சுவையுங்கள்...



1

## மாதிஹுர் ரசூல், மாமேதை ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா [ரஹ்] அவர்கள்

( ஹி. 1042 - 1115 / கி.பி. 1632 - 1703 )

*காயல்பட்டினம்!*
*மக்க நகரத்திலிருந்து*
*தெறித்து விழுந்த...*
*மகரந்தத் துளியென்பார் - நம்*
*கவிக்கோ!-அந்தக்*
*காவியக் காயல்...*
*ஓவியமாய்*
*ஒன்றைப் பெற்றது!*
*அதைப் பெற்றதால் தான் என்னவோ...*
*காலம் பூராவும்*
*பெருமையையும் பெற்றது!*

*ஒரு ஞான விழுது*
*பூமிக்கு அறிமுகம்!*
*அஸ்ஷெய்கு சுலைமான் (வலி) அவர்கள்*
*அன்னை பாத்திமா - இவர்கள்*
*இல்லத்தில்... ஒரு*
*பிள்ளை நிலா!*

*தந்தையின் ஊர் - காயல்பட்டினம்*
*தாயார் - முகவை மாவட்டத்தில் எமனேஸ்வரம்*
*இவர்கள் இல்லறத்தில்*
*மூன்றாவதாய்ப் பிறந்த*
*முத்து! - தீனுக்கோர்*
*சொத்து!*

*ஞானப் பயிருக்கான...*
*ஆரோக்கிய வித்து!*

- **'பொற்கிழி' கவிஞர் மு. சண்முகம்.**
*டாக்டர் ஜாகிர் உசேன் கல்லூரி,*
*இளையான்குடி.*

**உ**ண்மை! முற்றிலும் உண்மை!

என் பேனாவின் முதல் இதயக்கனி!

இந்திய - இலங்கை முஸ்லிம் சமுதாயத்திற்குக் கிடைத்த ஐந்து மாணிக்கங்களுள் ஒரு மாணிக்கம்!

**'தைக்கா'** என வைத்த பெயர் ஸதக்கத்துல்லாஹ் ஆனது. **'இறையருட் கொடையாளர்'** எனப்பொருள் கொள்ளலாம்.

ஹி. 1042 / கி.பி. 1632-ல் காயல்பட்டினத்தில் பிறந்து தமது 73ஆம் வயதில் கீழக்கரையில் ஓய்வுறக்கம் கொண்டார்கள். (ஹி 1115/கி.பி. 1703).

கடலுக்கு அப்பாலும் இப்பாலும் வாழ்ந்த இந்திய (தமிழகம்) - இலங்கை முஸ்லிம் சமுதாயம்



'போர்த்துக்கேயர்' என்ற அந்நியரால் அல்லலுற்றுக் கொண்டிருந்த ஒரு காலகட்டத்தில் அவர்களது ஆளுமை கிடைத்தது.

அந்நியர்களால் அழிக்கப்பட்டுக் கொண்டிருந்த தீனியாத்திற்கு அவர்கள் புத்துயிர் கொடுத்தார்கள். மக்தப்களும் மதரஸாக்களும் தோன்றச் செய்தார்கள். மறைந்துபோன மார்க்க நெறிமுறைகளை மக்களது அன்றாட வாழ்க்கையில் கைக்கொள்ள வைத்தார்கள்.

தந்தையார் **அஸ்ஷெய்கு சுலைமான் (ஒலி)** கலீஃபாவாக இருந்து கட்டி வளர்த்த காதிரிய்யாத் தரீக்காவைத் தமது 4 சகோதரர்களின் உதவிகொண்டு இருகரைகளிலும் நிலைபெறச் செய்தார்கள்.

'வரலாற்றில் இலங்கையும் - காயல்பட்டினமும்' இனிய தொடர்புகளைத் தொடங்கும்பொழுது, இவ்விரு பகுதி வரலாற்றின் ஒரு பெரும் நாயகராகத் திகழ்கின்ற **'அப்பா'** அவர்களை நினைக்காமல், நெஞ்சம் நெகிழாமல் பேனாவைப் பிடிக்க இயலாது.

அப்பா அவ்வர்கள் யாத்த **'வித்ரியா'**வும், அறபுநாட்டிலிருந்து கொணர்ந்து அறிமுகப்படுத்திய **'ஸுப்ஹான மவ்லிது'**ம் காதுகளில் ஒலித்தவண்ணம் இருக்க, இந்த ஆய்வுப்பணி ஆரம்பமாகிறது.

அல்ஹம்துலில்லாஹ்.

**காயல்பட்டினம் தைக்கா சாகிபு (ஒலி) அவர்கள்**
**(ஹி.1191-1271 / கி.பி. 1777 / 1854)**

**அபூபக்கர் சித்தீக்** (ரலி) பரம்பரையில் தோன்றிய காயல்பட்டினம் **ஷெய்கு அலி நுஸ்கி** ஒலியுல்லாஹ் அவர்களது மக்களுள் **ஷெய்கு அலாவுத்தீன்** (ஒலி) அவர்களும் ஒருவர். இவர்களது வம்சாவளியில் 12-வதாக வந்தவர்கள் **ஷெய்கு உமர்** (ஒலி) அவர்கள். 13-வதாக அவர்கள் புத்திரர் **குதுப் ஷெய்கு அப்துல் காதிர்** என்ற **தைக்கா சாகிப்** (ஒலி) அவர்கள் (ஹி. 1191-1271 / கி.பி. 1777 / 1854). 14-வதாக அவர்களது மைந்தர் ஷெய்குல் ஆஷிகீன் **செய்யிது முஹம்மது சாலிஹ்** (ஒலி) அவர்கள்.

சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்கள் விட்டுச் சென்ற பணியை இலங்கையில் 19ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் கொண்டெடுத்துச் சென்றவர்களுள் முதலாமவர் காயல்பட்டினம் தைக்கா சாஹிபு (ஒலி) அவர்கள். கள்ளிக்கோட்டை (காலிக்கட்) செய்யித் ஷெய்கு முஹம்மது அல்-ஜிஃப்றி அவர்களது கலீஃபாவாக ஹி.1230 / கி.பி. 1814 வாக்கில், தமது சீடர்கள் அழைப்பில் இலங்கைக்கு விஜயம் செய்து தென்னிலங்கை மாத்தறை வரையில் அறநெறிப்பணிகள் புரிந்துள்ளார்கள்[1].

மாத்தறையில் அவர்களது செல்வாக்கு அபிரிமிதமாக அமைந்து போனது. அவர்கள் அங்கே, "**ஹூவலான கமாகான அவ்லியா**" என்றழைக்கப்பட்டு புகழப் பெற்றார்கள்.

1. *Arabi, Arwi, And Persian In Sarandib and TamilNadu - By Afdalul Ulama Dr. Tayka Shuayb Alim B.A. (Homs) M.A., Ph.D. M.F.A. P.43 (1993)*



அவர்களால் நிறுவப்பட்ட தைக்கா, கடைவீதியில் ஜும்ஆப் பள்ளிவாசல் அருகே அமையப் பெற்றுள்ளது. இன்றைக்கும் கந்தூரி வைபவம் வெகு விமரிசையாக நடந்த வண்ணம் உள்ளது.

அவர்களுக்கு நெருங்கிய சீடர்களெனக் குறிப்பிட வேண்டியவர்களாக வேர்விளை செய்கு முஸ்தஃபா ஒலி (ஆதம் மரக்காயர் மகன்) அவர்களும், கஸாவத்தை (அக்குறணை - கண்டி) முஹம்மது லெப்பை ஆலிம் இபுனு ஷெய்க் அஹமத் ஆலிம் அவர்களும் திகழ்ந்துள்ளனர்.

தங்களது அனைத்துச் சேவைகளையும் தந்தையார் உமர் ஒலியுல்லாஹ் (ஹி. 1162 - 1216 / கி.பி. 1748 - 1801), அவர்களது வழிகாட்டலிலேயே தொடர்ந்தார்கள் என்பதையும் வரலாற்றில் பார்க்கிறோம்.

அன்னாரைப் பின்பற்றி, மகனார் - மருமகனார் - மைத்துனர் (கீழக்கரை தைக்கா சாகிபு), இமாமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஆகியோரும் இலங்கையில் அறநெறிகள் ஆல்போல் தழைக்க அரும்பாடுபட்டார்கள் என்பதையும் யாரும் மறந்துவிட முடியாது. மறைக்கவும் முடியாது.

"இந்திய - இலங்கை முஸ்லிம்களது வரலாற்றை பொறுத்தவரையில் அந்நியரது அரசியல் ஆதிக்கத்திற்குட்பட்டு, விதேசியக் கல்விமுறையின் கட்டுக்கோப்பில் சிக்குண்டு, தனது தனித்தன்மையை இழக்கக்கூடிய பயங்கர நிலை இந்நாடுகளின் முஸ்லிம் மக்களுக்கு இருந்துவந்தது. இக்கால கட்டத்திலே காலத்தின்

அறைகூவலை ஏற்று ஆக்கப்பணி புரிந்தனர்" என்கிறார் அன்பர் கலாநிதி எம்.ஏ.எம். சுக்ரி அவர்கள், அல்லாமா அவர்களைப் பற்றி ஆரம்ப காலத்தில் எழுதிய கட்டுரையொன்றில்.

காயல்பட்டினம் தைக்கா சாகிபு அவர்கள் ஒய்வுறக்கம் கொள்ள விழைந்தது இலங்கை - கஸாவத்தை ஆலிம் அவர்களது மடியிலேயே என்றும் பதிவாகி உள்ளது.

**தைக்கா செய்யித் முஹம்மது ஸாலிஹ் (ஒலி) அவர்கள்**
**(ஹி. 1242 - 1323 / கி.பி. 1826 - 1905)**



புதிய சோனகர் தெரு ஸாலிஹ் தைக்கா



இலங்கையில் காயல்பட்டினம் தைக்கா ஸாஹிபு (ஒலி) அவர்கள் ஆரம்பித்து வைத்த அறநெறி வழிவகைகளைத் தொடர்ந்தும் முன்னெடுத்துச் சென்ற பெருமை அவர்கள் தம் மைந்தர் **ஷெய்குல் ஆஷிகீன் செய்யிது முஹம்மது தைக்கா ஸாலிஹ்** (ஒலி) அவர்களுக்கு உரியதாகும்.

அன்னாரது அரும் முயற்சியிலேயே, இரண்டாம் குறுக்குத்தெரு 163ஆம் இலக்கத்தில் உள்ள பல்லாக்குக் கட்டடத்தில் **தைக்காக் கிட்டங்கி**யும், புதிய சோனகர் தெருவில் **ஸாலிஹ் தைக்கா**வும் நிறுவப்பட்டன. இந்தத் தைக்காவில் அன்னாரது கலீஃபாக்களுள் ஒருவரான **அய்யம்பேட்டை அப்துல் கனி பாவா** அவர்களது அடக்கத்தலம் உள்ளது.

தைக்கா ஸாஹிபு (ஒலி) அவர்களது ஒய்வுறக்கம் மைசூர் பட்கர் நகரில் 81ஆம் வயதிலாகும். அங்கே, தர்கா ஒன்றும் கட்டப்பட்டுள்ளது.

**தைக்கா சுல்தான் அப்துல் காதிர் (ஒலி) அவர்கள்**
**(ஒய்வுறக்கம்) ஹி. 1298 / 1878)**

காயல்பட்டினம் தைக்கா ஸாஹிபு (ஒலி) அவர்களது மருகரான **ஷெய்கு காமில் சுல்தான் அப்துல் காதிர்** (ஒலி) அவர்களுக்கும் மாத்தளை, டவுன் பள்ளிவாசலுக்குமுள்ள தொடர்பு சாமான்யமானதன்று.

அந்தப் பள்ளிவாசலில் தொழுகைகளை நடத்திக் கொண்டு, அந்த இறையில்லத்தை மையமாகக்கொண்டு,

மாத்தளைப் பிரதேச முஸ்லிம்களின் மார்க்கத் தேவைகளைப் பூர்த்தி செய்து, அதே நேரத்தில் அவர்களுக்கு அறநெறி வாழ்க்கையைக் காட்டி அரிய தொண்டினைப் புரிந்தார்கள்.

**'மாத்தளை மாநகரின் மகான்'** என்றே அவர்களை அழைக்கலாம். அன்னாரது ஓய்வுறக்கம் அப்பள்ளி வளாகத்திலேயே. 1878.

(09ஆம் அத்தியாயத்தில் உள்ள மாத்தளைப் பகுதி ஆய்விலும் குறிப்புகள் உள்ளன).

### பெரிய ஷெய்குனா மிஸ்கீன் சாகிபு அவர்கள்

அல்-வலிய்யுல் காமில் அல்லாமா **ஷெய்கு முஹம்மது அபூபக்கர் மிஸ்கீன் சாகிபு** அவர்களைக் காயல்பட்டின மக்கள் அன்றும் இன்றும் **'பெரிய ஷெய்குனா'** என்று அழைத்துக் கௌரவிக்கின்றனர்.

அவர்கள் மட்டுமல்ல, 'இலங்கை முஸ்லிம்களும் அப்படியே! அன்னார், குத்புல் அக்பர் **இமாம் அபுல்ஹஸன் அலியுஷ் ஷாதுலி** (ரஹ்) அவர்கள் நிறுவிய தரீக்காவைப் பரவச் செய்த தூண்களுள் ஒருவர்.

அவர்களால் ஹி. 1285 (கி.பி. 1868)ல் **'ஜாவிய்யதுல் பாஸிய்யதுஷ்ஷாதுலிய்யா'** காயல்பட்டினத்தில் நிறுவப் பட்டது. அதுமுதல், அத்தரீக்காவை இந்தியாவில் மட்டுமின்றி இலங்கையிலும் பரவச் செய்த தலைமகன் அவர்களாகும். அன்னார் மக்காநகர் சென்று ஷெய்கு முஹம்மது பாஸி அவர்களிடமிருந்து ஷாதுலிய்யாத் தரீக்காவின் கிலாஃபத்தைப் பெற்றிருந்தார்கள்.



இன்று இலங்கையின் பல ஊர்களிலும், கிராமங்களிலும் காணப்படுகின்ற ஜாவிய்யாக்களும் அதனோடு இணைந்த மத்ரஸாக்களும் உருவானதற்கு உறுதுணை அவர்களே!

இவ்வாண்டு (2001) ஆகஸ்ட் திங்களில் நிகழ்வுற்ற அகில இலங்கை ஷாதுலியா தேசியக் கருத்தரங்கில் அவர்கள் நினைவு கூறப்பட்டார்கள்.

அவர்களது காலத்திலும், அவர்களுக்குப் பின்னரும், அவர்கள்தம் உடன்பிறந்த சகோதரர் **'சின்ன ஷெய்குனா' அல்லாமா அஷ்ஷெய்கு முஹம்மது நூஹ்** அவர்களும், மருமகனார் **நூஹ் லெப்பை ஆலிம்** அவர்களும் இலங்கையில் ஷாதுலிய்யாவை முன்னெடுத்துச் சென்றார்கள். (இவர்களைப் பற்றிய குறிப்புகள் வேறொரு பக்கத்தில்).

மகான் **'பெரிய ஷெய்குனா'** மாபெரும் ஆன்மிக அறிவுக்கடல். அவர்களைப் பற்றி தனிநூலே எழுதிட விடயங்கள் உள்ளன.

### இமாமுல்அரூஸ் மாப்பிள்ளைலெப்பை ஆலிம் அவர்கள்

**(ஹி. 1232-1316 / கி.பி. 1816-1898)**

அல்-இமாமுல் அரூஸ் அல்லாமா மாப்பிள்ளை ஆலிம் வலியுல்லாஹ்!

இந்த மாமனிதர் பற்றி எழுதாதவர் இல்லை, இல்லை!

இவர்கள் யார் - யாருடைய பிள்ளை - எங்கே பிறந்தார்கள் - எங்கே வாழ்ந்தார்கள் என்பதையெல்லாம் முதலில் சில வரிகளில் படித்துவிடுவோம்.

இவர்களும் காயல்பட்டினமே! **வெள்ளை அஹ்மது லெப்பை ஆலிம் (வலி), ஆமினா உம்மா** தம்பதிக்குப் பிறந்த பன்னிரண்டு செல்வங்களில் ஒருவர்! இரண்டாம் பிராயத்திலேயே பெற்றோர்களுடன் கீழக்கரை வாசியாகிவிட்டார். அரூஸிய்யாவில் சேருகையில் வயது பத்தோ, அதற்கு சற்று குறைவோ! இருபத்தொரு வயது இளைஞராக ஆனபொழுது, தன் உஸ்தாதின் (குரு) நான்காம் மகளாரான அருமை **சாரா உம்மாவை** துணைவியாக அடைந்து **'மாப்பிள்ளை லெப்பை ஆலிம்'** ஆனார்கள்!

தொடர்ந்து ஏணிப்படிகள் காத்திருந்தன!

மதிப்பிற்குரிய மாமனார் அவர்கள் காலத்திற்குப் (ஹி.1267/கி.பி.1850) பிறகு அவர்களது வழிவாறான தரீக்காவின் ஏகத்தலைவரானார்கள். அறபு-உர்தூ-பார்ஸி-தமிழ் நான்கிலும் ஆழ்ந்த புலமை. மலையாளம் 'சம்சாரிக்குன்னு!' சமஸ்கிருதமும் வரும்!

அன்னாருக்கு இலங்கை **'இரண்டாவது தாயகம்!'**

மிக நிச்சயமாக இரண்டாவது தாயகமே!

முதன் முதலில் கால்பதித்தபோது வயது பதினெட்டு!

மொத்தமாக எண்பத்து நான்கு ஆண்டு வாழ்வில் (ஹி.1232-1316 / கி.பி.1816-1898) சுமார் அறுபது



ஆண்டுகளை இலங்கை முஸ்லிம்களின் இஸ்லாமியப் பணிகளுக்கு தியாகித்து, அவர்களுடனேயே உண்டு உறங்கி சேவையாற்றினார்கள்.

வந்தது வர்த்தக நோக்கத்திற்குத்தான். ஆனால், மார்க்கப்பற்றில், மார்க்க அறிவைத் தேடுவதில் மங்கித் தூங்கிக் கொண்டிருந்த மக்களைப் பார்த்ததும் அவர்களது வணிக ஆர்வம் வலுவிழந்து போய்விட்டது.

திட்டங்கள் வகுத்து செயலில் இறங்கினார்கள். மார்க்கக் கிரியைகளில் மக்களை ஈடுபடுத்தினார்கள். வாகன வசதியோ பாதை வசதியோ இல்லாதிருந்த அக்காலத்தில் அவர்கள் கால்படாத இடம் இருக்கவில்லை. காடு மலை கடந்து காணாத குக்கிராமங்கள் குறைவு.

போர்த்துக்கீசியர் காலத்திலிருந்து குறிவைத்து அழிக்கப்பட்ட பள்ளிவாசல்களைப் புனரமைப்பதில் அவர்கள் காட்டிய ஆர்வமும், அயராத உழைப்பும் இருக்கிறதே, அவை பக்கம் பக்கமாக எழுதப்பட வேண்டியவை.

இன்னொரு மாபெரும் குறையைப் பின்னர் உணரத் தலைப்பட்டார்கள். ஒரு சிறப்பான அறிவுக்கூடம்- அறபுக் கலாநிலையம் - இல்லாததை உணர்ந்து வேதனைக் குள்ளானார்கள்.

ஹிஜ்ரி 1301 / கி.பி.1884.

கொழும்பிலிருந்து கி.மீ. 144 (90 மைல்) தொலைவில், சிறந்து விளங்கும் முஸ்லிம் நகரமாம் வெலிகாமம் (பல்காம்)

வரலாற்றில் வைரமாக மின்னிடல் வேண்டுமென்பது இறைவனது நியதியாயிற்று!

அங்கே, கல்பொக்கைப் பகுதியிலே, அமைதி பொங்கும் சூழலிலே, ஆற்றங்கரையோரத்திலே **புகாரி மஸ்ஜித்** முதல் நிகழ்வு. **மத்ரஸத்துல் பாரீ** இரண்டாம் நிகழ்வு.

**“மத்ரஸத்துல் பாரீ - மஸ்ஜிதில் புகாரி அலன்னஹ்ரில் ஜாரி”** எனத் தேன் சொட்டும் கவிதைப் பாணியில் மாப்பிள்ளை லெப்பை ஆலிம், - காதிரிய்யா தரீக்காவின் அப்போதைய கலீஃபா - பெயரிடுகிறார்கள். அவர்களே அவற்றை ஸ்தாபிக்கவும் செய்கிறார்கள். ஆரம்ப ஆசிரியராகவும் இருந்துள்ளார்கள்.

இலங்கை வாழ் முஸ்லிம்களின் வரலாற்றில் மிக இருள் சூழ்ந்த காலகட்டத்தில் அல்லாமா இமாமுல் அரூஸ் ஆலிம் (வலி) அவர்களின் பணி நிகழ்ந்தது.

இந்த இடத்தில் என் பேனா பதித்திட வேண்டிய ஒரு தகவல் உள்ளது.

இதுவரையில் நாம், அறிமுகப்படுத்திக்கொண்ட மதிப்பிற்குரிய சதக்கத்துல்லா அப்பா (ஒலி) அவர்கள் முதற்கொண்டு, அல்லாமா அறிஞர் பெருமகனார் இமாமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ஒலி) அவர்கள் வரையில் ‘காஹிரா’ என்கிற காயல்பட்டினத்து மண்ணிலே மலர்ந்தவர்களே! பின்பு கீழக்கரையைத் தாயகமாகக் கொண்டு அதிலே மணம் வீசி தலை சிறந்திருக்கிறார்கள்.



‘‘எமக்கு எல்லாமே ஊர்; எல்லோரும் நம்மவரே’’ என்ற பொருளில், ‘யாதும் ஊரே, யாவரும் கேளிர்’ எனப் பல நூற்றாண்டுகளுக்கு முன் குரல் கொடுத்த கணியன் பூங்குன்றனாரை நினைவில் கொள்வோம். அவருக்கு நன்றி செலுத்தி காயல்பட்டின மண்ணுக்குப் பூமாரி பொழிதல் அவசியம்!

*எனது ஆய்வில், 1998-ல், வெளியான ‘இலங்கை - கீழக்கரை இனிய தொடர்புகள்’ நூலில் பதிக்கப்பட்ட வரிகளையே இங்கே மீண்டும் மறு பிரசுரம் செய்துள்ளேன். இதைவிடப் புதிதாக எழுத திறனில்லை அபிமானிகளே!*

**பாளையம் ஹபீப் முஹம்மது லெப்பை ஆலிம் அவர்கள் (ஒய்வுறக்கம்: ஹி. 1300 - ஸஃபர் 13. கி.பி. 1882.)**

பாளையம் ஹபீப் முஹம்மது லெப்பை ஆலிம் அவர்கள் அறநெறிப் போதகராகப் புகழ்க்கொடி நாட்டியவர்களாவர். வேர்விளை ஷெய்கு முஸ்தஃபா ஒலி போன்றோருக்கு ஆசானாகத் திகழ்ந்தார்கள்.

இந்தச் சிஷ்யர் செய்த ஓர் அரும்பணியை ஆசான் முன்னெடுத்துச் சென்ற அதிசயம் உண்டு!

ஹி. 1291-ல் முதன்முதலாக அல்-குர்ஆன் தப்ஸீர் அறபுத்தமிழில் பம்பாயில் அச்சிடப்பட்டது. இந்தச் சாதனைக்குரியவர் வேர்விளை **ஷெய்கு முஸ்தஃபா** அவர்களே! ஆனால் முதல் ஐந்து ஜுஸ்உக்கள் மட்டுமே அச்சாகின.

ஐந்தாண்டுகளுக்குப் பிறகு - ஹி. 1296-ல் காயல் பட்டினத்திலிருந்த குருநாதர் பாளையம் ஹபீப் முஹம்மது

லெப்பை ஆலிம் அவர்கள், தமது சிஷ்யர் விட்ட பணியைத் தொடர்ந்தார்கள். 'புதூஹாத்துர் ரஹ்மானிய்யா - தப்ஸீரி கலாமிர் ரப்பானிய்யா' என்ற பெயரில் வந்து வரலாறாகிவிட்டது.

இவர்கள் ஓய்வுறக்கம், புத்தளம் - கல்பிட்டியில் எனக் கலாநிதி தைக்கா சுஐபு ஆலிம் தமது ஆய்வில் தெரிவித்துள்ளார்கள்.[2]

**கிழக்கிலங்கை கண்ட நஹ்வி ஆலிம்கள்**



*மனித குல மாணிக்கம் நஹ்வி முகம்மது இஸ்மாயில் ஆலிம் முஃப்தி*

நஹ்வி ஆலிம் முஃப்தி குடும்பத்தினர் கிழக்கிலங்கை மக்களுக்குக் கிடைத்த பெரும் புதையல்கள், அவர்கள் அனைவரும் ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் பரம்பரை. பெரிய முத்துவாப்பா வமிசம்.

2. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A.



தைக்கா சாகிபு (ஒலி) அவர்களால் 'நஹ்வி' என்ற பட்டம் சூட்டப்பட்டவர்கள் நஹ்வி **முஹம்மது இஸ்மாயில் ஆலிம்** முஃப்தி அவர்கள்.

நஹ்வி ஹாபிழ் **செய்யிது அஹமது ஆலிம்** முஃப்தி ('நஹ்வி அப்பா') அவர்கள் மேற்படியார் மைந்தர்.

அல்ஹாஜ், அல்-ஹாஃபிழ் நஹ்வி, **முஹம்மது இஸ்மாயில் ஆலிம் முஃப்தி** அவர்கள், ('பெரிய ஆலிம்சா') மேற்படியார் மைந்தர்.

[இவர்களோடு பிறந்தவர்கள் ஹாஃபிழ் நஹ்வி **முஹம்மது இப்ராஹிம் ஆலிம்** அவர்கள், ஹாஃபிழ் நஹ்வி **செய்கு அப்துல் காதிர் ஆலிம்** அவர்கள் ஹாஃபிழ் நஹ்வி **இஸ்ஹாக் லெப்பை ஆலிம்** அவர்கள்]

நஹ்வி, ஹாஃபிழ் **மு. க. செய்யது அஹ்மது ஆலிம்** முஃப்தி அவர்கள் மேற்படியாரின் மூத்த மைந்தர். (ஓய்வுறக்கம் : 2 - 10 - 1997).

இவர்கள் நால்வரும் இப்பகுதிக்குப் புரிந்த மார்க்கசேவைகள் மகத்தானவை.

இதில் முதலாம் பெரியார் (நஹ்வி முஹம்மது இஸ்மாயில் ஆலிம் முஃப்தி) புத்தளத்தில் ஓய்வுறக்கம் கொண்டுள்ளார்கள் என்பது கலாநிதி தைக்கா சுஐபு ஆலிம் அவர்கள் தகவல்.[3] அன்னார் சிறந்ததொரு அறபுக்கவிஞருமாவார்.

3. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A. Pa. 485.

மற்றும் மூவரும் காயல்பட்டினம் குருவித்துறைப் பள்ளிவாசலில் தனியொரு இடத்தில் ஓய்வுறக்கம் கொண்டிருப்பினும், அவர்களது உயிர்மூச்சு முழுதும் கிழக்கிலங்கையில், காத்தான்குடி - ஏறாவூர் - ஓட்டமாவடி - வாழைச் சேனைப் பகுதிகளைச் சுற்றியே இருந்தது.

முக்கியமாக, **பெரிய ஆலிம்சா** என அன்பாக அழைக்கப்படுகிற அல்ஹாஜ், அல்ஹாஃபிழ் **நஹ்வி முஹம்மது இஸ்மாயில்** ஆலிம் முஃப்தி அவர்கள் ஏறாவூர் வாசிகளது அறநெறி வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்டவர்களாகச் செயல்பட்டிருக்கிறார்கள். அங்குள்ள பலர் காயல்பட்டினம் சென்று கிதாபுகள் ஓதியவர்களே.

பொதுவாகவே, கிழக்கிலங்கையின் அன்றையப் பிரபல உலமாக்கள் பெரிய ஆலிம்சாஅவர்களிடம் ஓதியவர்களாகவே இருப்பர். (உதாரணத்திற்கு : ஒரு 'ஓடக்கரை ஆலிம்' - காத்தான்குடி!)

இதேபோல, '**சின்ன ஆலிம்சா**' என்கிற நஹ்வி ஹாஃபிழ் **மு.க. செய்யது அஹமது** ஆலிம் முஃப்தியும் அவர்தம் சகோதரர்களான நஹ்வி அல்ஹாஃபிழ் **செய்யது சதக்கத்துல்லா** ஆலிம் அவர்கள், நஹ்வி அல்ஹாஃபிழ் **செய்யிது முகம்மது நூஹு** ஆலிம் அவர்கள், நஹ்வி அல்ஹாஃபிழ் **முகம்மது முஹியித்தீன்** ஆலிம் அவர்கள் மட்டக்களப்பு மாநகரில் நேர்மைமிகு வாணிபத்தில் ஈடுபட்டவர்களாக அறநெறி வாழ்க்கையில் மக்களை ஈடுபடுத்தியவர்கள்.



**'ஹவுழ் ஆலிம்சா' அவர்கள்**

இந்த அடைப்பெயர் கொண்ட ஒரு காயல்பட்டின புனிதர் அறநெறி வழிகாட்டியாக இப்பகுதியில் திகழ்ந்துள்ளார்களெனத் தெரிகிறது.

மேற்கொண்டு தகவல்களைச் சேகரிக்க காலம் போதவில்லை.

**குதுபுல் ஹிந்த் அவர்கள்**

இப்பெயர்கொண்டு புகழடைந்தவர்கள் அல்லாமா அஷ் - ஷெய்கு **முஹம்மது நூஹ்** ஆலிம் அவர்கள். **அன்னார் 'சின்ன ஷெய்குனா'** எனக் காயல்பட்டினத்தில் கௌரவிக்கப்படுகிறார்கள்.

மட்டக்களப்பு - நொச்சிமுனையில் இவர்கள் ஓய்வுறக்கம் கொண்டுள்ளதாக எல்.கே.எஸ். குடும்பத்தைச் சேர்ந்த ஹாஜி டி.ஏ.எஸ். அப்துல்காதர் அவர்களது தகவல்.

மேலும், இவர்களது உடன்பிறந்த சகோதரரே, **பெரிய ஷெய்குனா** எனப் புகழடைந்துள்ள **மிஸ்கீன் சாகிப்** ஆலிம் அவர்கள். (அன்னாரது தகவலையும் முன்பக்கமொன்றில் பார்த்திருப்பீர்கள்).

**காத்தான்குடி 'ஓடக்கரை ஆலிம்'**
**(ஹி. 1316/1387 - கி.பி. 1898/1967)**

'காத்தநக'ராம் கிழக்கிலங்கைக் காத்தான்குடிப் பெருமகனாரான இவர்களது சரியான பெயர் **அஹமது லெப்பை** ஆலிமாகும்.

காயல்பட்டினம் பெரிய ஆலிம்சா அல்ஹாஜ் அல்ஹாஃபிழ் நஹ்வி முகம்மது இஸ்மாயில் ஆலிம் முஃப்தி அவர்களது முக்கிய சீடர்.

பெரும் எண்ணிக்கையான அறபுத்தமிழ் நூல்களைக் கொண்ட ஒரு நூலகத்தை இவர்கள் சொந்தமாகக் கொண்டிருந்தார்கள்.

இப்பொழுது அது பாதுகாக்கப்பட்டு வருகிறதா என்பதை அறிய ஆவல்.

**கண்டிமாநகர் கண்ட ஆலிம்கள்**

இன்றைக்கும் 19 ஆம் இலக்க ராஜவீதியில் (கிங்ஸ் ஸ்டிரீட்) கம்பீரமாகத் திகழும் தைக்காவின் - முஹியித்தீன் ஜும்ஆப்பள்ளியின் நிறுவனர் எனச் சொல்லத்தக்கவர்கள், காயல்பட்டினம் '**அவுலியா ஸாஹிப் அப்பா**' அவர்களாவர். (முழுப்பெயர் தவறிவிட்டது. மன்னிக்க)



அல்ஹாஜ் அல்ஹாபிழ் மர்ஹூம் எம்.ஈ. முஹம்மது அப்துல் காதிர் ஆலிம்.



இவர்களைப் போல, '**கண்டி ஆலிம்**' **நா. கு. முஹம்மது இப்ராஹிம்** அவர்களும் 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பொழுதுகளில் ஆன்மிக வளர்ச்சிக்கு ஆணிவேராகத் திகழ்ந்தார்கள். தைக்காவுக்கு இவர்களது சேவை 45 ஆண்டுகளாகும்.

அன்னாரைப் போலவே அவர்களது மகனார் அல்ஹாபிழ் அல்ஹாஜ் **எம்.ஈ. அப்துல்காதிர் ஆலிம்** அவர்கள் 50 ஆண்டுகள் அரும்பணியாற்றியுள்ளார்கள். இவர்களது ஓய்வுறக்கம் ஹி. 1420 - முஹர்ரம் 13ல் (30.4.1999) காயல்பட்டினத்தில்.

**கண்டியில் 'காஹிரா பாடசாலை' கண்டவர்**



ஆலி ஜனாப் நூஹூ தம்பி லெப்பை ஆலிம் அவர்களுக்கு மகனாக அந்தக் கல்வி முன்னோடி ஹிஜ்ரி 1315 - ரஜப் 22ல் (1897) பிறந்தார்கள்.

கொழும்பு, சுப்ரீம்கோர்ட் நீதிபதி எம்.டி. அக்பர் அவர்கள் நிர்வாகத்தில் நடந்து கொண்டிருந்த குர்ஆன் பாடசாலையின் ஆசானாக இருபதாம் பராயத்திலிருந்து 25வரையில் இருந்தார்கள்.

மொறட்டுவை - ஹேனமுள்ளை(பாணந்துறை) காலி நகர்களிலும் பலருக்கு ஆசானாகத் திகழ்ந்தார்கள்.

அதன்பின், 1.4.1923ல், கண்டியில் 'காஹிரா பாடசாலையை' நிறுவினார்கள். அவர்களுக்கு அரபு மட்டுமல்ல ஆங்கில - தமிழ் ஆற்றலும் இருந்தது.

கண்டிக் கல்விக்கூடத்தின் நான்காவது ஆண்டில், தம் பிறந்த மண்ணிலும் அறிவுக்'கூடம் ஒன்று - தமிழும் ஆங்கிலமும் கற்க - இருக்கவேண்டியதன் அவசியத்தை உணர்ந்து தாமே முன்னெடுத்துச் செல்ல முனைந்தார்கள். அங்கும் 1.1.1927ல் 'காஹிரா பாடசாலையை' (மத்ரஸத்துல் காஹிரா) ஆரம்பித்தார்கள். இலங்கை அனுபவத்தால் அற்புதமான கல்வி போதனையாளரானார்கள்.

'இன்றைய அமைப்பு முறையில் ஒரு கல்விக் கூடத்தை காயல்பட்டினத்தில் முதன் முதலில் துவக்கியப் பெருமை அப்துல் ஹை ஆலிம் அவர்களுக்கே சாரும்' என வர்ணிக்கிறார் எல்.கே. பள்ளிகளின் துணைச்செயலர் பி.எஸ்.ஏ. பல்லாக்கு லெப்பை பி.எஸ்சி.



இதுவே இன்று எல்.கே. தொடக்கப்பள்ளி - மேல்நிலைப் பள்ளி'யாக புகழ்பெற்று வரலாறு படைத்துக் கொண்டிருக்கிறது.



*ஜனாப் N.T.H. அப்துல் ஹை ஆலிம் அவர்கள்*

அந்த அறிவுக்களஞ்சியமே **நா.த. ஹாஜி முகம்மது அப்துல் ஹையி** (என்.டி. அப்துல் ஹை) ஆலிம் அவர்களாவார்கள். இவர்கள் ஆரம்பித்த கல்விப்பணியை **எல்.கே. லெப்பை தம்பி ஹாஜி** அவர்கள் முன்னெடுத்துச் சென்றார்கள்.

இன்றும் காயல்பட்டின மக்களும், குறிப்பாக, எல்.கே. பள்ளிகளின் நிர்வாக பிரமுகர்களும் இந்த இரு பெரியார்களையும் எப்பொழுதும் கண்ணியப்படுத்திய வர்களாகவே உள்ளனர்.

அப்துல் ஹையி அவர்களது ஓய்வுறக்கம் 87வது வயதில் - 31.7.1984ல்.

அடிக்குறிப்பு : ஒரு நோட்டீஸில் அவர்களே தெரிவித்துள்ளபடி பிறந்தநாள் தேதி தரப்பட்டுள்ளது.

**கஸாவத்தை ஆலிம் (ஒய்வுறக்கம் ஹி. 1316/கி.பி. 1898)**

கண்டி மாவட்டம் அக்குறணை நகரம், மலையக முஸ்லிம் சமுதாயப் பெருமை பேசுவது. இந்நகரின் ஆன்மிகப் பகுதியான கஸாவத்தை பெற்றெடுத்த பெருமகனாகிறார்கள். இவர்களது முழுப்பெயர் **முஹம்மது லெப்பை ஆலிம் இபுனு ஷெய்கு அஹமத்** ஆகும்.

சுமார் பத்தாண்டுகள் காயல்பட்டினத்தில் தங்கி ஓதிய அவர்கள், அச்சமயம் காயல்பட்டினம் தைக்கா ஸாஹிபு ஒலி அவர்களையே தங்கள் 'உஸ்தா'தாகக் கொண்டு சிறந்தார்கள்.

*'காயல்பட்டின இல்முகள் அனைத்தையும் வாரிக்கொண்டு போய் இலங்கை மக்களுக்குச் சேர்த்தவர்'* - என தைக்கா சாஹிபு (ஒலி) வேடிக்கையாகக் குறிப்பிடுவார்களாம்!

அவ்வாறு குறிப்பிட்ட அவர்களது ஓய்வுறக்கம் கஸாவத்தை ஆலிம் அவர்கள் மடியிலாகும்! (இதனை முன்னரும் பதித்துள்ளேன்.)

மிகமிகச் சமீபத்தில் - 2001 ஜுன் 09ல் - இலங்கை, மாத்தளையில் ஜனாப் ஏ.எம். **நஜீமுதீன்** அவர்களால் வாழ்க்கை வரலாற்று நூல் வெளியாகி பாராட்டுப் பெற்றுள்ளது.

**மாத்தளையை மகிமைப்படுத்திய ஆலிம்கள்**

**தைக்கா சுல்தான் அப்துல்காதிர்** (ஒலி) அவர்கள் **மாத்தளை** மண்ணுக்கு மகிமை சேர்த்ததை முன் பக்கம் ஒன்றில் பார்த்தோமல்லவா! அவர்களைத் தொடர்ந்து ஹாஃபிஸ் **முஹம்மது சுலைமான் லெப்பை** ஆலிம் அவர்களது புதல்வர் கதீப் **முஹம்மது சம்சுதீன்** ஆலிம் அவர்கள் 1902 வரை மாத்தளை டவுன் ஜும்ஆப் பள்ளிவாசல் தலைமைப் பொறுப்பில் இருந்தார்கள்.



1940-லிருந்து 1950வரையில், **அப்துல் ரஹீம்** ஆலிம் அவர்கள் கதீபாகக் கடமை. இவர்களது தலைமுறைகள் இன்றும் இங்கு உள்ளனர்.

1950 - 1965 காலப்பகுதியில் கதீபுகளாகக் கடமையாற்றிய இருவருள் குறிப்பிடத்தக்கவர்கள், **மக்கீ ஆலிம்ஸா** அவர்களும் ஒருவர். தமது மார்க்க ஞானத்தாலும், பழகும் தன்மையாலும் ஜமாஅத்தினரிடம் பெருமதிப்பைப் பெற்றார்கள். மற்றவர், **மாமூனா லெப்பை** ஆலிம் அவர்கள். பெரும் பேச்சாளர் அல்லர்; ஆனால் அவர்களைப் பார்க்கும் போதே ஒரு சாலிஹான மனிதரைப் பார்க்கின்றோம் என்ற எண்ணம் தானாகவே மனத்தில் தோன்றும். அளந்து பேசுவார்; ஆனால் ஆழமான அறிவுடையவர்.

1965 - 1970 காலப்பகுதியில் **சுல்தான் ஆலிம் சாஹிப்** அவர்கள் கதீபாகக் கடமையாற்றினார்கள். கண்ணியமான தோற்றம், யாரையும் வசீகரிக்கும் பேச்சு, மனத்தைக் கவரும் குணநலன்கள், இவை அனைத்தும் ஒருங்கே பெற்றிருந்த சுல்தான் ஆலிம் சாஹிப் அவர்கள் ஒரு தலைமுறையின் பெரும்பகுதியினரைப் பள்ளியோடு இணைத்தவராவார்.

மக்களோடு குறிப்பாக இளைஞர்களோடு மிக அழகிய முறையிலே பழகி, அவர்களைப் பள்ளிக்கு வரச் செய்த இவ்ஆலிம் அவர்களை, டவுன் பள்ளி ஜமாஅத்தினர் எளிதில் மறந்துவிட மாட்டார்கள்.

தராவீஹ் தொழுகையிலே திருக்குர் ஆன் முழுவதையும் ஓதித் தொழுவிக்கும் வழக்கம் மாத்தளை மாவட்டத்திலே முதல் முறையாக டவுன் பள்ளியிலேயே அறிமுகப்படுத்தப்பட்டது.

அவ்வாறு முதன் முறையாக மாத்தளையில் தொழுவித்தவர்கள் காயற்பட்டணத்திலே ஓர் உயர் குடும்பத்திலே பிறந்த **ஹாபிஸ் இஸ்மாயில்** ஹாஜியார் அவர்களாவார்கள். முதிர்ந்த வயதிலும் கால் கடுக்கத் தொழுவித்தார்கள்; ஆனால் அதற்காக அவர் கால் காசு பெற்றதில்லை.

மேலும், மாத்தளை மாவட்டத்தில் சமயப்பணிகளை முன்னெடுத்துச் சென்ற மற்றொரு முக்கியமானவர் மர்ஹூம் **அப்துல் வஹாப்** ஆலிம் அவர்களாகும். அன்னார் காயல்பட்டினம் சென்று ஓதியவர்கள், பெரும் ஆன்மிகவாதியாகத் திகழ்ந்தார்கள்.

- மேற்படி தகவல்களை நான் பெற்றது அல்ஹாஜ் **ஏ.ஏ.எம். புவாஜி** அவர்களது ஆய்வான '**மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள்**' நூலின் மூலமாகும். சகோதரருக்கு எனது ஆழ்ந்த நன்றியறிதல்கள்.



## வேர்விளை ஷெய்கு முஸ்தஃபா (ஒலி) (ஹி. 1252/1305 - கி.பி. 1836/1887)

19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வேர்வளையில் வாழ்ந்த **பாவா ஆதம் மரக்காயர்** மைந்தரான இவர்கள், இலங்கையில் நஃபவிய்யாத் தரீக்காவின் நிறுவனர். அன்னார் **குழந்தை மரக்காயர்** என்றும் அழைக்கப் படுகிறார்கள்.

காயல்பட்டினத்தில் பல்வேறு அறிஞர் பெருமக்களிடம் கிதாபுகள் ஓதியிருக்கிறார்கள். அவர்களுள் பாளையம் ஹபீப் முஹம்மது ஆலிம், முபாரக் மவ்லானா முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். என்றாலும், காயல்பட்டினம் தைக்கா சாகிபு அவர்களது நெருங்கிய சீடரென்றே புகழப்படுகிறார்கள். ஒருசிலர், மேற்படி தைக்கா சாகிபு அவர்களது தந்தையார் செய்கு ஹாஜி உமர் (ஒலி) அவர்களது சீடர் எனக்கருதுவது பிழையானதாகும். இவர்கள் பிறப்பதற்கு 36 ஆண்டுகளுக்கு முன்னர் உமர் (ஒலி) அவர்கள் ஒய்வுறக்கம் கொண்டுள்ளது பதிவாகியுள்ளது.[4]

ஒருவேளை, '**மீசான் மாலை**' என்ற தமது அறபுத்தமிழ்க் கவிதை நூலில், '**எனது செய்க் உமரே**' - என விளித்து இவர்கள் பாடியுள்ளது அப்படியொரு கருத்து மயக்கத்தைக் கொடுத்திருக்கலாம்.

4. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A. Pa. 276.

பத்தொன்பதாம் நூற்றாண்டை அறபுத்தமிழ் யுகமாக, தமிழைத் தம்மொழியாகக்கொண்ட முஸ்லிம்கள் பிரகடனப்படுத்த முடியும். அந்த யுகத்தின் மிக முக்கிய ஒருவராக அவர்கள் விளங்குகின்றார்கள். **'பத்ஹுற்றஹ்மான் பீ தர்ஜுமாஹ் தப்ஸீருல் குர்ஆன்'** என்ற பெயரில் முதல் அறபுத் தமிழ்க் குர்ஆன் ஹி. 1291-முஹர்ரம் 30 வியாழன் வெளியாகி வரலாறு கண்டது.

மேலும், கீழக்கரை இமாமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களது நெருங்கிய நண்பராகத் திகழ்ந்ததும் உண்டு. அந்த வகையில் அன்னவர்களால் கலீஃபாவாகவும் நியமிக்கப்பட்டும் சிறப்பிக்கப் பெற்றுள்ளார்கள். அவர்களுக்கு நன்றிக் கடனாக 18 ஊர்களில் உள்ள இருபதுக்கு அதிகமான முபாரக் மவ்லானா தைக்காக்களில் ரஜப் பிறை 5-ல் நினைவு வைபவங்கள் நிகழ்கின்றன.

## சீனங்கோட்டை 'சாச்சப்பா' ஆலிம் அவர்கள்

வேர்வளை சீனங்கோட்டைப் பகுதி மக்களால் மிகவும் அன்பாகவும் பண்பாகவும் மதிக்கப்பட்டவர்கள் ஒரு **'சாச்சப்பா'**.

காயல்பட்டினம் **ஹத்தாதுலெப்பை** ஆலிம் என்னும் பெயர் கொண்ட அவர்கள், வேர்விளை - சீனங்கோட்டை மக்களது இதயங்களில் தங்களது அறநெறிச் சேவைகளால் நிறைந்ததன் காரணமாக **"சீனங்கோட்டை சாச்சப்பா"** ஆனார்கள்.



அன்னார் சீனன்கோட்டையிலேயே வஃபாத்தாகி, அங்குள்ள ஜும்ஆப் பள்ளிவாசலிலேயே ஓய்வுறக்கம் கொண்டவர்களாக உள்ளார்கள்.

**தர்ஹாநகர் ஷெய்க் ஹஸன் இப்னு உதுமான் அல்-மக்தூம் (ஹி. 1200 - 1283/கி.பி. 1785 சூ - 1866)**

காயல்பட்டினம் ஷெய்குனா லெப்பை ஆலிம் (மறைவு ஹி. 1240/கி.பி. 1824) அவர்களிடம் கற்ற சீடர்களுள் ஒருவர்.

ஒரு பேரறிஞராகவும், சமுதாயச் சேவையாளராகவும் கருதப்படுகிற இவர்கள் தங்கள் மாணவப்பருவத்தைக் காயல்பட்டினத்தில் கழித்த விதத்தை வேர்விளை **ஷெய்கு இஸ்மாயில்** ஒரு கஸீதாவில் வழங்கியுள்ளார்கள்.[5]

வேர்விளைக்கு அண்மிய அளுத்கமை தர்ஹாநகரில் இவர்கள் ஓய்வுறக்க இடம் அமைந்துள்ளது.

## காலிமாநகர் கண்ட ஆலிம்கள்

பிரபல மாணிக்க வியாபாரியாகத் திகழ்ந்த சேர் முஹம்மது மாகான் மரக்காயரது அன்னையார் ஹி. 1310/ கி.பி. 1892ஆம் ஆண்டில், தென்னிலங்கை காலியில் ஆரம்பித்த அறபுக் கலாசாலை **'பஹ்ஜத்துல் இப்ராஹிமிய்யா'**.

இங்கே அறநெறிப் போதகர்களாக இருந்த காயல்பட்டின ஆலிம்கள் இவர்களாவர்:

5. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A. Pa. 496.



- ‘கருத்த ஆலிம்’ எனப்படும் அல்லாமா **முஹம்மது அப்துல் காதிர்** ஆலிம்.
- அல்லாமா அல்ஹாஃபிஸ் ஹாஜி அபூபக்கர் **மிஸ்கின் சாகிபு** ஆலிம். இவர்கள் பின்னர், காலி - சோலை ஸாவிய்யா (அல்-மத்ரஸத்துல் ஸாவியத்துல் மக்கிய்யா) நிறுவனரானார்கள். ஓய்வு : ஹி. 1289/1872.

மேலும், **வஜீஹித்தீன்** ஆலிம் காலிப் பள்ளிவாசல் பேஷ் இமாமாக இருந்துள்ளாார்கள். அன்னாரது படம் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

## பல்காம் பார்த்திட்ட ஆலிம்கள்

‘பல்காம்’ என்பது சிலருக்குப் புரியாது. அது, தென்னிலங்கை வெலிகமை என்ற நகருக்குச் சூட்டப்பட்ட அழகுப் பெயர்.

இங்கே வெலிப்பிட்டி பழைய ஜும்ஆப் பள்ளியில் காணப்படும் இரு ஸியாரத்களில் ஒன்று **நூஹு லெப்பை** ஆலிம் அவர்களுடையது. இவர்கள் **முஹம்மது லெப்பை** ஆலிம் அவர்களது சகோதரரும் **பெரிய ஷெய்குனா மிஸ்கின் சாகிபு** ஆலிம் அவர்களது மருமகனுமாவார்.

கி.பி. 1854ல் காயல்பட்டினத்தில் பிறந்து வெலிகமையில் மணமுடித்து 1935ல் ஓய்வுறக்கம்.



*இவர்கள் பற்றிய மேலும் விரிவான தகவல்களை ‘கொழும்பு கண்ட ஆலிம்கள்’ என்ற பகுதியில் தந்துள்ளேன்.*

**ஷெய்கு அகமது** ஆலிம் என்ற மற்றொரு அறநெறிப் பணியாளரையும் இந்தப் ‘பல்காம்’ பார்த்திருக்கிறது. இவர்களிடம் ஓதியவர்களுள் முக்கியமானவர் உமர் லெவ்வை ஆலிம் அவர்களாவர்.

## புத்தளம் மிஸ்கீன் சாகிப் ஆலிம்

புத்தளத்தில் **காஸிமிய்யா அறபுக்கலாசாலை** இலங்கை முஸ்லிம்களின் பெருமைக்குரிய பீடம்.

1884-லில் ஐதுரூஸ் பள்ளிவாசல் திண்ணையில் ‘இ.செ.மு.’ குடும்பத்தவர்கள் நெஞ்சங்களில் விழைந்த ஒரு நற்பணிக்கு, மர்ஹூம் **இ.செ.மு. முகம்மது காசிம் மரக்காயர்** உரமிட்டார்கள். அவர்களது பெயரில் அது நிறுவப்பட்டுள்ளது. முதல் அதிபராகப் பொறுப்பேற்றுக் கொண்டவர்கள் காயல்பட்டினம் **மிஸ்கீன் சாகிபு** ஆலிம் அவர்கள்.

மேலும், இங்கு ஆசிரியர்களுள் ஒருவராகத் திகழ்ந்த **சேகு இப்ராஹிம்** ஆலிம் அவர்கள் காயல்பட்டினத்தில் ஓதியவர்களே!

## கொழும்பு கண்ட ஆலிம்கள்

### ஷெய்குனா லெப்பை ஆலிம்
**(ஓய்வுறக்கம் : 1240/1824)**

இவர்கள், தைக்காலெப்பை **ஷெய்கு அப்துல்காதர்** அவர்களாகும். பெருமதிப்பிற்குரிய **சதக்கத்துல்லா அப்பா** அவர்களது பேரன். **கீழக்கரை தைக்கா சாகிப் (ஒலி)** அவர்களுக்குத் தாய்வழிப் பாட்டனார்.

மூதுரை, நல்வழி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போன்ற அரிய தமிழ் நன்னெறிப் பாடல்களை அறபுத்தமிழில் ஆக்கி அற்புதம் செய்துள்ளார்கள். அவற்றின் தொகை 225.[6] நூலுக்குத் தலைப்பு, 'ரஸானத்துல் இல்ம்' அன்றையக் காலகட்டத்தில் இது இன்றிமையாத இலக்கியமாயிற்று.

இவர்களிடம் கற்ற சீடர்களில், தர்ஹாநகர் ஷெய்க் ஹஸன் இப்னு உதுமான் அல்-மக்தூமி அவர்களுக்கு ஒரு தனியிடம் உண்டு.

ஓய்வுறக்க இடம், கொழும்பு, புதிய சோனகத்தெருவில் அமைந்துள்ள பெரிய ஜூம்ஆப் பள்ளிவாசல் வளாகம்.

6. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A. Pa. 294.



### நூஹ் லெப்பை ஆலிம்
**(ஹி. 1271/1354 - கி.பி. 1854/1935)**

ஷாதுலிய்யாவின் சேவையாளராக, இலங்கையில் இறையில்லங்களையும், ஸாவியாக்களையும் நிறுவுவதில் முன்னின்றார்கள். முக்கியமாகக் கொழும்பிலும், ஹம்பாந்தோட்டையிலும்.

**நூஹ் லெப்பை ஆலிம்** இப்னு **முஹம்மது அப்துல் காதிர் காஹிரி** என்றழைக்கப்படுகிற இவர்கள், இலங்கையில் பழம்பெரும் முஸ்லிம் கல்விக்கூடமான கொழும்பு - மருதானை ஸாஹிராவுக்கு, **"அல்-மத்ரஸத்துல் ஸாஹிரா"** எனப்பெயர் சூட்டியவர்களாகும் என்பதைக் கலாநிதி அப்ழலுள் உலமா தைக்கா சுஐபு ஆலிம் அவர்களது ஆய்வில் அறிய முடிகிறது.[7]

இவர்களால் ஹி. 1316ல் **'தப்ஸீரே பத்ஹுல் கரீம்'** இரண்டு வால்யூம்களாகப் பிரசுரிக்கப்பட்டது. பின் மறுபதிப்புகளும் வந்தன. நல்ல அறபுக் கவிஞருங்கூட. இவர்களது ஓய்வுறக்கம் தென்னிலங்கை 'பல்காம்' என்ற வெலிகமை ஆகும்.

### 'ஜின் கதீப்' முஹம்மது சதக்கத்துல்லா ஆலிம் அவர்கள்

முஹம்மது சதக்கத்துல்லாஹ் எனப் பெயர்கொண்ட இவர்கள் **'ஜின் கதீப்'** என்றே புகழப்பட்டார்.

7. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Dr. Tayka Shuayb Alim B.A. (Hons) M.A. Pa. 493.

ஒரு வர்த்தகராகக் கொழும்பில் தொழில் புரிந்ததாகத் தெரிகிறது.

அறபுத் தமிழ் ஆக்கங்கள் பல செய்த அன்னார், இமாமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களது சகோதரர் முஹம்மது லெப்பையின் மகனாராவார். இந்த முஹம்மது லெப்பை அவர்கள் இலங்கை பானாகமவில் ஓய்வுறக்கம்.

## 'ஸூஃபி ஹஸரத்' அப்துல் காதிர் ஆலிம் அவர்கள்



காயல்பட்டினத்தின் அறநெறிப் போதனையாளர்களில் ஒரு தனிச்சிறப்பு கொண்டவர்கள்.

அஸ்-ஸெய்ஹு காமில் அல்-ஆரிபுபில்லாஹ் ஷாஹ் **செய்கு அப்துல் காதிர்** ஆலிம், காதிரி, காஹிரி என அவர்கள் அழைக்கப்படுவார்கள்.

மட்டக்களப்பு **செய்யிது இஸ்மாயில்** "வெள்ளி ஆலிம்சா" அவர்களுடன் இணைந்து அறநெறிப்பணிகள் புரிந்தார்கள். கிழக்கிலங்கை ஏறாவூர் போன்ற இடங்களில் அமைக்கப்பட்ட ஸூஃபி மன்ஸில்கள் இன்றும் இவர்கள் தம் நினைவைத் தருகின்றன.

கொழும்பு, சம்மாங்கோட்டுப் பள்ளியில் ஒருபொழுது பேஷ் இமாமாக கடமையாற்றினார்கள். தற்சமயம், கொழும்பு, குப்பியாவத்தை அடக்கத்தலத்தில் ஓய்வுறக்கம்.



## ஜெய்லானி ஹஸரத் அவர்கள்

தப்லீகில் ஈடுபாடு மிகக்கொண்டு அமீராக இலங்கையின் பட்டித்தொட்டி எங்கும் கால்பதித்தவர்கள் ஹாஜி **எம்.ஈ. ஜெய்லானி ஹஸரத்** அவர்கள்.

இருபதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் இலங்கையில் தமது நாவன்மையாலும் நல்லுபதேசத்தாலும் பல இதயங்களில் நிறைந்த மர்ஹூம் ஹாஜி **ஏ.ஏ.எம். மசூத்** ஆலிம் அவர்களது நெருங்கிய நண்பராக இருந்ததுடன், பாணந்துறைப் பகுதியில் தப்லீக் தழைக்கச் செயல்பட்டு வந்த **ஹனிஃபா ஹாஜியார்** அவர்களுடைய நெருங்கியத் தோழருமாவார். இவர்களது ஓய்வுறக்கம் கொழும்பு.

## நூஹூத் தம்பி ஆலிம் அவர்கள்



அக்கால இலங்கையில் ஷாஃபியி முஸ்லிம் மாணவர்களுக்கு ஒரு நல்ல 'தொழுகை அடைவு' நூல் தமிழில் இருக்கப் பெறவில்லை.

அதனை நிவர்த்திக்க வெளியானது, **'அஹ்காமுஷ் ஷாபிய்யா'** நூல். கொழும்பு ஸாஹிராக் கல்லூரி முதற்கொண்டு பல பாடசாலைகளிலும் இஸ்லாம் வகுப்புப் பாடநூலானது. என்னைப் போன்றவர்களுக்கும் தொழுகை முறைகளை சொல்லிக் கொடுத்தது. அந்த நூலின் ஆசிரியரே காயில்பட்டினம் **நூஹூத் தம்பி** ஆலிம் அவர்களாகும்.

கொழும்பு - தெமட்டகொடை மதரஸத்துல் மினன் அறநெறிக் கூடத்துடன் நெருங்கியத் தொடர்பு வைத்திருந்தவர்களும்கூட.

**ஸாஹிராவின் காஹிரி!**

மௌலவி **எம்.ஃ. அபுல்ஹஸன்** ஆலிம், கலீபத்துஷ் ஷாதுலி அவர்கள் ஒரு சகாப்தம். கொழும்பு - ஸாஹிராக் கல்லூரி முதல்வர்கள், மர்ஹூம்கள் **டீ.பி. ஜாயா, ஏ.எம்.ஏ. அஸீஸ்** முதலானவர்களுடன் தோளோடு தோள் நின்று கல்விச் சேவையாற்றியவர்கள் அவர்கள். கலாசாலைக்குக் கிடைத்த ஒரு காயல்பட்டின முத்து!



மர்ஹூம்
எம்.ஃ. அபுல்ஹஸன்

சிறந்த அறபு வல்லுநர். சதா சர்வகாலமும் காயல்பட்டின மண்ணின் அறபுச் செல்வாக்கை நிலைநாட்டிச் கொண்டிருந்தவர்.

நெஞ்சைவிட்டகலா ஒரு நினைவு :

இன்று கொளுந்துவிட்டெரியும் பாலஸ்தீன விடுதலை குறித்து அன்று இலங்கையில் 'முதல் குரல்' ஒலித்த தலைவர் **டாக்டர் ஜாயா** அவர்கள், பாகிஸ்தானில் இலங்கைத் தூதுவராகவும் இருந்தபொழுது, அன்றைய விடுதலை இயக்கத்தலைவர் **ஹாஜி அல் - அமீன் ஹுசைன்** (யாஸீர் அரஃபாத் பாட்டனார்) அவர்களுடனான நேர்முகம், கூடவே



அறிஞர் பெருமக்கள் **ஏ.எம்.ஏ.அஸீஸ், அபுல் ஹஸன் ஆலிம்** ஆகியோர்.

விடுதலை விரும்பியின் வீராவேச அறபுமொழிக் கருத்துக்களை அப்படியே அச்சொட்டாக ஆங்கிலத்தில் வழங்கியது மர்ஹூம் அபுல் ஹஸன் ஆலிம் அவர்களே!

ஒருகாலக் கண்டிமாநகரில், தைக்காப்பள்ளி தந்த **கண்டி ஆலிம்** மகனார் என்றும், பேரனார் என்றும் இருவிதத் தகவல்கள். என்னைப் பொறுத்தவரையில், அவர்களது வானொலி ரசிகன்! அன்றைய 'ரேடியோ சிலோன்' வழங்கிய 'திருக்குர்ஆன் விளக்கப் பிரசங்கங்கள்' இதை எழுதும் நேரத்திலும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

**அதியுன்னத சாதனை புரிந்த ஹாஃபிழ்கள்**

ஒரே ரக் - **அத்**தில்....

ஒரே ஸலாத்தில்...

சுமார் ஆறரை - ஏழுமணி மணிநேரத்திற்குள் அல்-குர்ஆன் முழுதையும் தொடர்ந்து ஓதி முடிப்பதற்கு அல்லாஹ்வின் அருள் வேண்டும்., அபாரத் திறமை வேண்டும்.

அது காயல்பட்டினத்து ஹாஃபிழ்களுக்கு அன்றும் இருந்தது. இன்றும் இருக்கிறது.

மஹ்ழரா அறபிக்கல்லூரியின் முன்னாள் முதல்வர், அல்ஹாஜ், அல்ஹாஃபிழ் **மௌலானா மௌலவி முஹியித்தீன்**

**தம்பி** ஆலிம் முஃப்தி, ஜாவியா அறபிக்கல்லூரி முன்னாள் முதல்வர், மர்ஹூம் அல்ஹாஜ் அல்ஹாஃபிழ் மௌலானா மௌலவி **ஷாஹுல் ஹமீது** ஆலிம் முஃப்தி, மர்ஹூம் அல்ஹாஜ் அல்ஹாஃபிழ் **அஜ்வாத்** ஆலிம் போன்றவர்களையும், இப்பொழுது குறிப்பிடத்தக்கவர்களாக, அல்ஹாஜ், அல்ஹாஃபிழ் **சேக் அப்துல் காதர்** ஆலிம் மிஸ்பாஹி, அல்ஹாஜ் அல்ஹாஃபிழ் **முஹம்மது நூஹ்** ஆலிம் முதலியோரையும் தமிழக முஸ்லிம் சமுதாயம் பார்த்துக் கேட்டு வியந்து பாராட்டியுள்ளது. இலங்கையும் கண்டு கேட்டு களிப்புற்றது. (பொற்கிழி எதுவும்? அறியேன்!)

19ஆம் 20 ஆம் நூற்றாண்டுப் பொழுதுகளில் மிகவும் பிரபலமாகத் திகழ்ந்த **'எம்.கே.ஒ.எம். மீராசாகிபு'** நிறுவனத்தின் முதுகெலும்பாக அல்ஹாஃபிஸ், அல்-ஆலிம் **மூனா கானா ஊனா முகம்மது மீராசாகிபு - ஒத்த முத்துஹாஜி'** அவர்கள், எல்லாம் வல்லவனின் கட்டளைப்படி இவ்வற்புத 'நிகழ்வைக் கொழும்பு சம்மாங்கோட்டுப் பள்ளியில் நிறைவேற்றினார்கள். அதுவொரு தற்செயலான சம்பவமாக அமைந்து போனது!

இலங்கை முஸ்லிம்கள் முதன்முறையாக அற்புதமான அனுபவத்தைப் பெற்றனர்.

மேலும், அன்னார் தமது ஒன்பதாவது வயதிலேயே அல் - குர்ஆனை மனப்பாடம் செய்திருந்தார்கள். இலங்கையில் இருந்தகாலத்தில் தள்ளாத வயதிலும் (சுமார் 90) இமாமத் செய்திருக்கிறார்கள்!

1933-ல், பாளையம், ஹாஃபிஸ் **அப்துல் ரஹீம்** ஆலிம் ஒரே சலாத்தில் நிறைவேற்றியுள்ளார்கள்.



1950-ல், காயல்பட்டினம் ஜாவியா அல்ஹாஃபிஸ் **முகம்மது அபூபக்கர் அஜ்வாத்** ஆலிம் அவர்கள் புறக்கோட்டை சம்மாங்கோட்டுப் பள்ளியிலும், மருதானை, ஸாஹிராப் பள்ளியிலும் சாதனை புரிந்தார்கள்.

இவர்களின் பின், கதீப் 'சாவன்னா' **சாகுல்ஹமீது** ஆலிம் அவர்கள். எந்த ஆண்டு என்பது கிடைக்கப் பெறவில்லை.

24.9.1976 நோன்பு 27லில், முதல் ஸலாத்தின் முதல் ரக்அத்திலேயே, முழுக்குர்ஆனையும் ஆறரைமணி நேரத்தில் நிறைவு செய்தார்கள், நீடூர் - நெய்வாசல் மிஸ்பாஹுல் ஹுதா தயாரிப்பான அல்ஹாஜ், அல்ஹாஃபிழ் **எஸ்.சி.எம். ஷேக் அப்துல் காதிர்** அவர்கள்!

மாத்தளை மாநகர் 'டவுன் பள்ளிவாச'லிலும் இப்படியொரு சாதனையைக் காயல்பட்டின ஹாஃபிஸ்களில் ஒருவரான **இஸ்மாயில் ஹாஜியார்** அவர்கள் நிகழ்த்தியுள்ளதாகத் தெரிகிறது. முதிய வயதிலும் கால்கடுக்கத் தொழுவித்தார்களாம்! ஆண்டு தெரிய முடியாமலுள்ளது.

**ஓர் அடிக்குறிப்பு:**

தற்சமயம் காயல்பட்டினத்தில் அல்-குர்ஆனை மனனம் செய்த ஹாஃபிழ்கள் சுமார் 700 பேர் வரை இருப்பதாக வரலாற்று ஆய்வாளர், கலாநிதி **ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் தகவல்.**

அனைத்துப் புகழும் இறைவனுக்கே!

## 'சீதன ஒழிப்பு ஆலிம்சா' அவர்கள்


மர்ஹூம்
எம்.கே.ஈ. அபுல்ஹஸன்

சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன் வானொலி முஸ்லிம் நிகழ்ச்சியில் வியாழன் பின்னேரம் - வெள்ளியிரவு ஒருவரது அல்குர்ஆன் விளக்கப் பிரசங்கத்திற்காகவும், அடுத்தநாள் சம்மாங்கோட்டுப் பள்ளியில் அன்னாரது குத்பாப் பிரசங்கத்திற்காகவும் ஒரு பெரும் ஆன்மிகக்கூட்டம் ஆவலுடன் எதிர்பார்த்த காலம் இருந்தது.

இன்றைக்கும் புற்றுநோயாகப் புரையோடிப் போன சீதனக் கொடுமைகளுக்குக் குரல் கொடுக்கும் ஒரேயொரு '**காயல்பட்டின ஆலிம்சா**'வாகவும் அடையாளம் கண்டு இலங்கை மக்கள் அதிசயித்தனர்.

அவர் சில நேரங்களில் வெளியிட்ட சிறு பிரசுரங்கள் மக்களைச் சிந்திக்கச் செய்தன.

அதற்காகச் '**சீதன ஒழிப்பு ஆலிம்சா**' என்றும் செல்லமாக அழைக்கப்பட்டார்.

இந்த ஆய்வுப் பணியில் நான் மூழ்கியிருந்த நேரத்தில் - அதுவும் அவர் ஓய்வுறக்கம் மேற்கொள்ளத் தயாராகிக் கடுமையான சுகயீனமுற்றுப் படுத்த படுக்கையாக இருந்த சமயத்தில் - திஹாரி அங்கவீனர் நிலையப்



பணிப்பாளர் சபை அங்கத்தவர், இதழாளர் (தினகரன்) ஜனாப் **எம்.எச்.எம். யாசீன் ஹனிஃபா** அவர்களுடன் நேர்முகம் காணச் சென்றபொழுது, வந்திருப்பது நான் என்பதை மட்டும் புரிந்தார். பேச நா எழவில்லை. கண்களில் கண்ணீர் தாரை தாரையாக. அந்தக் காட்சியை எப்படி மறப்பேனோ?

அக்காலங்களில் '**காஹிரி**' என்ற ஒரு வார்த்தை, கொழும்பு சம்மாங்கோட்டுப் பள்ளி பிரதம இமாம் **எம்.கே.ஈ. அபுல் ஹஸன்** ஆகிய இந்த 'ஆலிம்சா' அவர்களுக்கே பொருந்தும்.

1.7.1923ல் பிறந்த அவர்கள், தமது 20-வது வயதில் - 1943 -காயல்பட்டினத்திலிருந்து கொழும்புக்குக் காலடி எடுத்துவைத்த பொழுது முதலில் அறநெறி வாழ்க்கையை ஆரம்பிக்கவில்லை. ஆபரணத்தொழிலிலேயே பத்தாண்டுகள் ஈடுபட்டார்கள். ஆனால், பணத்தில் பற்றில்லாத ஒரு மனிதரானார். எளிமை, இனிமை இவையே சம்பாதித்த பொன்னும் பொருளும்.

அச்சமயத்தில் சம்மாங்கோட்டுப் பள்ளிவாசலுக்கும், அறநெறிப் பணிகளுக்கும் பொருத்தமான ஓர் இமாம் இல்லாத நிலையில் அந்த இடத்தை அலங்கரித்தார்கள். தொழிலைத் துறந்தார்கள்!

1953 - 1995 வரையில் 42 ஆண்டுகள் இறையில்லப் பணியாளரானார்கள். எங்களைப் போன்றவர்கள் இதயங்களில் நிறைந்தார்கள்.

**'மணிமொழி மவ்லானா'** எனப்பெயர்பெற்ற மர்ஹூம் ஹாஜி **எம்.ஜே. கலீலுர் ரஹ்மான்** அவர்கள் இவரது சமகாலத்தவர். அன்னார் மேமன், ஹனஃபிப் பள்ளிவாசல் பிரதம இமாமாக இருந்தார்கள்.

இருவரும் இணைந்து அஹ்மதிய்யா இயக்கத்திற்கு (காதியானிகள்) எதிராக இலங்கை முழுதிலும் எதிர்ப்புக்குரல் எழுப்பி, பிரச்சினைக்கு நேருக்கு நேர் நேர் முகங்கொடுத்தனர்.

முன் குறிப்பிட்டது போலச் சீதன ஒழிப்புப் பிரசாரப் பணிகளும் சேர்ந்து கொண்டன.

ஆடம்பரத் திருமணங்களுக்கும் அனாசாரக் கல்யாணங்களுக்கும் காலடி எடுத்து வைக்க விரும்பாத ஒரு சீர்திருத்த ஆலிமாகத் திகழ்ந்தார்கள்.

அந்த நாளிலேயே அவர் சிறந்ததொரு நூலாசிரியர். **'சீதனம் ஒரு பேய்'** - **'இத்தா அனுஷ்டிப்பது எப்படி'** - **'கைக்கூலி ஒழிப்பு'** - **'ஜனாஸா'** - **'ஹஜ்ஜுப் பெருநாளின் மகிமை'** - என ஐந்து நூல்கள். சிறு சிறு பிரசுரங்கள் பல.

தமது இறுதிக் காலத்தில் வாழத் தேர்ந்தெடுத்த இடம் திஹாரி பெரிய பள்ளிவாசல் வீதி இல்லத்தில்.

இந்தத் திஹாரி, கொழும்பு - கண்டிப் பிரதான பாதையில் **'இஸ்லாமிய அங்கவீனர் நிலையம்'** ஒன்றை, **ஹாஜி ஜிப்ரி ஹனிஃபா** அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாகவும் அதே சமயத்தில் சிரமத்துடனும் சேவா



மனப்பான்மையுடனும் நடத்தும் ஒரு நல்ல முஸ்லிம் கிராமம். சாஹிரி அவர்கள் ஓய்வுறக்கத்திற்கு இந்த ஊரே பொருத்தமெனக் கண்டது அதிசயமானது!

78-வது வயதில் 2001-2-20 செவ்வாய்க்கிழமை இரவு 7.30 மணியளவில் எம்மையெல்லாம் பிரிந்தார்கள்.

என்போன்றவர்களைத் தட்டிக் கொடுத்து, ஆக்கமும் ஊக்கமும் அளித்து, மற்றவர்களையும் அவ்வாறே செய்யும்படி தூண்டிய ஓர் அபூர்வமான ஆலிம் அவர்கள்.

அப்படியொருவரை இனியும் சந்திப்பேனா? சந்தேகம்.

### ஓர் அடிக்குறிப்பு:

கடைசிவரை நிழற்படம் எடுத்துக்கொள்ள விரும்பாதவர்கள் காஹிரி. கடவுச்சீட்டுக்கு (பாஸ்போர்ட்) மட்டும் ஒரு படத்தை பல ஆண்டுகளுக்கு முன் எடுத்த மனிதர்! அப்படத்தின் பிரதி அவரது சகலர், திஹாரி **எம்.ஜே. முக்தாருல் ஹம்சா** அவர்களிடமிருந்தது. அதனை பெற எனக்கு உறுதுணை புரிந்தவர் என் உடன்பிறவா சகோதரர் திஹாரி **எம்.எச்.எம். யாசின்** அவர்கள். இருவருக்கும் நன்றியறிதல்கள்.



2

*ஒவ்வொரு சமூகமும் தனது வரலாற்றுச் சுமையை முதுகில் சுமந்துகொண்டே எதிர்காலத்தை நோக்கி முன்னேறிச் செல்கின்றது.*

*- கவிஞர் அல்லாமா இக்பால்.*

# தெரிந்த பெயர்கள்... தெரியாத தகவல்கள்!

## மஹ்ழரா

காயல்பட்டினத்திற்கு வரும் சுற்றுலாப் பயணிகள் தவறாமல் பார்வையிடும் இடம் 'மஹ்ழரா' வாகும்.

காயல்பட்டினம் அம்பல மரைக்கார்தெருவில் அமைந்துள்ள இந்த எழில்மிக்க கட்டடம் அடித்தளத்திலிருந்து 42 அடி உயரத்திற்கு ஒரே குப்பாவாக அமைந்துள்ளது. இதன் நீளம் அகலம் முறையே 42 அடியே..! 126 அடி உள் சுற்றுலாவில் அமைந்துள்ள இந்த ஆன்மிகக் கட்டடத்தில் எத்தகைய தூண்களும் இல்லை



இதில் எழுப்பப்படும் சிறு ஒலியும் பெரிதாக சில வினாடிகள் எதிரொலித்துக்கொண்டேயிருக்கும்.

**ஹழரத் முஹ்யித்தீன் அப்துல்காதர்** அவர்களின் 15வது தலைமுறையில் தோன்றிய மேன்மைமிக்க **செய்யிது அப்துல்லாஹில் காதிரிய்யில் பக்தாதி மௌலானா** அவர்கள் ஹிஜ்ரி 1288 ஷவ்வால்பிறை 25ல் வக்ப் செய்த இடத்தில் அமைக்கப்பட்டுள்ள மஹ்ழரா காதிரிய்யா தரீகாவின் தலைமைக் கேந்திரமாக செயல்படுகிறது. மஹ்ழரத்துல் காதிரிய்யா அறபிக்கல்லூரி இங்கு நடத்தப்படுகிறது.

இங்கு அறிவுபெற்ற இலங்கை அறநெறியாளர்களோ அநேகர். இருவரது தகவலைத் தருகிறேன்.

தனது 10வது வயதில் தந்தையார் விருப்பப்படி 'பிக்ஹுப்புலி' ஹாபிஸ் **முஹம்மது அப்துல் காதிர்** ஆலிம், பேரறிஞர் **முஹியித்தீன் தம்பி** ஆலிம், **செய்யது ஆலிம் ஸாஹிப்** ஆகியவர்களிடமும், சாதுலியா ஷேக் **மிஸ்கீன் ஆலிம் ஸாஹிப்**, 'சாவன்னா' என்னும் சாஹுல் ஹமீத் ஆலிமிடமும் அவர் கால் மடித்திருந்து கற்றார்.

அவரே இன்று உலகளாவியரீதியில் புகழடைந்துள்ள கண்டி மௌலானா எனும் **எச். சலாஹுதீன்**, அகில இலங்கை சமாதான நீதவான் அவர்கள். அன்னார் மாணிக்க வணிகர் **அல்ஹாஜ் முஸ்லிம்** ஜே.பி. அவர்களது தந்தையார்.

கண்டி மௌலானாவைப் போன்ற இன்னொரு மாணவர் காலி, ஹாஜி, **எஸ்.எம்.எச். அப்துல் ஹபீழ்**

அவர்களாவர். 1918களில் மஹ்ழரா மாணவராக இருந்து பின்னர், **ஏ.எஸ். முஹம்மது அன் சன்ஸ்** என்ற பேரில் பிரபல பீங்கான் பாத்திரக்கடை நிறுவனராகத் திகழ்ந்தார். இப்பொழுது இலங்கைச் சபாநாயகராக அமர்ந்திருக்கும் அநுரா பண்டார நாயக்காவின் பள்ளித் தோழரும், அவரது பிரத்தியேகச் செயலாளருமான அல்ஹாஜ் **ஏ.எச்.எம். உனைஸ்** அவர்களது தந்தையாரே அப்துல் ஹஃபீஸ் ஹாஜி என்பது ஒரு முக்கியத் தகவல்.

## ஜாவியா

கண்ணியத்திற்குரிய **பெரிய ஷெய்குனா** என்ற அல்லாமா **ஷெய்கு முஹம்மது அபூபக்கர் மிஸ்கீன் ஸாகிப்** அவர்களால் ஹிஜ்ரி 1285ல் காயல்பட்டினத்தில் **ஜாவியத்துல் பாஸிய்யதுஷ் ஷாதுலிய்யா** ஸ்தாபனம் உருவாக்கப்பட்டது. ஷாதுலிய்யா தரீக்காவின் கேந்திரமான இங்கு அறபிக்கல்லூரி நடத்தப்படுகிறது. கணிசமான இலங்கையர் தங்கள் அறிவுப்பசியைத் தீர்த்துக் கொண்டுள்ளனர். இங்கே படித்து முடித்தவர்களுக்கு "**ஃபாஸி**" பட்டம் வழங்கப்படுகிறது. திருமணம், சுன்னத், புதுமனை புகுதல், கந்தூரி போன்றவைகளில் நடத்தப்படும் அனாசாரப் பழக்க வழக்கங்களை மாற்றி பெண்களிடையே சீர்திருத்தங்களைக் கொண்டுவந்ததும் ஜாவியாவே!



## கே.எம்.டி.

காயல்பட்டினம் மருத்துவ அறக்கட்டளை (Kayalpatnam Medical Trust - KMT) பெருமைக்குரிய ஒரு பொது நிறுவனத்தின் பெயரைத் தாங்கி நிற்கும் மூன்று எழுத்துக்கள்!

காயல்பட்டினத்திற்கு மட்டுமல்ல, கண்டி அக்குறணையிலும் பிரசித்தம்!

காயிதே மில்லத் நகரில் ஒரு கோடி ரூபாய்க்கு மேலான செலவில் அற்புதமான தோற்றத்தோடு காட்சி தருகிறது அந்த அறக்கட்டளையின் மருத்துவமனை!

கம்பீரமான தோற்றத்துடன் அமைதியே உருவாக அமைந்துள்ள அந்த மருத்துவமனைக்கு எனது பேனா, கீழக்கரைத் தொழில் அதிபர் **கே.எம்.எஸ். சாலிஹ்** ஹாஜியார் அவர்களுடன் நுழைந்தது இன்றும் பசுமை! அதற்குப் பேருதவி **பாஸி** ஹாஜியார். (எஸ்.எம். மிஸ்கின் சாகிபு)

ஏழைப் பணக்காரர் என்ற பாகுபாடின்றி அனைவருக்கும் - குறிப்பாகப் பெண்மணிகளுக்கு சேவையாற்றிடத் தோன்றியது இந்த கே.எம்.டி.

அதற்குக் கரு: 1983-ல் புஹாரி ஷரீபு நிறைவு நாளில், வங்கக் கடலோரக் கரையில் **எஸ்.டீ. புஹாரி** ஹாஜியார் - **டி.ஏ.எஸ். முகம்மது அபூபக்கர்** ஆகியோரால் ஏற்பட்டது.

பின்னர் அதன் உரு: ஹாஜிகள் எஸ்.எம்.எம். **சதக்கத்துல்லாஹ்,** மர்ஹூம் **எம்.எஸ்.எஸ். இபுராஹிம்** (ஏவிஎஸ்) முதலியோர்.

ஆனால் அந்தத் திட்டத்தை நிறைவேற்ற காயல்வாசிகள் எவரும் முன்வராத நேரத்தில் அதற்குச் செயலாக்கம் கொடுத்த பெருமை வள்ளல் பெருந்தகை அல்ஹாஜ் **எஸ். அக்பர்ஷா** அவர்களையே சாரும்.

மேற்கண்ட நால்வரும் சென்னை, சைனா பஜாரில் **எல்.கே.எஸ். ஜுவல்லர்ஸ்** ஹாஜி எஸ். அக்பர்ஷா அவர்களைச் சந்தித்து இத்திட்டம் பற்றிச் சொன்னபோது, அதனை மனமுவந்து வரவேற்ற அந்த மனித நேயர், அதன் தொடர்பான செலவினங்களுக்கு ரூ. 10,000 நன்கொடை வழங்கியதோடு, நிலம் பதிவு செய்வதற்கு ஒரு பங்குக்கு ரூ. 15,000 வீதம் எல்.கே.எஸ். ஜுவல்லர்ஸின் ஏழு பங்குதாரர் பேரிலும் ஓர் லட்சத்து ஐயாயிரம் முதன் முதலாக வழங்கி ஊக்கப்படுத்தினார்.

அதைத் தொடர்ந்தே காயல் தனவந்தர்கள் தங்கள் பங்குத் தொகைகளை வழங்க முன்வந்தார்கள்.

26.8.85ல் புனித அரஃபா நாளில் நண்பகலுக்குச் சமீபமான 11 மணியளவில் நகரின் பெருமைக்குரிய பிரமுகர் ஆலி ஜனாப் **எல்.கே. ஷெய்கு முஹம்மது,** அல்ஹாஜ் வாவு எஸ். மொகுதூம் முஹம்மது இருவரும் அடிக்கல் நாட்டினார்கள்.

4.3.90 ஞாயிறன்று, அதே 11 மணியளவில், அன்றைய சிதம்பரனார் மாவட்ட ஆட்சித் தலைவர் திருமிகு எம்.



**கனகசபாபதி** ஐ.ஏ.எஸ். தலைமையில் அன்றையத் தமிழக அரசின் இந்து அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு **கே.பி. கந்தசாமி** மருத்துவமனையை திறந்து வைத்தார்கள்.

மறைந்த பாரதப் பிரதமர் **ராஜீவ்காந்தியும்** விஜயம் செய்து மருத்துவர், இல்லங்களைத் திறந்து வைத்துள்ளார்.

இப்பொழுது இவற்றைப் படிக்கும்பொழுது 11 ஆண்டுகள் மாயமாய் மறைந்துள்ளன.

இது உருவானதால் ஒரு முக்கியமான பலனை இலங்கைக் கண்டிப்பகுதி அக்குறணைவாழ் முஸ்லிம் சமூகம் பெற்றது.

என்ன பலன் என்பதை அறிந்தால் அதிசயப்படுவீர்கள்.

கண்டிப் பகுதியில் உயர்கல்வி சித்தியடைந்த பன்னிரு முஸ்லிம் கன்னியர் கே.எம்.டி.க்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கே அவர்களை மருத்துவத் தாதிகளாகப் (நர்ஸ்கள்) பயிற்றும் பயிற்சி வழங்கப்பட்டது.

இப்பொழுது அவர்கள் பயிற்றப்பட்ட தாதிகளாக அக்குறணை மருத்துவமனை ஒன்றில் (I.S.S.I. Hospital) சேவை. இப்படியொரு அபூர்வமான நிகழ்வுக்கு ஆலோசனை வழங்கியவர் ஹாஃபிஸ் மௌலானா, **பீ.எம்.ஏ. மிஸ்கீன்** அவர்களாகும். அதனைச் செயலில் காட்டியவர்கள் சிங்கர் **எச்.எம்.எம். காலித்** மௌலவி அவர்களும் ஃபாஸி ஹாஜியும்.

ஒரு நாட்டையும் ஒரு நகரத்தையும் உயர்ந்த இலட்சியங்களால் இணைத்துவிட்ட இறைவனுக்கே எல்லாப் புகழும்!

நான் அங்கிருந்து விடைபெறும் பொழுது மக்ரிப் பாங்கொலி கேட்டது. தம் சகோதரர்களின் ஆதரவோடு பிளாக்கட்டிக் கொடுத்துள்ள ஹாஜி **அக்பர்ஷா** அவர்கள் பல லட்ச ரூபாய் செலவில் அழகே உருவான பள்ளிவாசல் ஒன்றையும் கட்டியுள்ளது கவனத்துக்கு வந்து நுழைந்தேன். இறைவனை வணங்கி விடைபெற்றுக் கொண்டேன்.

*ஒரு முக்கிய அடிக்குறிப்பு - படிக்கத் தவறக்கூடாது:*

- **50 ஆயிரம் முஸ்லிம் ஜனத்தொகைக் கொண்ட காயல்பட்டினத்தில் இப்படியொரு அறக்கட்டளை ஆஸ்பத்திரி அமைக்கப்பட்டும்கூட ஆண்களும் பெண்களும் திருச்செந்தூர், தூத்துக்குடி, திருநெல்வேலி, ஆத்தூர், நாகர்கோவில் முதலான ஊர்களுக்குப் பெரும் பணம் செலவு செய்து பல சிரமங்களுடன் நோயாளிகளையும் சுமந்துகொண்டு ஏன் ஓடுகிறார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.**

- **காலடியில் கிடக்கும் வைரத்தை விட்டுவிட்டு தூரத்தில் கிடக்கும் கல்லை நோக்கிக் காயல்பட்டினவாசிகள் ஓடுவது ஏன்? ஏன்?**

- **அல்லாஹ்வின் உதவியால் இப்போதைய நிர்வாகத்தின் (தலைவர் : ஹாஜி எம்.எம்.உவைஸ்) அப்பழுக்கற்ற**



**சேவையால் கே.எம்.டி. தலைநிமிர்ந்து நிற்கிறது என்பதை நேரில் உணர்ந்துகொண்டேன். இளவயது நல்ல திறமைசாலிகள், நிர்வாகிகள் வசதியான குடும்பங்களில் இருக்கிறார்கள். இப்போதே பயிற்சி கொடுத்து இவர்களது ஆர்வத்தை உற்சாகப்படுத்தி தயார் செய்தால் கே.எம்.டி. மருத்துவமனை எதிர்காலத்தில் தூத்துக்குடி மாவட்ட அப்பலோவாக மாறலாம்.**

## முருகனை மீட்டனர்!

கி.பி. 1529 முதல் 1736 வரை தென்பாண்டி நாடு நாயக்க மன்னர்களின் நிர்வாகத்திலேயே இருந்தது. அச்சமயத்தில் போர்ச்சுக்கீசியர்களும் டச்சுக்காரர்களும் தமிழ்நாட்டில் வியாபாரத் தலங்களை அமைந்திருந்தனர். இரு ஐரோப்பிய நாட்டவரும் கிறிஸ்தவர்களே என்றாலும் போர்ச்சுக்கீசியர்கள் கத்தோலிக்கர்கள்; டச்சுக்காரர்கள் புரட்டஸ்டண்ட் பிரிவினர்!

கி.பி. 1645ஆம் ஆண்டு டச்சுக்காரர்கள் காயல்பட்டினத்தில் தளம் அமைத்து தொழில் செய்து வந்தனர். அவர்களைப் போர்ச்சுக்கீசியர்களின் தூண்டுதலினால் திருமலை நாயக்க மன்னர் கி.பி. 1648ல் இலங்கைக்கு விரட்டினார்.

இதற்குப் பழிதீர்க்கும் வகையில் கி.பி. 1649 பிப்ரவரியில் 436 டச்சுக்காரர்கள் 180 இலங்கைச் சிங்களவரோடு காயல்பட்டினம் தெற்கில் வந்திறங்கி,

தமிழ்நாட்டின் பிரசித்தி பெற்ற திருச்செந்தூர் திருமுருகன் ஆலயத்தை ஆக்கிரமித்தனர். திருமலை நாயக்கர் எவ்வளவோ வேண்டியும் ஆலயத்தை விட்டகல டச்சுக்காரர்கள் மறுத்தனர். நாயக்கர் பட்டாளத்திற்கும் டச்சுக்காரர்களுக்கும் சண்டை மூண்டது. இதில் நாயக்கர் பட்டாளத்தில் 300 பேர் இறந்தனர்.

பின்னர் 1649 மார்ச் 1ல் டச்சுக்காரர்கள் இலங்கைக்குப் புறப்படும்போது நாயக்கர் நட்ட ஈடு தரவேண்டும் எனக்கூறி, இக்கோயிலின் மூல விக்ரஹம் உட்பட அனைத்துச் சிலைகளையும் தங்களுடன் எடுத்துச் சென்றுவிட்டனர். இதனால் கி.பி. 1649 முதல் 1651ம் ஆண்டு வரை இக்கோவிலில் நாள் வழிபாடும் திருவிழாக்களும் நடைபெறவில்லை.

கி.பி. 1650 பிப்ரவரியில் டச்சுக்காரர்களிடமிருந்து இந்தச் சிலைகளை மீட்டுத்தர **வடமலையப்ப பிள்ளையன்** காயல்பட்டின முஸ்லிம்களை நாடினார். இதனால் காயல்பட்டினத்தின் **நான்கு முஸ்லிம் பிரமுகர்கள்** இலங்கையின் **'காலி'**க்கு புறப்பட்டுச்சென்று, டச்சுக்காரர்களுடன் பேசி மூல விக்ரகங்களைப் பத்திரமாக மீட்டு கி.பி. 1651 ஜனவரி கடைசியில் திருச்செந்தூரில் சேர்ப்பித்தனர். இதன்பின் திருப்பணிகள் செய்யப்பட்டு 1653ல் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

இந்த உண்மையை **"திருச்செந்தூர் முருகன் கோவில் வரலாறு"** என்ற முனைவர் பட்டத்திற்கான ஆய்வு தெளிவாக குறிப்பிடுகிறது.

- தகவல் தொகுப்பு : **காயல் மகபூப்.**



## குதுபிய்யா மஜ்லிஸ்




*தெகிவளையில் குதுபிய்யா மஜ்லிஸ் கட்டடத் தோற்றம்*

எனது இந்த நூலின் ஆரம்பப்பக்கங்களை (முதலாம் அத்தியாயத்தை) இலங்கை - காயல்பட்டினம் இதயக்கனிகள்' என மகுடமிட்டு மாதிஹுர்ரசூல் 'அப்பா' அவர்களை முன்னிலைப்படுத்தினேன்.

இங்கே, அதே ஸதக்கத்துல்லா அப்பா (ரஹ்) அவர்களது வழித்தோன்றல் அஷ் - ஷெய்கு அல்ஹாஜ்

**எம்.இஸட். ஜலீல் முகையத்தீன்** அவர்களை அழைப்பதில் பெருமையும் பெருமகிழ்வும்.

'அப்பா' அவர்கள் எந்த இல்லத்தில் பிறந்தார்களோ, மாப்பிள்ளை லெப்பை (ஒலி) அவர்களது பிறப்பு எங்கு நடந்ததோ அந்த வீடே இவர்கள் வசிப்பிடமாகவும் அமைந்து அமைதிக்கொரு இடமாகவும், அருள் மாரிக்கொரு இல்லமாகவும் திகழ்கிறது. மஹ்தூம் தெருவில் உள்ள அது துணைவியாருக்குக் கிடைத்ததாகும்.

என் எழுத்து முயற்சிகளுக்கு எப்பொழுதும் ஆக்கமும் ஊக்கமும் கொடுப்பவர்கள். இந்நூலும் விதிவிலக்கல்ல.

சமீபகாலங்களில் இலங்கை முஸ்லிம்களின் ஆன்மிக முன்னேற்றத்திற்காக, **"அஸ்-ஸெய்யிது அப்துஷ்ஷகூர் அல்-ஜீலானி (ரலி) குதுபிய்யா மஜ்லிஸ்"** என்ற பெயரில் ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, **"குதுபிய்யாத் திக்று"** வாரந்தோறும் கொழும்பு - தெஹிவளையில் அவர்களால் நடத்தப்பட்டு வருகிறது. குறிப்பிட்ட சில ஒலியுல்லாக்களின் நினைவுதின விழாக்களும் நிகழ்வுறுகின்றன. இம்மஜ்லிஸின் தலைமையகம், காயல்பட்டினம் புதுக்கடைத்தெரு 1ம் இலக்கத்தில் இயங்குகிறது.

ஒருமுறை அவர்களது சபையில் பங்குபற்றும் பாக்கியம் கிடைத்தால் பலமுறை சமூகமளிக்கும் ஆசை வரும் - நிச்சயமாக!

மேற்படியார் அவர்களது தந்தையார் அல்ஹாபிஸ் **முஹம்மது ஜுபைர்** அவர்கள் கண்டியில், 'ஜுஹரா ஜுவல்லரி'யை இயக்கிக் கொண்டிருந்த காலந்தொட்டு இவர்கள் அதே இளமை., இனிமை.., எளிமை!



அல்லாஹ்வின் அருட்கிருபையால் அவ்வாறே என்றென்றும் இருந்திட இருகரமேந்துவோமாக.

**ஓர் அடிக்குறிப்பு :**

இப்பெருந்தகையின் பாட்டனார் **முகம்மது முஹியுத்தீன் தம்பி** அவர்கள் ஓய்வுறக்கம் கொண்டிருப்பது கண்டி - மஹியாவை அடக்கத்தலத்திலாகும்.



## பங்கசாலா

12ஆம் 13ஆம் நூற்றாண்டுகளிலும் அதற்கு பின்னரும் இந்திய இலங்கைப் பட்டினங்கள் முஸ்லிம்களின் கட்டுப் பாட்டுக்குள்ளேயே இருந்தன.

கள்ளிக்கோட்டை (காலிக்கட்) பகுதிகளிலே துறைமுகங்களுக்கு அருகில் **'பங்கசாலா'** என அழைக்கப்பட்ட பண்டகசாலைகளை அமைத்துக் கொண்டு, அவற்றைச் சுற்றிவர மிக நெருக்கமாக தமது இல்லங்களை அமைத்துக் கொண்டனர்.

கொழும்பிலும், துறைமுகத்திற்கு அருகில் 'பங்கசாலாக்கள்' இருந்தன. அது அமைந்திருந்த தெருவுக்கு 'பேங்சோல் வீதி' என்றே பெயர் உண்டானது. இப்பொழுது அதே பெயரில்!

- தகவல் : **ஏ.ஏ.எம். புவாஜி** (மாத்தளை).

## மாணிக்கம், தங்கம் மட்டுமல்ல....

காயல்பட்டினவாசிகளுக்கு இலங்கையுடன் பண்டைக்காலத்தில் குதிரை வாணிகம். அப்புறம், கறுவா, புகையிலை, பாக்கு, தேங்காய், தெங்குப் பொருட்கள் உப்பு, முத்து போன்ற வாணிகங்கள் இருந்தன. பின்னர் மாணிக்கக்கற்களிலும், தங்கநகை வியாபாரத்திலும் பொருள் குவித்தனர்.

## குதிரை வணிகர் சையது ஜமாலுத்தீன்

ஹாஷிம் குடும்பத்தைச் சேர்ந்த அறபு முஸ்லிம்களின் தலைவர் **சையிது ஜமாலுத்தீன்** ஆரம்பகாலத்தில் ஒரு குதிரை வணிகரே! அவர் பாண்டிநாட்டுக்கு அறபுநாடுகளிலிருந்து கொண்டு வந்த குதிரைகள் ஆயிரக்கணக்கில். வருடம் ஒன்றுக்கு 11,400 குதிரைகள் வழங்க அவருக்கும் மன்னன் சுந்தரபாண்டிய தேவருக்கும் ஒப்பந்தம் இருந்தது.

## யார் இந்தப் பிரபு? யார் இந்த நெய்னா?

பெயருக்கு முன் **'பிரபு'** என்றும், பெயருக்குப்பின் **'நயினார்'** என்றும் அடைமொழி சேர்த்துக் கொள்ளும் காயல்பட்டினவாசிகள் காரணத்தோடு தான் அப்படிச் செய்கிறார்கள்.

சுல்தான் சையிது ஜமாலுத்தீனையும், அவர்களது வழித்தோன்றல்களையும், தமிழர்கள் பிரபுக்கள் என்றும் நயினார்கள் என்றும் அழைத்தனர். அந்த வழக்கமே இன்றும்!



## இலங்கைச் சிவப்புக்கல்!

கி.மு. முதலாம் நூற்றாண்டிலேயே ஸ்பெயினில் இலங்கையின் சிவப்பு மாணிக்கக்கல் ஒன்று காணப்பட்டிருக்கிறது. அதனை அறபி ஒருவரே விற்பனைக்குக் கொண்டு சென்றிருந்தாராம்!

## ஈழத்தின் காயல்

அக்காலங்களில் **'ஈழத்தின் காயல்'** என ஒரு கிழக்கிலங்கை ஊர் அழைக்கப்பட்டது. அது, மட்டக்களப்புக்கு அண்மிய **காத்தான்குடி**!

## ஒற்றுமையான ஊர்கள்!

கர்நாடகா - பெங்களூர்ப் பக்கம் ஒரு **'ஹஸன்'** உண்டு. இலங்கை - யாழ்ப்பாணத்தில் **'உஸன்'**!

தமிழ்நாட்டில் ஒரு **'பெருவளை'**! இலங்கையில் **'பேருவளை'** (வேர்விளை).

## செய்யித் அப்துல் வாஹித் மவ்லானா

1908ல் கிழக்கிலங்கை, பொத்துவிலில் பிறந்த இவர்கள், பெரும் ஆலிமாகவும், யூனானி வைத்தியராகவும், மாணிக்க வியாபாரியாகவும் திகழ்ந்தார். நாகூர், காயல்பட்டினம் நகரங்களில் ஆன்மிகப்பயிற்சி பெற்றார். கதிர்காமம் பள்ளிவாசலில் பத்தாண்டுகள் இறைதியானத்தில் கழித்தவர். பல பள்ளிவாசல்களை நிறுவியவர். சாய்ந்தமருது அக்பர் பள்ளியில் ஓய்வுறக்கம்.

## சாவகச்சேரி முருங்கைக்காய்!

இயற்கையாகவே இலங்கை வடபகுதி முருங்கைக்காய்களுக்கு ஒரு தனிச்சுவை. எல்.கே. குடும்பத்து ஹாஜி, மர்ஹூம் **எல்.கே. ஷம்சுதீன்** அவர்கள் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த காலத்தில், சாவகச்சேரி முருங்கைக்காய்கள் மீது 'காதல்' கொண்டார்! அவற்றைத் தமது ஊர்மக்களுக்கு அறிமுகம் செய்தார்! எவ்வளவு தொகை, எப்படிக் கொண்டு போனாரோ?

## சேவைக்கு உவைஸ் ஹாஜி!



பிறருக்குச் சேவை செய்யவென்றே சிலர் பிறப்பார்கள். சிறப்பார்கள். அவர்களுள் ஒருவர் ஹாஜி **எம்.எம். உவைஸ்,** இப்பொழுதும் காயல்பட்டின மருத்துவ அறக்கட்டளை மருத்துவ மனையின் (கேஎம்டி) முக்கியத்தூண்! அதன் முன்னையச் செயலாளர் இப்பொழுது தலைவர்.

இலங்கையிலும் பலகாலம் சேவையாளராகத் இருந்தார்கள்.

ஸாஹிராக் கல்லூரியின் டி.பீ. ஜாயா காலத்து மாணவர். அதன் வளர்ச்சிக்காகப் பெரும் பங்காற்றினார்கள்.

ஒருபொழுது கிழக்கிலங்கை புயலின் கொடுமையால் பரிதவித்தது. அச்சமயம் காயல்பட்டினவாசிகள் சார்பாக நிவாரணநிதி திரட்டி புயலுக்கு மத்தியில் கொண்டு சென்றவர் ஹாஜி உவைஸ். அவருடன் இணைந்தவர் மர்ஹூம் **எம்.ஏ. செய்யிது** ஹாஜியார்.



அவர்களது வாழ்நாளெல்லாம் சேவை புரிவதிலேயே கழிந்து கொண்டிருக்கிறது. நீடித்த நல்வாழ்வுக்கு இறைஞ்சுவோம்.

## கால்ட்வெல்லுக்குச் சிலை!

திருநெல்வேலிச் சீமைப் பேராயர் **கால்ட்வெல்** அவர்கள் தமிழ் மூதறிஞர். இவர்தம் ஆய்வுகளினால் காயல்பட்டின வரலாறு மேன்மைபெற்றது. சென்னை செல்வோர் அங்கே கடற்கரையில் இவரது நினைவுக்கு சிலையைக் காண முடியும்.

## பி.பி.ஸி. (சிவபாதசுந்தரம்) செய்தி!

பிரபல எழுத்தாளரும், வானொலியாளருமான பி.பி.ஸி. **'தமிழோசை'** பிதா மகன் காலஞ்சென்ற **எஸ். சிவபாத சுந்தரம்** அவர்கள், 1965 **'கல்கி'** தீபாவளி மலரில் எழுதிய **'தொண்டமண்டலமும் யாழ்ப்பாணமும்'** கட்டுரையில், காயல்பட்டினத்திலிருந்து சில ஹிந்துக்கள் யாழ்ப்பாணத்தில் குடிபுகுந்ததாகச் சில சரித்திரக் குறிப்புக்களில் காணப்படுவதாக எடுத்தாண்டிருக்கிறார்!

## ஸரந்தீபுக்கு எதிரில்!

**அப்துல் ரஸ்ஸாக்** என்பார் அவரது **'குவார்டர் மீர்ஸ்'** என்ற ஆக்கத்தில், 'ஸரந்தீபுக்கு (இலங்கை) எதிரில் அமைந்த இடம் காயல்' எனக்குறிப்பிட்டுள்ளார்!

## மட்டக்களப்பிலிருந்து தேங்காய்!

காயல்பட்டினவாசிகளுக்கு மட்டக்களப்பிலிருந்து தேங்காய்கள் உருண்டோடின!

நல்ல பெரிய தேங்காய்கள் வத்தைகள் மூலமாக தூத்துக்குடி கடல்மார்க்கமாகப் போய்ச் சேர்ந்த ஒரு காலமும் இருந்தது!

## கொற்கை எங்கே?

இது ஒரு பண்டைத் துறைமுகம்.

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுக்கழகம் (State Department of Archaelogy, Tamilnadu), 1968ல் ஆரம்பித்து நிறைவு செய்த அகழ்வராய்வுகளைக் கொண்டு எடுத்த முடிவுகளை, டாக்டர் கே.வி. ராமன் என்பார் அதிகாரபூர்வ அறிக்கையாக தமிழக அரசுக்குச் சமர்ப்பித்து, 'கொற்கை எங்கே?' என்பதற்கு விடையளித்தார்!

அதன்படி, ''திருநெல்வேலி மண்ணில், தாமிரபரணி ஆற்று முகத்துவாரத்தில் இருந்ததே கொற்கை!''

## சந்தா சாயபு

யாழ்ப்பாண ராஜதானியை விவரிக்கும் ''**யாழ்ப்பாண வைபவ மாலை**'' என்றொரு நூல் 1879-ல் வெளியானது. **மயில்வாகனப் புலவர்** ஆய்வு. அதிலே பின் காணப்படும் ஒரு சுவையான தகவல் :



★ அக்காலத்தில் **சந்தா சாய்பு** என்பவரால் முகம்மது மார்க்கத்தவர்களாக்கப்பட்ட தமிழ் வமிசத்தவர்களான சில சோணகக் குடிகள் காயல்பட்டினம் முதலிய இடங்களிலிருந்து வந்து தென்மிருசுவில் என்னும் ஊரிலே குடியிருந்து, சாவகச்சேரி, கொடிகாமம், எழுதுமட்டுவாள், முகாவில் என்னுமிடங்களில் உள்ள சந்தைகளில் வியாபாரம் பண்ணிக்கொண்டு தாங்களிருந்த தென் மிருசுவிலுக்கு '**உசன்**' என்று பேருமிட்டார்கள்.

- இதே தகவலை **ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையின்** '**யாழ்ப்பாணச் சரித்திரத்**'திலும் (1933), எஸ். கார்த்திகேசுவின் 'A Hand Book to Jaffna Peninsula' (1905)விலும் பார்க்கிறோம். (ஆனால் 'முஹம்மது மார்க்கம்' என இவர்கள் விளித்திருப்பது அறியாமை.)

மேலும், '**சந்தா சாய்பு**' என்ற பெயர் இன்னொரு இடத்திலும் காணப்படுவது பலர் அறியாதது.

புலவர் **செ. இராசு** எம்.ஏ., (தஞ்சைக்காரர்) இசுலாமியத் தமிழகக் கல்வெட்டுக்களிலும் செப்பேடு களிலும் மிகுந்த ஆர்வத்துடன் ஆய்வுகள் செய்து பல கண்டுபிடிப்புகளைத் தந்தவர்.

இவரது ஒரு கட்டுரையில் 'சந்தா சாயபுவால் சக ஆண்டு 1643 (கி.பி. 1722) சோபகிருது சித்திரை 14ஆம் நாள் சிக்கிக்குளம் கைலாசநாதர் கோயிலுக்கு மானியம் அளிக்கப்பட்டது' என்ற குறிப்பு உள்ளது. (ஏ.ஆர். 268/ 1941).

இரு சாயபுகளும் ஒருவரா இருவரா என்பது கேள்விக்குறி. எதிர்காலத்தில் பதில் கிடைக்கலாம்.

## அல் - குர்ஆன் சட்டதிட்டங்கள் டச்சில்!

இலங்கையில் டச்சு ஆளுநர் ஃபால்க் இருந்த காலம் (1765-85). அப்பொழுது அவனது பிரதிநிதியாக யாழ்ப்பாணத்தில் இருந்த கோட்டைத் தளபதி, அல்- குர்ஆன் சட்டதிட்டங்களையும், முஸ்லிம் பண்பாட்டுச் கோலங்களையும் அறிவதில் ஆர்வப்பட்டான். அறபு மூலத்தைத் தமிழ்ப்படுத்தி, பின் டச்சுக்கு மொழிப்பெயர்ப்பானது, இதில், யாழ், முஸ்லிம்களைப் பிரதிநிதித்துவப்படுத்திய தலைவர்கள் பலரது உதவியை நாடிப் பெற்றான். அல் - குர்ஆனின் விதிமுறைகள், சுமார் 250 பட்டியலிட்டு வழங்கப்பட்டன.

இதனைச் சிறப்பாகச் செய்திட்டவர்கள், காயல்பட்டினம் - கீழக்கரை வாசிகளாகவே இருக்க முடியும் என்பது ஒரு கணிப்பு. கொழும்பு, அருங்காட்சியகத்தில் உள்ள 1/1343 - டிச. 15, 1794 டச்சுப் பத்திரத்தில் காணப்படும் பெயர்களில் **மம்மலி நெய்னார் தம்பி மரக்காயர், முகம்மது அஸ்ஃபு மரக்காயர், நெய்னாபுள்ள மரக்காயர், சுல்தான் சிக்கந்தர் மரக்காயர்** எனப் பதியப்பட்டுள்ளன.

## நா வளர்ச்சி மன்றம்

இப்பொழுது சிறப்பாகச் செயல்பட்டு வரும், **'காயிதே மில்லத் இளைஞர் சமூக அமைப்பு'** தனது சேவைகளுலொன்றாக, 'சர் அல்லாமா இக்பால் நா வளர்ச்சிப் பாசறை'யை அறிமுகப்படுத்தியது. அது, பல மேடைப் பேச்சாளர்களை உருவாக்கியது.



ஆனால், முன்னோடியாக, 1950களில், கொழும்பு, நோரிஸ் வீதி (இப்பொழுது - ஒல்காட் மாவத்தை) மாடிக் கட்டடமொன்றில் ஒரு **'நா வளர்ச்சி மன்றம்'** கொழும்புவாழ் தமிழபிமானிகளை நல்ல மேடைப் பேச்சாளர்களாகத் தயாரித்துக் கொண்டிருந்தது.

அம் மன்றத்தின் முதுகெலும்பாய், அமைப் பாளராகக் **காயல் கே.வி. அஹ்மது தாஹிர்** (மர்ஹூம்) செயல்பட்டார்கள். அவருக்கு உறுதுணை எனது அன்பர் ஜனாப் **டி.எம்.ஆர். ஹஸன்!** இவர் இப்பொழுது காயல்பட்டினத்தில் இருந்தவாறு இதைப் படிப்பார் என எதிர்பார்ப்பு!

## புஹாரி ஷரீபுக்கு 'சிலோன் வசூல்'!

**ஸஹீஹுல் புஹாரி** - ரஷ்யாவின் புகாரா தந்த பேரறிஞர் **இமாம் முஹம்மதிப்னு இஸ்மாயில் புகாரி** (ரலி) அவர்கள் பதினாறு ஆண்டுகள் முயற்சிகளின் பின் யாத்தளித்தது.

இக்கிரந்தத்திற்கான ஆரம்ப மஜ்லிஸ்கள் முதன்முதலில் இலங்கையிலேயே!

அக்காலத்தில் இரு காயல்பட்டின ஆலிம்கள் (கண்டி ஆலிம் நா.கு. **முஹம்மது இப்ராஹிம்** - அல்லாமா நஹ்வி **மு.க. செய்யிது அஹ்மது** ஆலிம் - மஜ்லிஸின் அருமை பெருமையால் ஈர்க்கப்பட்டனர்.

தங்கள் ஊரிலும் ஆரம்பித்திட எண்ணி, வேறுசில ஆலிம்களது அனுசரணையுடன் கல்விக்கடல் ஹழரத் **பெரிய முத்துவாப்பா (ரலி)** அவர்களது தர்காவில் தொடக்கினர். அப்பொழுது ஆண்டு 1926.

21 வருடங்களுக்குப் பின்னால் - 1947 - இலங்கையில் ஓர் அதிசயம்!

புஹாரி ஷரீஃப் சிறப்பாக நடந்திட, **''சிலோன் வசூல்''** என ஒன்று இங்கிருந்து சென்றது!

ரூபாயாக 4766 - 2 அணா - 4 பைசா நன்கொடை வசூல்!

அதிகமான தொகை மட்டக்களப்புப் பிராந்தியத்திலேயே சேகரிக்கப்பட்டது. (ரூ. 1863 - 11- 10) அடுத்த கூடிய தொகை கொழும்பில். ரூ. 1184 - 6 - 6.

அதேநேரத்தில் முழு இந்திய வசூலும் ரூ. 1200 - 7-00 மட்டுமே! உள்ளூர் (காயல்பட்டினம்) வசூல் தனி. (ரூ. 687-9-0).

- இந்த விவரங்களனைத்தும், 'காயல்பட்டினம் மஜ்லிஸுல் புஹாரி ஷரீஃப் சபை'க் கந்தூரிக் கமிட்டியாரின் 1947ஆம் ஆண்டு ஐந்தொகைக் கணக்கில் காண முடிகிறது.

ஐந்தொகையை இலங்கையில் இன்னும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறார், ஒரு பிரபல இலக்கியவாதி - **கல்விமான்** - ஓய்வுபெற்ற அரசு அதிகாரி சாய்ந்த மருதூர் **ஹாஜி எஸ்.எச்.எம். ஜெமீல்** அவர்கள். என் எழுத்துக்களைத்



தமது 20வது வயதிலேயே அடையாளம் கண்டவர். அன்னாரது தகவலுக்கு நன்றி.

## 'Moor' - மூர் ?

போர்த்துக்கேயர்கள் தமிழ்நாட்டுக் கரைகளில் சுமார் 74 ஆண்டுகளும் (1501 - 1575), தென்புல இலங்கைப் பகுதிகளில் 151 ஆண்டுகளும், (1505-1656) வடபுல யாழ்குடா நாட்டில் 37 ஆண்டுகளும் (1621 -1658) அட்டையாக ஒட்டி இயற்கை வளங்களை - உற்பத்திகளை உறிஞ்சினார்கள். ஆன்மிக உணர்வுகளுக்கு அணையிட்டார்கள். பண்பாட்டு விழுமியங்களை வெட்டிப் புதைத்தார்கள்.

இந்த ஆசாமிகள் தான், ''MOOR'' - என்ற பெயரையே முஸ்லிம்களுக்குச் சூட்டியவர்கள். தமிழகத்து முஸ்லிம்கள் இப்பெயரைத் தூர எறிந்து விட்டார்கள். இலங்கையிலோ ஒரு பகுதி முஸ்லிம்கள் தூக்கிப் பிடித்தார்கள். அந்த வார்த்தைக்குச் **'சோனகர்'** என்றும் அர்த்தப்படுத்திக் கொண்டார்கள்! அவர்களை நினைத்தால் பரிதாபம்!

## 'சோனகர்' எங்கிருந்தார்கள்?

தமிழ் லெக்சிகன் பேரகராதியைத் தொகுத்த முதுபெரும் அறிஞர்கள், 'யவனம் என்பது ஐம்பத்தாறு தேசங்களில் ஒன்று என்றும், கிரீசு, அறேபியா முதலிய நாடுகளில் ஒன்றாகக் கருதப்படுவதுமாகிய நாடு' என விளக்கம் கொடுத்துள்ளனர். சீவகசிந்தாமணியின் உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், **'யவனத் துருக்கர்'**

என்றும், பத்துப்பாட்டு உரையாசிரியரான நச்சினார்க்கினியர், **'யவனர்'** என்ற சொல் வருமிடமெல்லாம் **'சோனகர்'** என்றும் உரையெழுதியுள்ளனர். திவாகர நிகண்டில் **'சோனகர் - யவனர்'** எனவும், சூடாமணி நிகண்டில், **'யவனரென்போர் சோனகர் - உவச்சர்'** எனவும், விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. 'யவனர்' என்ற சொல் தான் காலப்போக்கில் **'சோனகர்'** என்று திரிந்துள்ளதாக ஆசிரியர் வில்லியம் லோகான் கருத்துத் தெரிவித்துள்ளார். அன்று தமிழ்மொழி வழங்கிய பதினேழு நிலங்களில் **'சோனகமும்'** ஒன்றாகச் சேர்த்து எண்ணப்பட்டுள்ளது.

இவைகளையெல்லாம் ஒன்றிணைத்து ஆராயும் பொழுது, 'யவனர், சோனகர்' என்ற சொற்கள், வளியின் வழியும், வலியும் தெளிந்து வங்கமேறி வந்த அறபிகளைக் குறிக்கத் தமிழகத்தில் வழங்கப்பட்ட திசைச் சொற்கள் என்பது புலனாகிறது.

சோனகக் குடியிருப்புகள், சோழநாட்டைவிட, பாண்டிய நாட்டில்தான் மிகுதியாக அமைந்திருந்தன. அவைகளில் முக்கியமானவை : **பாசா** (பாசிப் பட்டினம்)., **திண்டி** (தொண்டி), **மாலிபத்தன்** (தேவிப் பட்டினம்), **பத்தன்** (பெரிய பட்டினம்), **கபில்** (காயல்பட்டினம்), **குமரி** (குமரி), **கயில்** (குளச்சல்) ஆகியவையாகும்.

இன்னொரு முக்கியமான தகவல் : சோழவள நாட்டில் குடியேறிவர்களிடம், **'சோனகவரி'** என்றொரு புதிய வரி தண்டல் செய்யப்பட்டதாகும்.

பாண்டியன் பராக்கிரமனுக்காகப் பரிந்துவந்த இலங்கைப் பராக்கிரம பாகுவின் படையினைத் தொண்டிக்



கருகில் செம்பொன்மாரி என்ற ஊரில் கி.பி. 1171ல் வணிகர்களும் சோனகர்களும் வரவேற்று அன்பளிப்புகள் அளித்ததாக இலங்கை வரலாறு வரைந்துள்ளது.

தமிழ்ச் சமுதாயத்தின் தவிர்க்க முடியாத பகுதியினராகிவிட்ட இந்தச் சோனகர்களின் வாழ்க்கை நிலை அன்றைய ஆட்சியாளர்களான சோழ, பாண்டியர்களது அரசியலில் பிரதிபலித்த செய்திகளும் வரலாற்றில் உள்ளன.

அக்காலத்தில் சோனகர்கள் மட்டுமே அணிந்திருந்த சிடுக்கு என்ற அணி, சோழநாட்டில் பிறமக்களாலும் பெரிதும் விரும்பி அணியப்பட்டதாகத் தெரிகிறது.

தமிழகத்தில் சோனகர்கள் விரும்பி உண்ட மீன் வகைகள் இரண்டிற்கு **'சோனகக் கெளுத்தி'** (18 அங்குலம்), **'சோனக வாளை'** (25 அங்குலம்) என்ற பெயர்கள் சூட்டப்பட்டதாகத் தமிழ்ப் பேரகராதியில் இடம் பெற்றுள்ளன.

சுந்தரபாண்டியன், கி.பி. 1224-ல் பவித்திரமாணிக்கப் பட்டினத்து சோனக சாமந்த பிழார் பள்ளிக்கு இரண்டு கிராமங்களை இறையிலியாக வழங்கி ஆணை பிறப்பித்துள்ளான்.

- முதிய ஆய்வாளர், முகவை முஸ்தஃபா கமால் அவர்கள் 1979ஆம் ஆண்டு பதித்த எழுத்துக்களை அப்படியே நன்றியுடன் தொகுத்து, இப்போது தங்களை 'இலங்கைச் சோனகர்'களாகக் கருதுபவர்களுக்கு மிகவும் பணிவன்புடன் சமர்ப்பித்துக் கொள்கின்றேன்.

## சமாதான நீதிபதிப்பதவி

இலங்கை அரசு ஒரு சில காயல்பட்டனப் பிரஜைகளுக்கு சமாதான நீதிபதிப் (ஜே.பி.) பதவி வழங்கிக் கௌரவப்படுத்தியுள்ளது.

அதிலொருவர், கடந்தாண்டு (2000) ஒய்வுறக்கம் கொண்ட பரிமார் தெரு ஹாஜி **எம். செய்யது அகமது** அவர்கள். அன்னார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு கண்டி - கொழும்பு வீதியில் நகைக்கடை நடத்தினார்கள்.

## நாட்டு மருந்துக்கடை நடத்தினர்!

காயல்பட்டின வாசிகள் கண்டி - குருணாக்கல் போன்ற ஊர்களில் நாட்டு மருந்துக்கடைகள் வைத்துத் தொழில் செய்து வந்தனர். **உவைஸ்னா லெப்பை ஷேக் நூர்தீன்** (காயல்மகபூப் தந்தை) போன்றோர் இதில் முக்கியமானவர்.

நாட்டு மருந்துகள் கண்டி அரசர்கள் காலத்திலிருந்தே புகழடைந்திருந்தன.

## இரு ஹஸரத்துகள்

இப்பொழுதும் கொழும்பில் இரு பிரபலப் பள்ளிவாசல்களில் காயல்பட்டின ஆலிம்களே உயர்பீடத்தில் உள்ளனர்.

- 3ஆம் குறுக்குத்தெரு ஹனஃபிப் பள்ளியில் **கலீஃபா எல்.ஒ.எம். முஹம்மதலி** ஹஸரத்.



- 2ஆம் குறுக்குத்தெரு சம்மாங்கோட்டுப் பள்ளியில் **நஹ்வி முத்துவாப்பா** ஆலிம்.

## வாவு அப்பாஸ் முன் மாதிரி!

காயில்பட்டினம் கே.டி.எம். தெருவில் 1900-ல் பிறந்து 14வது வயதில் கொழும்பு **எம்.கே.எம்.கே.ஏ.கே.** நிறுவனத்தில் சேர்ந்த மர்ஹூம் **வாவு அப்பாஸ்** அவர்கள் பிற்காலத்தில் **அப்பாஸ் அன் கோ** நிறுவனரானார். இவர், தன்னிடம் வேலைக்குச் சேர்ந்த நாத்தாண்டியப்பகுதி ஏழைக் குடும்பச் சிறுவன் யூ.எம். ஷரீபுக்குத் தொழில் பழக்கிக் கொடுத்தார். தனது மூன்று ஆண் மக்களுக்குங்கூட (காயல் இப்னு அப்பாஸ் அவர்களில் ஒருவர்) தொழிலைப் பழக்காமல் இலங்கை வாசிக்கே முன்னுரிமை கொடுத்தார்.

பிற்காலத்தில் சிறந்த தொழில் அதிபராகவும் கொடை வள்ளலாகவும் விளங்கிய ஷரீப் ஹாஜியும் இப்பொழுது மர்ஹூம். அன்னாரது மக்கள் (லுத்பி - நுஸ்ரி - நுஸ்பி - நஹ்வி) மருமகன் முனாஸ் ஹாஜி இன்றுவரை காயல்பட்டின மைந்தருக்கும் குடும்பத்தினருக்கும் நன்றியுடையவர்களாகத் திகழ்கிறார்கள்.



## பணிவன்புடன்
## இளைய தலைமுறையினரின் பார்வைக்கு...

உங்களைப் பொறுத்தவரையில் நீங்கள் தொலைக்காட்சியே தஞ்சமென நேரத்தைச் செலவிட்டு மின்னலாகப் பரபரத்துக் கொண்டிருப்பீர்கள்.

உங்களுக்கு இந்நூலில் நான்கைந்து அத்தியாயங்கள் எப்படியோ இருக்கும்.

அதுவும் ஆய்வு என்பது அசதியைத் தரக்கூடியது - எழுதுகிறவனுக்கு அல்ல! படிக்கிறவர்களுக்கு!

ஆனால், காயல்பட்டினம் நேற்று முந்தாநாள் உண்டான ஊர்தானா? அல்லது ஆயிரங்காலத்து வரலாறு கொண்டதா என்பதை ஓர் இலங்கை எழுத்தாளன் மூலம் அறிய விரும்புகிறவர்களும், உங்கள் மூதாதையர்களுக்கு இலங்கையுடன் இருந்த நெருக்கத்தை அறிய ஆவல் உள்ளவர்களும் இந்நூலின் 298ஆம் பக்கம் வரையில் பொறுமையாகப் படிக்க வேண்டும் ஒரே மூச்சில் படிக்க முடியவிட்டாலும் அவ்வப்போது கொஞ்சம்..... கொஞ்சம்....!

ஓகே! அப்படியே செய்திடுங்கள். நன்றி.



# 3

பெருங்கற்காலக் கலாசார மையங்களில் கண்டெடுக்கப்பட்ட எலும்புக்கூடுகளை ஆராய்ந்த அறிஞர்கள் இம்மக்கட் கூட்டத்தினர் தென்னிந்தியா விலிருந்து இங்கு புலம் பெயர்ந்துள்ளனர் என எடுத்துக்காட்டியுள்ளனர். பொம்பரிப்பில் கிடைத்த எலும்புகளை ஆராய்ந்த மானிட வியலாளர்கள் தென்னிந்தியப் பெருங்கற்காலக் குடியிருப்புகளில் காணப்படும் எலும்புகளை இவை ஒத்தவையென்றும், இத்தகைய மக்கட் கூட்டத்தினரைத் தவிர்த்து ஒரு புதிய மக்கட் கூட்டத்தினர் இங்கு கால் கொள்ளவில்லை என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளனர். இவ்வாறே மாந்தையில் கிடைத்த எலும்புக்கூட்டினை ஆராய்ந்த பேராசிரியர்களான சண்முகம், ஜெயவர்த்தனா ஆகியோர் இவை தென்னிந்திய வர்க்கத்தைச் சேர்ந்ததாகத் தெரிவித்துள்ளனர்.

**- பேராசிரியர் க. சிற்றம்பலம்**
யாழ். பல்கலைக்கழக
வரலாற்றுறைத் தலைவர்

# புத்தளம்! எத்தளம்?

புத்தளம்!

எத்தளம் இது?

இலங்கை வடமேற்குப் பகுதி.

கொழும்பிலிருந்து 132 கி.மீ.

இந்த வரலாற்று ஏட்டை இங்கிருந்துதான் புரட்டவேண்டும்.

கிரேக்க அறிஞன் மெகஸ்தனிஸும், தமிழக அறிஞர் கா. அப்பாத்துரையாரும், புத்தளம் ஆய்வெழுத்தாளர் கலாபூஷணம் ஷாஜஹானுமே இதற்குக் காரணமாவர்.

அவர்கள் என்னை முந்தி சில முக்கிய ஆய்வுக் குறிப்புகளைப் பதித்துவிட்டார்கள் பதித்து!

கிரேக்கக்காரரோ, இலங்கையைத் தப்பிரபேன் (Taprobane) எனக் குறித்திருப்பதுடன், ''இந்தியாவினின்றும் ஓர் ஆற்றினால் பிரிக்கப்பட்டுள்ளது'' எனத்தந்து பற்பல நூற்றாண்டுகள்.

தமிழ்நாட்டவரோ, **''தென்னகத்துடனும் இலங்கையுடனும் தொடர்பு கொண்டு பாய்ந்து வளம் கொழித்த தாமிரபரணி ஆறு கடற்கோளின் தாக்கத்தினால் துண்டாடப்பட்டு விட்டது''** - என்ற ஆய்வை 'குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு' நூலில் பதித்துள்ளார். (200 நூல்கள் எழுதியவர் எனப்பெருமைப் படுத்தப்படுபவரின் முதலாவது நூல் இது).



இலங்கைக்காரரோ, **''மூன்றுக்கு மேற்பட்ட கடற்கோளின் காரணமாகத் தெற்கு நிலப்பகுதி கடல் வாய்ப்பட்டு சிற்சில தீவுகளே எஞ்சின. தெற்குப்பகுதி கடலினுள் அமிழ்ந்த போது வடக்கிலுள்ள இமயப்பகுதி உயர்ந்தது என்பது நில வல்லுநர் ஆய்வாகும். தெற்கு நிலப்பகுதி கடலால் விழுங்கப்பட்ட சமயம், அங்கு வாழ்ந்த மக்கள் படிப்படியாக வடக்கு நோக்கி நகர்ந்தனர். இந்நிலையிலேயே தென்னிந்தியாவினின்றும் இலங்கை பிரிந்து தனித்தீவாக மாறியது. 'தப்பிரபேன்' என மெகஸ்தனீஸ் தமது மொழியில் குறிப்பிட்டது தாமிரபரணி என்ற சொல்லின் திரிபாகும்''** - எனத்தமது ஆய்வு நூலில் வழங்கியுள்ளார்.[1]

கி.பி. 140-ல் வரையப்பட்ட ஒரு படத்தில், இலங்கை இன்றைய அளவைவிடப் பதினான்கு மடங்கு பெரிதாகக் காட்டப்பட்டு, 'தப்பிரபேன்' எனப் பெயரிடப்பட்டுள்ளதாக, எகிப்திய கணித வல்லுநர் டொலமி எடுத்துரைத்துள்ளார்.[2] இலங்கை அரசு ஒரு ரூபாய் முத்திரையிலும் காட்டி இருக்கிறது. (படம் 291ஆம் பக்கம்.)

நூலின் பின் அட்டையைப் பாருங்கள். மிக அபூர்வமானது.

**''லங்கா அல்லது தாமிரபரணி''** - *எனத் தலைப்பு! அடைப்புக் குறிகளுக்குள் ''சிலோன்!'' சேர்.ஜே. எமர்சன்*

1. *புத்தளம் வரலாறும் மரபுகளும் - ஏ.என்.எம். ஷாஜஹான். பக்கங்கள் : 8, 34. (1992)*
2. *Seeing Ceylon - R.L. Brohier*

*டெனன்டின் வரைபடம் என அச்சாகி, சமஸ்கிருதம், பாளி, சிங்கள மொழிகளை அடியொட்டிய அதிகாரபூர்வப் பெயர்கள் எனக் குறிப்பும்.*

மறுபடியும் ஒருமுறை பாருங்கள்.

**''லங்கா அல்லது தாமிரபரணி''** - என்ற தலைப்புப் பெரும் கிளுகிளுப்பைத் தருகிறது.

இந்தத் தாமிரபரணி என்ற பெயர் இன்றைக்கும் தமிழகத்தில் இலங்கிக் கொண்டிருப்பதை எனது இலங்கை அபிமானிகளுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

பொதியமலை ஊற்றாக 120 கி.மீ. நீளம். அதில் 24 கி.மீ. அம்மலை மீதே தவழ்ந்து, மீதமுள்ள 96 கி.மீ. தொலைவையும் சமவெளியில் ஓடி வளமாக்குகிறது. இலக்கியங்களில் பொருநை - பொருநல் - தண்பொருநை - தண்பொருத்தம் என்றெல்லாம் அழகுப்பெயர்கள்.

> * 'இலங்கையும் இந்தியாவும் கடலால் பிரிக்கப்படாமல் நிலத்தொடர்புடன் இருந்த காலத்திலேயே இருபகுதிகளையும் இணைக்கும் வழியாக இப்பகுதி இருந்துள்ளது. தாமிரபரணி ஆறு இந்நிலப்பரப்பினூடே பாய்ந்து செழிப்புறச் செய்ததுடன், அவ்வாற்றுப் படுகையில் சிறப்பு மிகுந்த மனித நாகரிகம் ஒன்றும் வளர்ந்து பொலிந்துள்ளது.'[3]

- எனக் குறிப்பிட்டுள்ள ஆய்வெழுத்தாளர் கலாபூஷணம் ஷாஜஹான், தமது நூலில் மேலும் பல பதிவுகள் செய்துள்ளார்.

*3. புத்தளம் வரலாறும் மரபுகளும் - ஏ.என்.எம். ஷாஜஹான். பக். 19 (1992)*



நெல்லை மாவட்டத்தில் இன்று பாயும் இவ்வாற்றின் தொடர்ச்சி அதற்கெதிரே இலங்கையின் வடமேற்குக் கரையில் புத்தளம் மாவட்டத்தின் வடக்கே பாயும் **கலாஓயா** எனச் சிங்கள மொழியில் வழங்கப்படும் **பொன்பரப்பி** ஆறாக இருக்கலாம் என்பதைப் பின்வரும் சான்றுகள் நிரூபிக்கக் கூடியனவாக அமைகின்றன.

தமிழ்க் கலைக் களஞ்சியம் **'காயல்'** என்ற இடத்தைப்பற்றி விவரிக்கும்போது, **''காயல் என்பது நெல்லை மாவட்டத்திலுள்ள ஒரு கிராமம்; ஒரு காலத்தில் மிகப் புகழ்வாய்ந்த துறைமுகப் பட்டினம்; தாமிரபரணி நதி சங்கமமாகும் இடத்தில் அமைந்த ஊர்; மார்க்கோபோலோ இறங்கிய நகரம்''** என அறிவிக்கின்றது.

இதன்படி காயலுக்கும், புத்தளம் பொன்பரப்பிப் பகுதிக்கும் தாமிரபரணி ஆற்றின் மூலம் புராதன நிலத்தொடர்பு இருந்ததென நம்பலாம்.

காயல் அல்லது காயல்பட்டனம், **'சோனகர் பட்டினம்'** எனவும் அழைக்கப்பட்டுள்ளது. கலா ஓயா அல்லது பொன்பரப்பி ஆறு சோனகர் நதியென அழைக்கப்பட்ட காரணத்தால் தாமிரபரணி எனவும் அழைக்கப்பட்ட அந்த ஆற்றின் கரையில் அமைந்திருந்த காயல் நகரும் சோனகர்ப் பட்டினம் என அழைக்கப்பட்டதில் வியப்பில்லை.

ஏனெனில், சோனகர்பட்டினம் என்ற பண்டைய பெயரையுடைய காயல்பட்டினத்தில் அறபிகளின் குடியிருப்புகள் இருந்ததுபோலச் **சோனகர் நதி** எனப்பட்ட

பொன்பரப்பி ஆற்றுப் பகுதியிலும் அறபுக் குடியிருப்புக்கள் இருந்துள்ளன எனக் காண்கின்றோம். குறிப்பாகக் குதிரைமலைப் பகுதியிலே பெரிய அறபுக் குடியிருப்புகள் இருந்துள்ளன.

**இவ்வடிப்படையில் காயல் பட்டினப் பகுதி யோடிணைந்திருந்த பொன்பரப்பிப் பற்றுப் பிரதேசங்கள் சோனகர்களுக்குரித்தான சோனக நாடாக ஏன் இருந்திருக்க முடியாது?**

இந்தக் கேள்வி ரொம்பப் புதியது.

தமிழக ஆய்வாளர்கள் அறிந்திருக்கிறார்களா அறியேன்.

இப்பொழுது, எதிர்பக்கத்தில் காணப்படுகின்ற ஒரு வரைபடத்தைக் கவனியுங்கள்.

கவனித்தீர்களா? இனி இந்தத் தகவல்களைப் படியுங்கள்...

** காயல்பட்டினம் முற்கால அறபிகளின் கோட்டையாக இருந்தது என்றும், அந்த நாட்டு மொழியை அறபிகள் பயின்றார்கள் என்றும், அது அவர்களது வர்த்தகத்திற்கு உபயோகமாகயிருந்தது என்றும், காயல்பட்டினத் திலிருந்து இலங்கை வந்த அறபிகள் தமிழ்மொழியை இங்கு (இலங்கை) கொண்டுவந்து பரவச் செய்தனர் என்றும், இலங்கை முஸ்லிம்களின் தாய்மொழியாகத் தமிழ் ஆயிற்று என்றும், இலங்கைப் பல்கலைக்கழக அறபித்துறைத் தலைவராகயிருந்த டாக்டர் எஸ்.ஏ. இமாம், இலங்கை முஸ்லிம் லீக் செனட்டில் ''ஸரந்தீப்''*





என்ற பொருள் பற்றிப் பேசுகையில் எடுத்துரைத்துள்ளார்.[4]

* மகா அலக்சாந்தரின் கட்டளைப்படி கிரேக்க மாலுமியான ஒனட்ஸிகிறிட்டஸ் வரைந்த இலங்கை வரைபடத்தில் 'சோனாள்' - 'சோனாள் பொட்டமஸ்' என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. பொட்டமஸ் என்றால் ஆறு எனப்பொருள்படும். அது தற்போதைய புத்தளப் பிரதேசமாகும். அவ்வரைபடத்திற்கிணங்க, அருவி ஆற்றுக்கும், தெதுறு ஓயாவுக்கும் இடைப்பட்ட பிரதேசம் பிரதானமாகச் 'சோனாள்கள்' வாழ்ந்த இடமாகும். அவர்கள் விஜயனுக்கு முன் அங்கு குடியேறியிருக்க வேண்டும். டொலமியின் வரைபடத்திலும் இதே இடம் 'சோனி சோனாபுலு' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. (புலு-ஆறு)[5]

* மகா அலக்சாந்தர் காலத்தில் (கி.மு. 327) கடற்பிரயாணத்தை மேற்கொண்ட அட்மிரல் நீர்க்கொஸ் என்பான் இப்பிராந்தியத்தில் அறபிகளின் நடமாட்டத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறான். இலங்கையிலும் மலபார் (கேரள)க் கரையிலும் பெருமளவில் காணப்பட்ட அறபிக் கடலோடிகளைப் பற்றி பிளினியும் (கி.பி. 23-79) குறிப்பிடுவதோடு, கடலிலும் கரையிலும் அவர்களுக்கிருந்த ஆதிக்கத்தையும் எடுத்துரைப்பதையும் காண்கிறோம்.[6]

4. 'தினகரன்' - இலங்கை நாளேட்டில் 12-3-64வில் இடம்பெற்ற செய்தி. பக். 5.
5. சீ. சுந்தரலிங்கம் (இலங்கை முன்னைநாள் எம்.பி.) 19-3-1969ல் 'சிலோன் டெயிலி மிரர்' நாளேட்டில் எழுதிய கட்டுரையில் ஒரு குறிப்பு. வரைபட மேற்கோள்களுடன்.
6. 'வீரசோனகர்' கட்டுரை. எம்.எஸ்.எம். ஸாஹிர். 'பிறைக்கொழுந்து' தொகுப்பு நூல். பக். 22. (1979).



* கி.மு. ஆறாம் நூற்றாண்டுகளிலேயே அறபிகள் இப்பிரதேசத்துடன் தொடர்பு கொண்டிருந்தனர். பினீஷியர்களினதும், சீனர்களினதும் தொடர்புகளும் இருந்துள்ளன. இவர்களின் தொடர்புகள் யாவும் பிரதானமாக வியாபார நோக்கத்துடனேயே இருந்தன.

* ஆதமின் பாலம் எனப்படும் குறுகிய பாக்குத்தொடு வாய்க்கூடாக மத்திய கிழக்கு, தூர கிழக்கு நாடுகளுக்குச் செல்லும் இருவழிப் பாதைகள் இப்பிரதேசத்தின் அண்மையில் அமைந்திருந்தன. பண்டையத் தமிழ் நாட்டுத் துறைமுகங்களும், வடமேற்குப் பகுதியில் அமைந்திருந்த மாந்தை, மன்னார், குதிரைமலை, அரிப்பு போன்ற துறைமுகங்களும் ஏற்றிறக்குமதிப் போக்குவரத்துக்குப் பெயர் பெற்றவைகளாகத் திகழ்ந்துள்ளன. கப்பல்களைப் பாதுகாப்பாக நிறுத்தி வைக்கக்கூடிய இயற்கையான, வசதியான துறைகளாக இவை இருந்தன.

* தமிழ்நாட்டின் கரைகளிலும், வடமேற்குக் கரையிலும் நடைபெற்ற முத்துக்குளிப்புத் தொழிலும், அத்தோடு தொடர்புபட்ட வேறு உப-தொழில்களும், வணிகமும் இப்பகுதியின் முக்கியத்துவத்துக்கு வழி வகுத்தன.

* அரிசி, மிளகு, சாயமூட்டும் மரவகைகள், பாக்கு, சங்கு, கறுவா, தந்தம், யானை, தேங்காயெண்ணெய், தும்பு ஆகியனவற்றையும், கருங்காலி போன்ற விலை உயர்ந்த மரங்களையும் இலகுவாகப் பெறக்கூடிய நிலையங்களாக வடமேற்குத் துறைகள் விளங்கின.

* கிழக்கிலிருந்தும், மேற்கிலிருந்தும் வரும் பொருட்களைப் பண்டமாற்றுச் செய்யும் மத்திய

*நிலையமாக இப்பிரதேசத்துறைகள் செயலாற்றின. ஒரு பக்கம் எகிப்து, அறேபியா, பாரசீகம், ஆபிரிக்கா, மலபார் கரைகளிலிருந்தும், மறுபக்கம் 'கோரமண்டல்' எனப்படும் சோழ மண்டலக்கரை, வங்காள விரிகுடாவின் கீழ்த்திசைக்கரைகள், மலாக்கா, சுமத்திரா, ஜாவா, மொலூக்காஸ், சீனா போன்ற நாடுகளிலிருந்தும் கப்பல்கள் இத்துறைகளை அடைந்து தங்களது பொருள்களைப் பரிமாறிக்கொண்டன.*

** இயற்கைச் சீற்றங்களால் பாதிக்கப்பட்ட கப்பல்கள் ஒதுங்கும் அல்லது புகலிடம் கொள்ளும் தலமாக வடமேற்குக்கரை அமைந்திருந்தது. இப்பகுதிக்கு வந்து சேர்ந்த இபுனு பதூத்தாவும் இந்நிலைக்கு உட்பட்டவரேயாகும். அலை வாய்ப்பட்டு அலைந்து வந்த விஜயனும், அவனது தோழர்களும் ஏறி வந்த நாவாய்கள் வந்து ஒதுங்கிய இடமும் இதுவே.*[7]

பிரபல வரலாற்றாளர் பிளினி இன்னொரு இடத்தில் குறிப்பிட்டுள்ளபடி, **''பேரரசர் க்ளோடியஸ் ஆட்சியின்போது காற்றினால் அலைக்கப்பட்டு, தற்செயலாக பதினைந்து நாட்களின் பின்பு, இலங்கையின் வடமேற்குக் கரையில் வந்தடைந்த கடலோடியான அனியஸ் லொக்கமஸ் (Annius Plocamus) என்பவன், ஒரு மலையின் அருகிலே பெரிய இஸ்லாமிய அறபுக் குடியிருப்புகளைக் கண்டான்.''**[8]

7. *'புத்தளம் வரலாறும் மரபுகளும்' - ஏ.என்.எம். ஷாஜஹான். பக்கங்கள் : 20, 21, 22. (1992)*

8. *'Manual of the Puttalam District of the North Western Province of Ceylon' - Frank Modder.*



அந்தக் கடலோடிகண்ட மலையடிவாரத் துறைமுகம் **'குதிரை மலை'** என்பதாகும். ஆங்கிலத்தில், 'Horse Mountain'. அப்பொழுது வடமேற்குக்கரையில் அதைத் தவிர எதுவுமிருக்கவில்லை. இங்கு வசித்த மக்கள் இப்பகுதிக் கடலில் நடைபெற்ற முத்துக்குளிப்பின் பயனாகக் கிடைத்த அபரிமிதமான உயர்ந்த முத்துக்களைக் கொடுக்கல் வாங்கல் செய்து பெரும் வணிகர்களாகத் திகழ்ந்தனர். மன்னாரிலும் மாந்தோட்டை (மாந்தை)யிலும் இருந்தவர்கள் இவர்களுடன் வணிகத் தொடர்புகள் வைத்திருந்தனர்.

மேலும், குதிரைமலையில் இஸ்லாமிய ஞானப் பெரியார்கள் அடங்கப்பெற்ற மகிமைக்குரிய சமாதிகள் இருந்துள்ளன. இன்று கடற்கரையில் எஞ்சியுள்ளது ஒரு சமாதியாகும். குதிரைமலையை ஒரு புனிதத்தலமாக மதித்து அங்கே போய் தரிசிப்பது வழக்கமாக உள்ளது.[9]

8-ம் நூற்றாண்டுகாலப் பிரிவிலேயே இந்தக் குதிரைமலையில் அறபியர் வசித்ததாகத் தெரியவருகிறது.[10]

**அறபியர் எனச்சொல்லப்பட்டாலும், சுட்டப்படுவது அறபுவழிவந்த தமிழ்பேசும் முஸ்லிம்களையே என்பது எனது துணிபாகும்.**

என் துணிபுக்கு இரு காரணிகள் உண்டு. ஒன்று, முத்துக்குளிப்பு... மற்றொன்று, காயல்பட்டினம் சுமார் 1500

9. *'புத்தளம் வரலாறும் மரபுகளும்' - (1992) பக். 48-49. ஏ.என்.எம். ஷாஜஹான்.*

10. *Au Ethonological Survey of the Muslims of Srilanka Chap. II. Sir Razik Fareed Foundation Publication.*

ஆண்டுகாலத்திற்கு முன்பிருந்தே துறைமுகமாகத் துலங்கிச் சிறந்திருந்தது.[11]

அக்கால முத்துக்குளிப்பைப் பொறுத்தவரையில், தமிழகத்தின் இரு ஊர்கள் பிரபலமாக இருந்துள்ளன.

இலங்கைப் பேராதனைப் பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர்களுள் ஒருவரான கலாநிதி சி.ஆர்.டீ. சில்வா, **''பழைய காயலிலும் (காயல்பட்டினம்), கீழக்கரையிலும் வாழ்ந்தவர்கள் முத்துச் சலாபத்தில் முன்னின்று அத்தொழிலை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர்''** என அடையாளம் காட்டியுள்ளார்.[12]

திரு கே.எ. நீலகண்ட சாஸ்திரி (வரலாற்றாசிரியர்) தன் பங்குக்கு, **''நெல்லை மாவட்டத்துக்கு உயிர் ஊட்டும் தாமிரபரணி நதி கடலில் கலக்கும் இடத்திலுள்ள கொற்கையும் காயலும் முத்து வாணிபத்திற்குப் புகழ்பெற்று விளங்கின''** என அந்நியநாட்டுப் பயணிகள் கூறியிருப்பதைத் தமது 'History of South India' என்ற நூலில் பதித்துள்ளார்.

எஸ். பட்டாச்சாரியா என்ற அறிஞரும், தமது "A Dictionary of Indian History" நூலில், **''காயல் என்பது தாமிரபரணி நதியோரத்தில் அமைந்த ஒரு வசதியான துறைமுகப்பட்டினம். கொற்கை திருநெல்வேலியிலுள்ள ஒரு முக்கிய துறைமுகம்''** என வரைந்துள்ளார்.

---

*11. 'காயல்பட்டின வரலாற்றுச் சுருக்கமும் தலைமுறையும்' - அல்ஹாஜ் ஆர்.எஸ். அப்துல் லத்தீப், எம்.ஏ. (1998) பக் : 13.*

*12. 'The Portuguese and Pearl fishing of South India and Srilanka' - C.R. de Silva. PP 15-16 (1978)*



ஆக- புத்தளத்துப் பகுதிக்கும், தமிழ்நாட்டுக்கும் தொன்மைத் தொடர்புகள் உள்ளன என்பது தெளிவாகப் புலனாகிறது.

இந்தத் தொன்மையை, மிகச்சமீபத்திய இன்னும் சில ஆழமான ஆதாரங்களுடன் தெரிவிப்பது என் கடமை.

இவ்வாண்டில் (2001), யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள **'பண்டைய ஈழத்தில் தமிழர் - ஒரு பன்முகப் பார்வை'** - எனும் தலைப்பிலான ஓர் ஆய்வுப் பேருரை நூலில், பேராசிரியர் க. சிற்றம்பலம் என்பார் இப்படிக் குறித்திருக்கிறார்:

> *❍ விஜயன் கூட்டத்தினர் வந்திறங்கிய இடத்தை 'தம்ப பண்ணி' எனக்கூறும் மகாவம்ச ஆசிரியர், இவர்கள் இந்நாட்டுக்குக் கால் வைத்தபோது தாம் இறங்கிய நிலத்தைத் தொட்டபோது கை சிவப்பாக மாறியதால் அந்த இடத்திற்கும் இத்தீவிற்கும் 'தம்பபண்ணி' எனப் பெயரிடப்பட்டது என்கிறார். ஆனால், தமிழ்கத்து இலக்கியச் சாசன ஆதாரங்களை நோக்கும்போது வடமொழித் தாம்ரவர்ணிதான் தம்பபண்ணியாகப் பிராகிருத மொழியில் வழங்கப்பட்டது எனத் தெரிகின்றது. இவ்வடமொழித் தாமிரபரணி கூடப் பழந்தமிழ் வடிவாகிய தண்பொருநையின் உருமாற்றம் எனக் கொள்ளப்படுகிறது.*
>
> *இதனால், இப்பகுதியில் பாண்டி நாட்டின் தண்பொருநையின் கரையில் இருந்து ஆதிக் குடியேற்றம் ஏற்பட்டதால் ஈழத்திற்கு இப்பெயர்*

*வழங்கப்பட்டதெனலாம். பாண்டிநாட்டிலுள்ள இந் நதிதீரத்தில் தான் இந்தியாவின் மிகப்பெரிய தாழிக்காடான ஆதிச்சநல்லூர் விளங்குகின்றது. விஜயன் குழுவினர் வந்திறங்கியதெனக் கருதப்படும் மன்னார்த்துறையில், அதுவும் கலா ஓயா நதிக்கரையிற்றான் ஈழத்தின் புகழ்பூத்த பெருங்கற்காலத் தாழிக்காடான பொன்பரிப்பு காணப்படுகின்றது. இதில் அகழ்வாய்வின் போது கிடைத்த எச்சங்கள் யாவும் ஆதிச்ச நல்லூரில் அகழ்வாய்வின் போது கிடைத்த தொல்லியல் எச்சங்களை ஒத்துக் காணப்படுவதால் ஈழத்தின் ஆதிக்குடியேற்ற வாசிகளில் ஒரு பகுதியினர் இப்பகுதியிலிருந்தே இங்கு வந்திருப்பர் எனக்கொள்ளலாம்.*

- இக்குறிப்பில், கடைசியாகக் காணப்படும் இரண்டொரு வரிகளை ஊன்றிப் படித்திட வேண்டும்.

'... **ஈழத்தின் ஆதிக்குடியேற்ற வாசிகளில் ஒரு பகுதியினர் இப்பகுதியிலிருந்தே இங்கு வந்திருப்பர் எனக்கொள்ளலாம்**' - என்பதுடன் நிறுத்திக் கொண்டுள்ள பேராசிரியர் அவர்கள், '**அந்த ஆதிக்குடியேற்றவாசி**'களில் யார், யாரெல்லாம் இருந்திருப்பார்கள் என்பதை விவரமாகத் தெரியப்படுத்தவில்லை. '**அவர்கள் தமிழராகவே இருப்பர்**' - என்றே எந்த வாசகரும் கருதுவர்.

அவ்வாறு கருதுவதிலும் தவறில்லை. ஆனால், என் பேனா ஒருபடி மேலே போய், '**அந்த ஆதிக் குடியேற்றவாசிகளுள் அறபுக்களும் இருந்திருப்பார்கள். அவர்கள் அன்னைத் தமிழைப் பேசுபவர்களாகவும் இருந்திருப்பார்கள். இஸ்லாத்தினைத் தழுவிய தமிழ் முஸ்லிம்களாகவும் இருந்திருப்பார்கள்**' எனப் பதித்திட விரும்புகிறது.



மிக மிக மகிழ்வுடன் அப்படியே பதிக்கின்றேன்!

நல்லது. நாம் சற்றுமுன் புத்தளத்தில் குதிரைமலையைத் தரிசித்தோம் அல்லவா! இப்பொழுது, 'பொன்பரப்பி'யை இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்வோம்:

அடுத்த பக்கத்தில் பிரசுரமாகியுள்ள வரைபடத்தை ஒரு பார்வை பார்த்திடுங்கள். (வெறும் பார்வையுடன் நிறுத்தக் கூடாது!)

என்ன, பார்த்து விட்டீர்களா?

தமிழகத்தின் தென்பாண்டிச் சீமையையும், இலங்கையின் வடமேற்குக் கரையான புத்தளப் பகுதியையும் அது காட்டுகிறது. காயல்பட்டினம் இருப்பது தாமிரபரணி அருகில்! பொன்பரப்பியோ, '**குதிரைமலை**' என்கிற பண்டைய துறைமுகப்பக்கம். நடுவில் மன்னார் வளைகுடா!

புத்தளத்தில் வடக்கே ஆறாவது மைலிலிருந்து மன்னார் எல்லைவரை பரந்துள்ள நிலப்பகுதி **பொன்பரப்பிப்பற்று** என அழைக்கப்படும். இவ்வழகிய பெயர், 'பொம்பரிப்பு' எனச் சிங்களத்தில் சிதைந்து வழங்கப்படுகின்றது.

புத்தள மக்களைப் பொறுத்தவரையில் '**கலாஓயா**' என இப்பொழுது பெயர் கொண்டிருக்கும் ஆறே






**பொன்பரப்பி!**

அவ்வாறே அழைக்கவும் செய்கின்றனர். பொன்னிறமண் - சிவந்தமண் பரந்து காணப்படுவதன் காரணமாக, 'பொன்பரப்பி' எனப்பெயர் ஏற்பட்டதாகவும், செப்புநிறம் என்ற கருத்து தாமிரபரணிக்குப் பொருந்தும் என்பதும், தம்பபாணி - தம்பபண்ணி என்றழைக்கப்படுவதும் பொன்பரப்பிப் பகுதியையே என்பதும் அவர்கள் தம் கருத்து.

இதனையே, கலாபூஷணம் ஷாஜஹானும், தமது நூலில் வலியுறுத்துகிறார்.[13] பேராசிரியர் சிற்றம்பலம் அவர்களும் 'ஊறுகா'யாகத் தொட்டிருக்கிறார்!

> **❍ 'முதுமக்கள் தாழி' எனப்படும் மிகப்புராதன சவ அடக்கமுறை நிலவிய நிலப்பிரதேசங்கள் பற்றி ஆராயும்போது தாமிரபரணி ஆற்றினதும், பொன்பரப்பி ஆற்றினதுமான தொடர்புகள் மேலும் வலுப்பெறுவதைக் காணலாம். கி.மு. ஆயிரம் ஆண்டுகட்கு முன்னுள்ளதாக இவ்வடக்கமுறை இருத்தல் வேண்டுமென 'தென்னிந்திய வரலாறு'** நூலை எழுதிய டாக்டர் கே.கே. பிள்ளை அபிப்ராயப்படுகின்றார்.

இந்த முதுமக்கள் தாழிகள் (புத்தளப்பகுதி மக்கள் வழக்கில், 'சவயாப்பிணச் சாடிகள்') பொன்பரப்பி ஆற்றுப் படுகைகளில் காணப்படுவது போன்று தென்னகத்

*13. 'புத்தளம் வரலாறுகளும் தரபுகளும்' - ஏ.என்.எம். ஷாஜஹான். பக். 32. (1992).*

தாமிரபரணியிலும் பரவலாகக் காணப்படுவதுடன், கி.பி. 4, 5 நூற்றாண்டுகள் வரை நடைமுறையில் இருந்ததாகவும் தெரிகின்றது.

பாளையங்கோட்டை, சதகத்துல்லா அப்பாக் கல்லூரி மாணவர்களால் கடம்பூரில் மேற்கொள்ளப்பட்ட தொல்பொருள் ஆய்வுகளில், தாமிரபரணி ஆற்றின் படுகையில் செம்மண் செறிந்த 'பரும்பு' அல்லது 'பறம்புச் சரிவு'களில் முதுமக்கள் தாழிகள் பல கண்டெடுக்கப்பட்டன.

இதே 'பரும்புகள்' புத்தளப் பொன்பரப்பி ஆற்றுப்படுகையிலும் காணப்படுகின்றன.

1921-ல் கண்டுபிடிக்கப்பட்ட இவ்விடத்தில், **விமலா பெக்லே** என்பார் அகழ்வினை மேற்கொண்டிருந்தார் என்றும், பின்பு, 1965-இல் தொல்பொருள் திணைக்களத்தால் அகழ்வாய்வு செய்யப்பட்டு மேலும் பல தாழிகள் ஆராயப்பட்டன என்றும் தெரிந்து கொள்கின்றோம்.[14]

இந்த வகையில், இன்றையத் தமிழகத் தாமிரபரணி ஆற்றுப் பிரதேசத்திற்கும், புத்தளப் பொன்பரப்பி ஆற்றுப் பிரதேசத்திற்கும் இடையிலான ஒற்றுமையையும், தென்னிந்திய மக்கள் பொன்பரப்பிப் பகுதியில் வாழ்ந்து வந்தமையும் புலனாகின்றது.

இந்த இடத்தில், தமிழ்நாட்டில் காயல்பட்டினம் எங்கே, எவ்வாறு அமைந்துள்ளது என்பதை இலங்கை அபிமானிகளுக்குத் தெளிவாக்குவதும் அவசியம். இதோ;

14. *'பண்டைய ஈழத்தில் தமிழர்' - ஒரு பன்முகப்பார்வை - பேராசிரியர் க. சிற்றம்பலம். யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு (2001).*



○ *தூத்துக்குடியிலிருந்து 40 கி.மீ. தொலைவு. பிரசித்தி பெற்ற திருச்செந்தூரிலிருந்து 4 கி.மீ. தொலைவு.*

○ *தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்திற்குத் தெற்கே காயல்பட்டினமும், வடக்கே பழைய காயலும் இருக்கின்றன. தாமிரபரணி கடலில் சங்கமமாகும் இடத்தில் புன்னைக்காயல் அருகில் அமைந்துள்ளது. இன்று காயல் எனத்தனியாக எவ்வூருமில்லை. இம்மூன்று ஊர்களும் அன்றைய காயலின் அங்கங்கள் - சங்கமங்கள் என்பதை மனத்தில் நிலை நிறுத்தினால் தடுமாற்றம் ஏற்படாது.* (வரைபடங்கள் 292-293ஆம் பக்கங்களில்)

ஆக, 'காயல்' எனச் சிறப்பாகப் பல வரலாற்றுப் பதிவுகளில் அழைக்கப்படும் மாநகரம், புன்னைக்காயல் - பழைய காயல் - காயல்பட்டினம் என மூன்று ஊர்களாக ஒன்றை ஒன்று ஒட்டியதாக அமைந்துள்ளன. ('மஞ்சள் நீர்க்காயல்' என்றும் இன்னொரு கிராமமும் இம்மூன்றுடன் உண்டாம்! காதில் விழுந்தது!)

என் ஆய்வு, இலங்கை - காயல்பட்டினம் தொடர்புகளை மட்டும் மையமாகக் கொண்டிருப்பதனால், நான் இந்தளவுக்குக் 'காயல்' விடயத்தை நிறுத்திக்கொண்டு வேறோர் இடம் நோக்கி நகர்கிறேன்.

தயவு செய்து அபிமானிகளும் தொடரவேண்டும்.



# 4

> ''ஆராய்ச்சி என்பது புதிய செய்திகளைத் தக்க சான்றுகளுடன் நிறுவ முயல்வதே''
>
> - **இரா. முத்துக்குமாரசாமி நூலகர்** (ஓய்வு).
> மறைமலையடிகள் நூலகம், சென்னை - 1.

## மலபாரும் மிஃபரும்

மலபார்!

மிஃபர்! (மாபார்)

- இவை அறபுப் பெயர்கள்!

'மலபார்' என்றழைத்த அறபியை அடையாளம் காண முடியவில்லை.

'மிஃபர்' எனச் சொன்னவரது பெயர் பதிவு: அவா, யாகூத் என்ற அறபுப்பயண எழுத்தாளர். (1179-1229)[1]

என்றாலும், இந்த 'மிஃபர்' 'மாபார்' எனத்திரிந்து. போனது. பெரும்பாலான தமிழ் ஆய்வாளர்கள் இவ்விரண்டில் ஏதாவதொன்றைப் பதித்துள்ளார்கள்.

1. *'Tuhfat-ul-Mujahidin' (Trans.) S.M.H. Nainar P.6. (1942)*



நான் என்ன செய்வது?

அனேக அறபி நூல்களிலும், காயல்பட்டினம், பெரிய குத்பாப் பள்ளி, சிறிய குத்பாப் பள்ளி ஆகிய இடங்களில் உள்ள அடக்கத்தலங்களில் காணப்படுகிற கல்வெட்டுக்களிலும் இரங்கற்பாக்களிலும் '**மிஃபர்**' என்பதே காணப்படுவதால்.[2] நானும் அதனையே உபயோகிக்க விரும்புகிறேன்.

இதன் தமிழாக்கம், 'பாதை' அல்லது 'வழிதடம்'.

மலபார் சாதாரணமாக இப்பொழுதும் வழக்கிலுள்ளது.

இந்தியாவின் தென்மேற்குக் கரையில், மயக்கம் தருகின்ற மலையாள (கேரள)க் கரையோரமே மலபார். கள்ளிக்கோட்டை - கொச்சின் - பொண்ணாணி அதன் முக்கியத் துறைமுகங்களாகும்.

இந்த மலபார் மக்களுக்கும் இலங்கை முஸ்லிம்களுக்குமிடையே வர்த்தகக் குடியேற்றங்கள் ஏற்பட்டதுடன், தொழில் நிமித்தமான தரிப்புகள் அதிககாலம் நீண்டதால் திருமணப் பந்தங்களும் நிகழ்ந்தன![3]

இவையே மிஃபர் வாசிகளுக்கும் ஏற்பட்டன! பாண்டிய சோழமன்னர்களது ஆட்சிக்குட்பட்டிருந்த சோழமண்டலக் கரை (கோரமண்டல்)யாகிய தமிழ்நாட்டுக் கிழக்குக் கரையையே இப்படி அறபியர் அழைத்தனர்.

2. *'முஸ்லிம் தமிழ்ப் பாரம்பரியம்' - ஹாபிஸ் எம்.கே. செய்யிது அஹ்மது. பக். 1-2. (1968).*
3. *Muslims of Srilanka - A cultural perspective - Dr. M.A.M. Shukhri. P. 338 (1986)*

தென் எல்லையாகிய கன்னியாகுமரியுடன் (கேப் கொமரின்) மலபார் முடிந்துவிட, 'குல்லம்' (கொல்லம்) துறைமுகப்பட்டினத்தில் தொடங்கி, 'நிலுவர்' (நெல்லூர்) வரை மிஃபர் வியாபித்தது.[4]

இந்தவகையில் முக்கியமான மிஃபர் கடற்கரை ஊர்களைக் கவனத்தில் கொள்வோம்:

○ *கொல்லம் - விழிஞ்சம் - குலசேகரப்பட்டினம் - திருச்செந்தூர் - வீரபாண்டியன் பட்டினம் - காயல்பட்டினம் - புன்னைக்காயல் - கொற்கை - தூத்துக்குடி - வைப்பாறு - ஏர்வாடி - கீழக்கரை - இராமேஸ்வரம் - தேவிப்பட்டினம் - தொண்டி - கோடியக்கரை - வேதாரண்யம் - நாகூர் - காரைக்கால் - பூம்புகார் - பறங்கிப்பேட்டை - கடலூர் - பாண்டிச்சேரி - சென்னை - பழயாறு - நெல்லூர்.*

- மேற்கண்ட ஊர்கள் அனைத்துமே கடலும் கழிமுகமும் சார்ந்தவையே! இந்த ஒன்றிலிருந்தே முதன்மிகு அறபுக்குடியேற்றம் ஏற்பட்டிருக்கவேண்டும்!

அவ்வாறாயின் அது எந்த ஊர்?

பதில் சொல்ல இந்திய வடபுல வரலாற்றாசிரியர் தாராசந்த், 'வான்புகழ் காயல்', எழுதிய ஹாஃபிஸ் எம்.கே. செய்யது அகமது, பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பாக் கல்லூரிப் பேராசிரியர் முஹம்மது நாசர், 'காயல்பட்டினம்' வரலாறு வழங்கிய கலாநிதி அல்ஹாஜ் ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் எம்.ஏ. ஆகியோரை அன்புடன் அழைக்கின்றேன்.

4. வரலாற்றாளர் அபுல் ஃவிதா, யாத்ரீகர் வஸ்ஸாப் ஆகியோர் குறிப்புகள்.



**○ பொதியமலை - பொருநையாகிய தாமிரபரணி ஆற்றின் கழிமுகத்துவாரத்தை அண்மியுள்ளதும், பண்டைய மாபார் பிரதேசத்தின் முக்கிய கேந்திரமுமான காயல்பட்டினமே முதன்மிகு அறபுக்குடியேற்றம்![5]**

- என்கிறார் தாராசந்த். மேலும் அவர், தமது நூலின் 34-ம் பக்கத்தில், பேராயர் கால்ட்வெல் என்பார், காயல்பட்டினத்தில் கண்டெடுத்த அறபுக்காசுகளைப் பற்றியும் தெரிவித்துள்ளார்.

பேராசிரியர் எம். முஹம்மது நாசர், எம்.எ., எம்.பில் பதித்திருப்பது இப்படி:

**○ 'உண்மையில், ஒன்பதாம் நூற்றாண்டில் (கி.பி. 843-854) முகம்மது கில்ஜி தலைமையில் வந்த முதல் அறபு முஸ்லிம்களின் குடியேற்றம் இப்பகுதியிலேயே (காயல்பட்டினம்) நிகழ்ந்துள்ளது. குத்துபாப் பெரிய பள்ளிவாசலின் ஒரு பகுதி இவரால் கட்டப்பட்டது. இதைச் சுல்தான் ஜமாலுத்தீன் விரிவுபடுத்திக் கட்டியுள்ளார்'.[6]**

இந்த இடத்தில் இன்னொரு தகவல்:

மேலே குறிப்பிடப்பட்ட முஹம்மது கில்ஜி தலைமையில் வந்த முஸ்லிம் கூட்டத்தார் கீழக்கரையையும்

5. *'Influence of Islam on Indian Culture' - Tarachand, Lahore. 1979 (p. 34)*
6. *'காயல்பட்டினம் வரலாறும் அதன் தொன்மையும்' - கட்டுரை. பேரா. முஹம்மது நாசர், எம்.எ. எம்.பில். புதுக்கோட்டை நிஜாம் ஓரியண்டல் அறபி உயர்நிலைப் பள்ளி வெள்ளிவிழா மலர். 1995. (பக். 55).*

வதிவிடமாகக்கொண்டனர் என்றும், தமிழகத்திலும் இலங்கையிலும் தனித்துவமிக்க முஸ்லிம் சமுதாயமொன்று ('அர்வி') உருவாகிட அடிகோலினர் என்றும், கலாநிதி தைக்கா சுஐபு ஆலிம் பி.ஏ., எம்.ஏ. தமது ஆய்வு நூலாகிய 'Arabic, Arwi and Persian Serandib and Tamilnadu' - பக்கம் 17-ல் பதித்திருக்கிறார்.

மேலே குறிப்பிட்ட தாராசந்த், பேராசிரியர் முஹம்மது நாசர் இருவரையும்விட கலாநிதி அல்ஹாஜ் ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் தந்துள்ள குறிப்புகள் தனித்துவமானவை:

- **கி.பி. 643ஆம் ஆண்டு (ஹிஜ்ரி 21) இஸ்லாத்தின் இரண்டாவது கலீபாவாகிய உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் மாலிக் இப்னுதீனார் தலைமையில் இஸ்லாத்தைப் பரப்ப ஒரு குழு கப்பல் மார்க்கமாகக் கேரளா வந்து சேர்ந்தது. இக்குழு காயல்பட்டினத்தில் கடலோரமாக ஒரு பள்ளியைக் கட்டி இஸ்லாத்தைப் பரப்பியது என்று கள்ளிக்கோட்டை (காலிக்கட்) பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் டாக்டர் கபீர் என்பவர் எழுதியுள்ளார். எனவே, காயல்பட்டினத்தில் இஸ்லாமியர்களின் முதல் குடியேற்றம் கி.பி. 642-இல் ஏற்பட்டது என்பதை அறிகின்றோம். இப்பள்ளி முஹிய்யத்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப் பள்ளிக்குச் சற்று வடகிழக்காக அமைந்துள்ளது. கோசுமறை தர்ஹாவுக்குப் பக்கத்தில் கடற்கரைப்பள்ளி என்ற பெயரோடு இருந்தது.**

- **டாக்டர் (பேராயர்) கால்டுவெல் திருவைகுண்டம் (ஸ்ரீவைகுண்டம்), அணைக்கட்டு கட்டும்போது கிடைத்த அறபு நாணயங்களில் ஒன்றில் ஹிஜ்ரி 71-ம் ஆண்டு என்றும் பொறிக்கப்பட்டிருந்தது என்றும், இந்நாணயங்கள் அக்காலத்தில் காயல்பட்டினத்தில் வாழ்ந்த அறபு முஸ்லிம்கள் கொண்டு வந்தவை எனவும் எழுதுகிறார்.[7]**



- இவையனைத்தும் நமக்கு உணர்த்துவது, தற்போதைய காயல்பட்டினத்தில் (அறபு) முஸ்லிம்களின் முதல் குடியேற்றம் ஏற்பட்டு **ஆண்டுகள் ஆயிரத்தையும் தாண்டிவிட்டது என்பதே!**

அது, அப்துல் லத்தீஃப் அவர்களது குறிப்பின்படி, ஏறத்தாழ 1359. அல்லது பேராசிரியர் முஹம்மது நாசர் ஆய்வின்படி, ஏறத்தாழ 1158. இதில் தீர்க்கமான முடிவை எதிர்காலம் அளிக்கலாம்!

இவ்வாறு, முதல் குடியேற்றம் காயல்பட்டினத்தில் ஏற்பட்ட காலத்தில், இலங்கையில் வடமேல் மாகாணமாகிய புத்தளத்தில் மட்டுமல்லாது, முன்குறித்த குதிரைமலையிலும் கல்பிட்டியிலும் பழம்பெரும் துறைமுகங்கள் அமைந்திருந்தன. மன்னாரும் அரிப்புவும் அப்படியே. வடக்கிலும் யாழ்ப்பாணத் தீபகற்பத்தில் சில. முக்கியமாக <u>ஊர்காவற்றுறை</u>. (இப்பெயரை மறக்காமல் நினைவில் வையுங்கள். பின்பு அதிசயச்செய்தி சொல்லுவேன்!) மற்றும், தென்மேற்கிலே வேர்விளை (பர்பரீன்), காலி அம்பாந்தோட்டைத் துறைமுகங்கள்.

---

7. *'காயல்பட்டினத்தின் வரலாற்றுச் சுருக்கமும் தலைமுறையும்' - அல்ஹாஜ் ஆர்.எஸ். அப்துல் லத்தீபு எம்.ஏ.பக். 1-2. (1998).*

உண்மையில், மலபார் என்ற கேரளக்கரையைவிட, 'மிஃபர்' (மாபார்) இலங்கைக்கு மிக அண்மியதாக அமைந்திருந்தது என்பதுடன், அதன்வழியே, தூரகிழக்கு, மத்தியகிழக்கு எனப் பயணிக்க வசதியான பாதையாகவும் இருந்தது.

தமது வாழ்நாளின் மூன்றில் ஒரு பங்கைப் பயணங்களிலேயே கழித்த மொரோக்காவின் **இப்னு பதூதா** (முஹம்மது இப்னு அப்துல்லாஹ்) 21-09-1345லும், 17-10-1345 அன்றும் இரு தடவைகள் புத்தளம் துறைமுகத்தைத் தொட்ட பொழுது, கரையோரங்களில் கறுவா (பட்டை) மலையாகக் குவித்து வைக்கப் பட்டிருப்பதைக் கண்டார். களிப்புற்றார். மலபாரிலிருந்தும் மிஃபரிலிருந்தும் வந்த வணிகர்கள் வாங்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தார்.[8]

**○ 'போர்த்துக்கேயர் ஊடுருவும் வரையில், இந்திய - இலங்கை வாணிபத்தில், தமிழ், மலையாள முஸ்லிம் வணிகர்கள் ஏகபோக உரிமை கொண்டிருந்தனர். மேற்குக் கரையிலும், தென்கரையிலும் தமிழ் பேசும் முஸ்லிம்களின் குடியேற்றம் - விசேடமாக, புத்தளம், கல்பிட்டி, கொழும்பு, வேர்விளை, அம்பாந்தோட்டை ஆகிய இடங்களில் அமைந்திருந்ததுடன், வணிகேந்திரங்களைக் கொண்ட உட்புற நகரங்களிலும் இருந்தன. இலங்கைத் தீவில் அந்தத் தமிழ் பேசும் முஸ்லிம்களின் பலதரப்பட்ட நடவடிக்கைகளையும் வர்த்தகச் செழுமையையும் இக்குடியேற்றங்கள் சுட்டுகின்றன**

8. 'The Rehlh of Ibu Batuta' - Mehdi Hussain.



எனப் பேராசிரியர் கே. இந்திரபாலா (யாழ்ப்பாணம்) குறித்துக் காட்டியுள்ளார்.[9]

இவரைப்போலவே, மற்றொரு முக்கியமான இலங்கை ஆய்வாளர், முன்னைநாள் கல்விப் பணிப்பாளர் **முஹம்மது சமீம்** அவர்கள் தமது குறிப்பில் இப்படிக் கோடிட்டுச் காட்டியுள்ளார்:

**○ '(தென்) கிழக்குக் கரையோரத்தில் ஆந்திராவில் மோட்டுப்பள்ளியும், தமிழ்நாட்டின் காயல்பட்டினமும் முஸ்லிம்களின் முக்கியத் துறைமுகங்களாக இருந்தன. காயல்பட்டின முஸ்லிம் வணிகர்கள் இலங்கையுடன் நெருங்கியத் தொடர்பினைக் கொண்டிருந்தனர். இலங்கையின் பெரும்பாலான முஸ்லிம் வியாபாரக் குடும்பங்கள் காயல்பட்டினத்தைத் தமது பிறப்பிடமாகக் கருதுகின்றனர்.'[10]**

மூன்றாம் அத்தியாயத்தில் நாம் தெரிந்துகொண்ட பேராசிரியர் க. சிற்றம்பலமும் பின் காணப்படும் பதிவைத் தந்துள்ளார்:

9. *The Role of Peninsular Indian Muslim Trading Communities in the Indian Ocean Trade - K. Indrapala. P. 123 (Muslims of Srilanka-1986)*

10. *'இந்திய சமூகத்தில் தென்னிந்திய முஸ்லிம்களின் வர்த்தக வளர்ச்சி' - என்ற ஆய்வுக்கட்டுரையில் 99-ம் பக்கம். அவரது சொந்த நூலான, 'ஒரு சிறுபான்மைச் சமூகத்தின் பிரச்சினைகள்' என்ற பதிப்பிலிருந்து - (1997).*

**○ பிராமிக் கல்வெட்டுகளில் தமிழகத்தோர் ஈழத்துடன் நெருங்கிய வாணிகத் தொடர்பினை வைத்திருந்ததை உறுதிப்படுத்தும் சான்றுகளும் உள. இதற்கான சான்றுகள் அநுராதபுரம், வவுனியா, சேருவில், குடுவில் ஆகிய இடங்களில் உள்ளன. வணிகர் அமைப்பு ரீதியாக இயங்கியதை அநுராதபுரக் கல்வெட்டு எடுத்துக் காட்டுகின்றது. தமிழக வணிகரைக் குறிக்கும் "தமேட வணிஜ" என்ற குறிப்பு இவற்றுள் காணப்படுவதும் ஈண்டு நினைவு கூரற்பாலது. தமிழக ஈழத்தொடர்புகளை ஈழத்திற் காணப்படும் தமிழக நாணயங்களும் பல்வகைக் கற்களாலான மணிகள் ஆகியனவும் உறுதி செய்கின்றன.**

ஆனால், இவர் '**தமிழகத்தோர்**' என்ற வார்த்தைப் பிரயோகத்துடன் நிறுத்திக்கொண்டு விட்டார்! **அறபுக்கள் - முஸ்லிம்கள்** என்றெல்லாம் தெரிவிக்கவில்லை. பேராசிரியர் கா. இந்திரபாலாவை தமது ஆசான்களுள் ஒருவராக வரித்துள்ள இக்கற்றிந்தவர் குருவைப் பின்பற்றவில்லை. ஒருவேளை அடுத்த ஆய்வில் இருக்கலாம்!

இப்பொழுது அபிமானிகளுக்கு உண்டாகும் ஆர்வம், காயல்பட்டினவாசிகளும், அவ்வூரைச் சுற்றியுள்ள பிற ஊர் மக்களும் எப்பொழுது இலங்கை மண்ணை முகர்ந்திருப்பர் என்பதாகவே அமையும்!

புரிகிறது! புரிகிறது!

ஆனாலும் ஏற்கனவே சூசகமாகத் தெரிவித்து இருக்கிறேன்.

*புத்தளத்துக் கலாபூஷணம் ஷாஜஹான் அவர்கள் எடுத்தாண்டிருக்கிற ஆய்வின்படி, கடற்கோளின் தாக்கத்திற்கு முன்னாள் தாமிரபரணி ஆறு இலங்கை வடமேற்கில் தவழ்ந்து கொண்டிருந்த காலத்திலிருந்து ஏற்பட்டிருக்கலாம்.*



அல்லது -

*இலங்கைப் பல்கலைக்கழக அறபுத்துறைத் தலைவராக இருந்த டாக்டர் எஸ்.ஏ. இமாம் அவர்கள் கருத்துப்படி (அது முன் அத்தியாயத்தில் உள்ளது) காயல்பட்டினம் முற்கால அறபுக்களின் கோட்டையாக இருந்து, அங்கிருந்து இலங்கை வந்தடைந்த காலத்தினதாக அமைந்திருக்கலாம்.*

அல்லது -

பாளையங்கோட்டை சதகத்துல்லா அப்பா கல்லூரி வரலாற்றுத்துறைப் பேராசிரியர் எம். முஹம்மது நாசர் தமது ஆய்வுக்கட்டுரையில் இப்படி எடுத்துக் காட்டியிருப்பது போலவும் அமையலாம்.

*இவ்வூரின் கடற்கரையில் இருந்து அரை கிலோமீட்டர் தூரம் வரை கண்டுபிடிக்கப்பட்ட ரோமானிய ரவுலட் பானை ஓடுகள், சீனக் களிமண் பானை ஓடுகள் மற்றும் பிஷப் (ஆயர்) கால்ட்வெல் ஹிஜிரி 71 (கி.பி. 693) எனக்குறிக்கப்பட்ட அறபு நாணயத்தினைப் பார்த்ததாக எழுதியுள்ள செய்தி ஆகியவற்றின் உதவியால் வரலாற்றை ஆராயும்போது, தற்போதைய காயல்பட்டினத்தில் கி.பி. 843-ல் இருந்து கி.பி. 854க்குள் அறபு முஸ்லிம்களின் முதல் குடியேற்றம், கி.பி. 1024-ல் இங்கிருந்து அறபுத் தமிழ் முஸ்லிம்களின் இலங்கைக் குடியேற்றமும் ஏற்பட்டது என்ற உண்மையும் தெளிவாகின்றது.*[11]

*11. 'காயல்பட்டினம் வரலாறும் அதன் தொன்மையும்' - ஆய்வுக்கட்டுரை. புதுக்கோட்டை, நிஜாம் ஓரியண்டல் அறபி உயர்நிலைப் பள்ளி வெள்ளிவிழா மலர் - 1995. பக். 56.*

சந்தேகமேயில்லை!

**எந்த வகையில் ஆய்ந்தாலும், கொய்தாலும் ஆயிரம் ஆண்டுகளைத் தாண்டிவிட்ட அற்புதமே! அற்புதமே!**

அவர்களது வருகை வெறும் வர்த்தகத்தோடோ வாணிபத்தோடோ நின்றுவிடவில்லை.

சமய விழுமியங்கள், கலாசார பண்பாட்டுக் கோலங்கள் பரிணமித்தன.

காதிரிய்யா! ஷாதுலிய்யா!

இரு தரீக்காக்கள் இரண்டு புதையல்களாகக் கிடைக்கப்பெற்றன. ஷாபிஈ மத்ஹபு பரிணமித்தது.

இப்பரிமாணத்தில்-

கீர்த்திமிகு கீழக்கரைக்கும் சமபங்குண்டு என்பதனை நாம் மறந்துவிடலாகாது.

**ஷேக் முஹியித்தீன் அப்துல் காதர் ஜீலானி** (ஈராக்) அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட காதிரிய்யா தரீக்கா, இலங்கையில் பரவுவதற்கு, தமிழகக் கலீஃபாவாகத் திகழ்ந்த காயல்பட்டினம் **ஷெய்கு உமர் ஒலியுல்லாஹ்** அவர்கள் ஒரு காரணம். (ஹி. 1162/கி.பி. 1748). பின்னர் அவர்கள்தம் மைந்தர் **ஷெய்கு அப்துல் காதிர்.** (ஹி. 1191/கி.பி. 1777). அன்னாரது பெயருடன் மற்றுமொரு ஷெய்க் அப்துல் காதிர் அவர்களுக்கும் சம்பந்தம்!



சம்பந்தம் என்றால் சாமான்ய சம்பந்தமா!

மச்சானும் மைத்துனரும்!

**'பெரிய தைக்கா சாஹிப்'** என்ற ஷெய்க் அப்துல் காதிர் அவர்கள், **'சின்ன தைக்கா சாஹிப்'** எனப்பெயர் பெற்ற இந்த ஷெய்க் அப்துல் காதிர் அவர்களது சகோதரியர் இருவரை - ஒருவர் மறைவின் பின் மற்றவர் - மண ஒப்பந்தம் செய்ததன் காரணமாகக் குடும்ப உறவினர்!

முதலாமவர், காயல்பட்டினத்திலிருந்தும், இரண்டாமவர், கீழக்கரையிலிருந்தும் இலங்கையில் தரீக்கா தழைப்பதற்கு ஒப்பற்ற பங்களிப்புச் செய்தனர். இவர்களுடன் மகிமைமிகு **மாப்பிள்ளை லெப்பை** ஆலிம் அவர்களது சேவையும் சேர்ந்தது.

காயல்பட்டினம் பெரிய தைக்கா சாகிபு (ஒலி) அவர்கள் ஹி. 1230/ கி.பி. 1814 வாக்கில், இலங்கை விஜயம் மேற்கொண்டார்களென்றும், தெற்கே மாத்தறை வரை தமது மாணவர்களையும், சீடர்களையும் சந்தித்தார்கள் என்றும் பதிவுகள் உள்ளன. நானும் ஏற்கனவே இதயக்கனிகளில் தந்துள்ளேன்.

அக்காலகட்டத்தில், காயல்பட்டினம் - கீழக்கரை தைக்கா சாகிபுகள் இருவரிடமும் அறவழித்துறைக் கல்வி கற்ற இலங்கையர் ஏறத்தாழ ஆயிரம்பேர் இருப்பர்.

இதேபோல, ஷாதுலி தரீக்காவைத் தோற்றுவித்த **குத்புல் ஆலம் ஹஸன் அஷ்-ஷாதுலி** (மக்ரிப் பிரதேசம்) அவர்களைப் பற்றிய வரலாற்று நூல்களை அறபுத்தமிழில்

அழகுறப் பதித்தவர்கள் காயல்பட்டினம் **நூஹ் லெப்பை** ஆலிம் அவர்களும், நாகப்பட்டினம் **முஹம்மது இஸ்மாயில்** என்பவரும் ஆவர்.[12]

''ஷாதுலிய்யா தரீக்கா இலங்கையில் பரவுவதற்கு அவர்களது நூல்கள் காரணமாகயிருந்திருக்கலாம்'' - எனக்குறிப்பிட்டுள்ளார் ஆய்வாளர் முஹம்மது சமீம்.[13]

அதேநேரத்தில், கடல்மார்க்கமாகத் தென்னிந்தியா - இலங்கை வந்த ஏடன், ஏமன், ஹல்ரமௌத் அறபுக்கள் ஷாபிஈ மத்ஹபைப் பற்றிப் பிடித்தவர்களாக இருந்தனர். 12-ம் நூற்றாண்டில் அய்யூபிகளால் ஏமன் வெற்றி கொள்ளப்பட்ட பொழுது தென் அறேபியாவில் இது பிரதான மார்க்கமாக இருந்தது.[14]

இதன் வளர்ச்சியை அன்றிலிருந்து இன்றுவரை கண்ட வண்ணமே உள்ளோம்.

ஏன், நாளையும் காண்போம். இன்ஷா அல்லாஹ்.

**காயல்பட்டினம் ஷாபிஈ!**

**கீழக்கரை ஷாபிஈ!**

**இலங்கையும் ஷாபிஈ!** (ஆனால் ஒரு சிறு விழுக்காடு ஹனபி மேமன்கள்)

12. *Muslims of Srilanka - A Cultural Perspective - Dr. M.A.M. Shukri. XIII. (1980) P. 352.*
13. *''இலங்கை முஸ்லிம்களின் மத வழிபாடு'' - கட்டுரை. பக். 81. ஆசிரியரது சொந்த நூலான, 'ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சினைகள்' என்ற தொகுப்பிலிருந்து. (1997)*
14. *Muslims of Srilanka - A Cultural Perspective - Dr. M.A.M. Shukri. XIII. (1980) P. 352.*



மகிழ்ச்சி. இனி, நமது கவனத்தில் கொள்ள வேண்டியது, காயல்பட்டினவாசிகள் முதன்முதல் கால்பதித்த இடம்!

இவ்விடயத்தில் பொதுவாகவே பலரும் ஒரு பெயரையே நினைக்கின்றனர்; பேசுகின்றனர்.

நானும் வேறு சில ஆய்வாளர்களும் இதற்கு மாற்றம்!

5-ம் அத்தியாயத்திற்கு உடனடியாக வர நேரம் இருக்குமானால் விவரம் சொல்வேன்.

தயவு செய்து புரட்டுகிறீர்களா?



# 5

*'புதிய புதிய தகவல்கள், தடயங்கள்
கிடைக்கும்போது கருத்துக்கள் மாறலாம்'*

**- திருமதி எஸ். ஜெயா, எம்.எ. எம்.ஃபில்.**
வரலாற்றுப் பேராசிரியை,
எபிசி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி,
தூத்துக்குடி.

## பர்பலீன்! பர்பலீ!

மேலே பார்க்கும் பெயர்களைப் புரியமுடியுமா இந்திய அபிமானிகளுக்கு?

புகழ்பெற்ற மாணிக்க வணிககேந்திரமான வேர்விளை (பேருவளை)க்கு இப்படி பண்டையப் பெயருண்டு. '**பர்பரீன்**' எனவும் திரிபாகியுள்ளது. இலங்கை, தென்மேற்குக் கடற்கரையில் இன்றைக்கும் சிறப்புடன் உள்ள ஊர். இப்பகுதியிலுள்ள சீனன்கோட்டை முஸ்லிம்களின் பெருமை பேசி நிற்கிறது. (ஆனால் கோட்டை கிடையாது! பெயர் மட்டுந்தான்!)

○ **'அறபுக்குடியேற்றங்கள் முதன் முதலாக இங்குதான் நடந்தன. காயல்பட்டினவாசிகள் இங்கே தான் முதலில் காலடி வைத்தார்கள்'**



- என்றெல்லாம் அன்றைக்கும் இன்றைக்கும் பேசப்பட்டு வருகிறது.

○ **'இந்த இடத்தில்தான் (கெச்சிமலைப்பள்ளி) கி.பி. 1024-ல், 'மூர்'கள் எனத்தவறாக அழைக்கப்படும் யவனர்களைக்கொண்ட கூட்டம் கன்னியாகுமரிக்கு வட கிழக்கே அமைந்துள்ள காயல்பட்டினத்திலிருந்து வந்து குடிபுகுந்து தங்களின் முக்கிய சரித்திரப் பிரசித்தம் வாய்ந்த குடியேற்றமாக்கிக்கொண்டவர் எனக் கர்ணபரம்பரையாகக் கூறப்படுகிறது.**

- என டாக்டர் ஆர்.எஸ். புரோஹியர் [1] என்பாரும்,

○ **''இலங்கை 'மூர்' (சோனகர்)கள் தங்கள் இனத்தின் முதல் இடம் காயல்பட்டினம் என மதிக்கின்றனர். கி.பி. 1024-ல் களுத்துறை மாவட்டத்திலுள்ள பர்பரீன் என அழைக்கப்படும் பேருவளையில் முதன் முதலாக வந்திறங்கியதாகவும், இந்தத் தீவில் இது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த குடியேற்றம் எனவும் மதிக்கின்றனர்.**

- என டாக்டர் டென்ஹாம் என்பாரும்,

○ **'இவ்விரு ஊர்களுக்கும் வரலாற்றிலும் இலக்கியத்திலும் தொடர்புண்டு'**

- என இந்திய ஆய்வாளர் தாராசந்த் முதலியோரும் பதித்துள்ளனர்.

---

1. *இவர், இலங்கைக் குடிசன மதிப்பீட்டுத் துணை ஆணையாளராகக் கடமையாற்றியவர். 'இலங்கைக் குடிசன மதிப்பீடு - 1946' - புத்தகம் 1, பாகம் 1, பக்கம் 8-ல் மேற்படி குறிப்பு.*

இவற்றில் சில உண்மைகள் இல்லாமலில்லை.

தாராசந்த் குறித்துள்ளது போல வரலாற்றிலும் (ஆன்மிக) இலக்கியங்களிலும் பின் நூற்றாண்டுகளில் பிணைப்பு ஏற்பட்டதுதான். ஆனால் **'முதன் முதல்'** என்பதில் பலர் முரண்படுகிறார்கள்.

நானும் விதிவிலக்கல்ல!

**'கர்ண பரம்பரையாகக் கருதப்படுகிறது'** என்றுதான் டாக்டர் புரோஹியரும் பதித்திருக்கிறார்.

நாம், முதலிரு அத்தியாயங்களிலும் பழகிக்கொண்ட **'தாமிரபரணி - தம்பபண்ணி - தப்ரபேன் - பொன்பரப்பி' - குதிரைமலை** எல்லாம் புரோஹியருக்கும் டென்ஹாமுக்கும் தட்டுப்படாது போனது துரதிர்ஷ்டம்.

தூத்துக்குடி, வரலாற்றுப் பேராசிரியை திருமதி எஸ். ஜெயா அவர்கள் எடுத்துக் காட்டுவதுபோல, **'புதிய புதிய தகவல்கள், தடயங்கள் கிடைக்கும்போது கருத்துக்கள் மாறலாம்.'**

நல்லது. இந்த அத்தியாயத்தில் ஷாஜஹான் அவர்களைப் போல மற்றுமொரு வடபகுதி (யாழ்) எழுத்தாளரது பதிவுகளையும், மாத்தளை ஆய்வெழுத்தாளர் **ஹாஜி ஏ-ஏ-எம்.புவாஜி** அவர்களது தகவலொன்றையும் **எஸ்.எம். ஹிலாரி** (S.M. Hilary) என்பவர் எழுதிய ஓர் ஆய்வையும் இலங்கைக் கல்வி வெளியீட்டுக் கழகப் பாடநூலின் குறிப்புகளையும் சமர்ப்பிக்க விரும்புகிறேன்.



முதலில் **"யாழ்ப்பாண முஸ்லிம்கள் வரலாறும் பண்பாடும்"** என்ற நூலைப் புரட்டுவோம். இது 22 ஆண்டுகளுக்கு முன் (1979) வெளியானது. யாழ்வாசியும், தற்சமயம் இலங்கைத் தேசியக்கல்வி நிறுவனத்தில் தமிழ்மொழித்துறையில் பிரதம செயற்றிட்ட அதிகாரியாகப் பணியாற்றுபவருமான **எம்.எஸ். அப்துற்றஹீம்** எம்.எட். அவர்கள் தமது சொந்தப் பணத்தைக்கொண்டு அச்சிட்டிருக்கிறார்.

ஒரு தமிழ்ப் பிரதேசமான யாழ்ப்பாணக் குடாநாட்டில் முஸ்லிம்களின் குடியேற்றங்கள் பற்றி மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டு ஆய்வு செய்துள்ளார். அவரை நாம் மனதாரப் பாராட்டி, நூலின் 5-6-19ம் பக்கங்களை முதலில் புரட்டுவோம்.

○ **முஸ்லிம்களின் முதற்குடியேற்றம் நடை பெற்றதாகக் கருதப்படும் எட்டாம் நூற்றாண்டில் கொங்கோணக் கரையிலும், மலையாளக் கரையிலும், மஹல்லதீவு எனப்படும் மாலைத் தீவுகளிலும் நிகழ்ந்திருக்கவேண்டும். அதே காலத்தில் யாழ்ப்பாணம் தொடக்கம் காலிமுனை வரையிலான மேற்குக்கரையின் பக்கமே முதல் முஸ்லிம்களின் குடியேற்றம் நிகழ்ந்திருத்தல் வேண்டும்.**

○ **முதற் குடியேற்றம் வேருவிளை என்பர் பெரும்பாலார். இது சிறிது சிந்திக்கப்பட வேண்டியதாகும். கி.பி. எட்டாம் நூற்றாண்டு அளவில் தமிழர் ஆதிக்கம் இலங்கையின் தென்பகுதி - மேற்குப் பகுதிகளில் குறைவாகவே**

இருந்திருக்கிறது. வடபகுதியே காலத்துக்குக் காலம் நிகழ்ந்த தென்னிந்தியப் படையெடுப்புகளாலும் குடியேற்றங்களாலும் தமிழர் (தமிழ் பேசுவோர்?)[2] செல்வாக்கு மிகுந்து காணப்படுகிறது.

○ இந்த நிலையில் இங்கு முதலில் முஸ்லிம்கள் குடியேறி, மக்கள் மத்தியில் அடைந்த செல்வாக்குக் காரணமாக இந்துக்களின் நல்லெண்ணத்துக்கு இலக்கானதால் உயர்குடியிற் பிறந்த நல்லொழுக்க முடைய இந்துப் பெண்மணிகள் இஸ்லாத்தை ஒப்புக்கொண்டு இவர்களுக்குத் துணைவியராகும் வாய்ப்பைப் பெற்றனர்.

○ இப்படியாகத் தமிழ்ப்பெண்களை அறபியர் மணந்ததனாலேயே அவர்களின் தாய்மொழி தமிழாக இருக்கிறது. முதற்குடியேற்றம் சிங்கள மக்கள் சூழவுள்ள வேருவிளையில் நிகழ்ந்திருந்தால் முஸ்லிம்களின் தாய்மொழி சிங்களமாக ஆகியிருக்கவேண்டும். அத்துடன், சிங்களவரின் பண்பாட்டு அம்சங்களும் நிறைந்திருக்க வேண்டும். மாறாக முஸ்லிம்களின் பண்பாட்டு அம்சங்களில் தமிழர் பண்பாட்டின் செல்வாக்கு நிரவியிருத்தலை நன்கு அவதானிக்க முடியும்.

○ மேலும் அபிசீனியப் பகுதியிலிருந்தும் - முக்கியமாக நீக்ரோவ முஸ்லிம்களும் யாழ். மாவட்டத்தில் குடியேறியுள்ளனர். இவர்கள் இங்கு குடியேறிப் பெரிதும் கடற்றொழில்களிலேயே ஈடுபட்டனர். இவர்களது வழித்தோன்றல்கள்



யாழ்ப்பாணத்திலும் நாச்சுக்குடாவிலும் இருப்பதனைக் காணலாம்.

அடுத்ததாக, "மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள்" என்ற நூலில் 34-35 ஆம் பக்கங்கள். இந்த ஆய்வுநூலை எழுதிய ஹாஜி புவாஜி, மாத்தளை ஸாஹிராவில் அதிபராகவும் இருந்தவர். நல்ல ஆய்வாளர். நமக்கெல்லாம் நண்பர். காயல்பட்டின மண்வாசனையில் இலயிப்பவர். இவர், குறித்திருப்பது இப்படி :

○ சேர். அலெக்ஸாண்டர் ஜோன்ஸ்டன் முஸ்லிம்கள் மத்தியிலே நிலவி வந்த நம்பிக்கைகளை அடிப்படையாக வைத்து, முஸ்லிம்கள் எட்டாம் நூற்றாண்டின் முதல் பகுதியிலே இலங்கை வந்து யாழ்ப்பாணம், மன்னார், குதிரைமலை, புத்தளம், கொழும்பு, காலி, கற்பிட்டி, வேருவிளை போன்ற இடங்களில் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றார். மேலும் இவ்வாறு இங்கு வந்து குடியேறியவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வம்சமான ஹாஷிம் வம்சத்தைச் சார்ந்தவர்கள் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

○ வேருவிளையில் வாழும் பழமையான ஓர் இஸ்லாமிய குடுபத்தவரிடம் இருக்கும் ஓர் ஏடு, வேருவிளையில் முஸ்லிம்கள் குடியேறியதைப் பற்றி சில புதிய தகவல்களைத் தருகின்றது.

○ இந்த ஏடு கூறும் வரலாறு பின்வருமாறு : ஹிஜ்ரி 22இல் (கி.பி. 643-644) யெமன் தேசத்து அரசவம்சத்தைச்

சேர்ந்த பதியுத்தீன், சலாஹுத்தீன், முஹம்மத் என்ற மூவரது தலைமையில் நான்கு கப்பல்கள் யெமன் துறைமுகத்திலிருந்து கீழைத்தேய நாடுகளை நோக்கிப் புறப்பட்டன.

○ இவர்களில் பதியுத்தீன் மலையாளக் கரையோரத்தில் இறங்கிவிட்டார். சலாஹுத்தீன் தென் இந்தியாவைச் சேர்ந்த பெரிய பட்டணத்திலும், சலாஹுத்தீனின் மகன் சம்ஸுதீன் மன்னாரிலும் இறங்கிவிட்டனர். முகம்மதும் அவரது மகனாரும் வேருவிளையில் இறங்கி அங்கு வாழ ஆரம்பித்தனர்.

- இப்படியான குறிப்புக்கு அவர் ஆதாரம் காட்டும் நூல், கலாநிதி காமில் ஆஸாத்தின் "Muslims of Srilanka Under British."

இனி, "History of Muslims in Srilanka" (இலங்கை முஸ்லிம்களின் வரலாறு) என்ற ஓர் ஆங்கில நூலைப் புரட்டுவோம். இதனை எஸ்.எம். ஹிலாரி என்பவர் எழுத, வேர்விளை முஸ்லிம் சங்கத்தார் 1941-ல் பதிப்பித்துள்ளனர். இந்த ஆய்வாளர், ''இலங்கை முஸ்லிம்களின் ஆரம்பகாலக் குடியேற்றம்'' பற்றி எழுதுகையில் -

○ துருக்கி ஆட்சியாளர்களுலொருவரான சுல்தான் ஷெய்க் ஜமாலுத்தீன் இந்தியா செல்லும் வழியில் பதினொரு பேருடன் தற்செயலாக பர்பலீனின் (வேர்விளை) இறங்க வேண்டியதாயிற்று. அப்பொழுது அந்தத் துறைமுகப் பட்டினத்தை (மாளிகாஹேன - வேர்விளை) ஆண்டு



கொண்டிருந்தவன் வஸரத் ஹமிய. வந்தவர்களைக் கடற்கொள்ளையரெனக்கருதி சிறையிலிட்டான். பின் உண்மை புரிந்து நண்பர்களாக்கிக் கொண்டான். அவர்களது மார்க்கத்தையும் தெரிந்து ஏற்றுக்கொண்டான். அரசனது சகோதரி துருக்கி சுல்தானின் மணமகளுமானாள். அவர்களுக்குப் பிறந்த பிள்ளை ஷெய்க் உதும் (உதுமான்) என அழைக்கப்பட்டார். ஏனைய நபர்கள் இலங்கையின் வெவ்வேறு பகுதிகளில் குடியேறினார்கள். அவர்களுள் முக்கியமான ஒருவர் ஷெயிக் மஹ்தூம் பின் ஹிலாரி. அவரது தலைமுறைகள் பல இடங்களில் வாழ்ந்தனர். அவர்களே முதல் குடியேற்றவாசிகள்.

○ மேலும், மேற்படி 11 பேரில் ஒருவரும், வேர்விளையில் வாசஸ்தலத்தை அமைத்துக் கொண்டவருமான பெரியமுதலி மரக்காயருக்கும் அவரது பரம்பரையிருக்கும் வழங்கப்பட்ட வசதிகள், சலுகைகள் பற்றி பெரிய பெருமாள் முகவெட்டு மகாராஜா (அப்போதைய இலங்கையை ஆண்ட சோழ அரசன்) கி.பி. 1018 - மே 7ஆம் தேதியிட்டு அளித்த செப்பேடு (செப்புப்பட்டயம்) ஒன்றும் குறிக்கிறது.

இந்த ஆய்வாளரது இன்னொரு பதிவில் (இதே நூலிலேயே) இப்படி இருக்கிறது :

○ பாக்தாத் மாமன்னர் முகம்மது தாஹிர் பில்லா, இஸ்லாமியப் பிரசாரத்திற்காக அந்நாட்டு பர்பலென் பகுதி

**அறநெறியாளர்களை வேர்விளை (பர்பலீன்)க்கு அனுப்பி வைத்தார். இது, கி.பி. 932 (ஹி. 320)ல் நடந்தது. அவ்வாறு வந்தவர்களுக்குத் தலைமை வகித்தவரது பெயர் காலித் இபுனு அபூபக்கர். அவர், இலங்கையிலேயே ஒய்வுறக்கம் கொண்டார். பக்தாத் மன்னர் அனுப்பி வைத்திருந்த மீஸான் கல்லில், ஹி.337 - ரஜப் 5 (08-01-949) எனப் பொறிக்கப் பட்டுள்ளது.**

இந்தக் குறிப்புகளை, மேலதிக மாவட்ட நீதிபதிகளுலொருவரான எம்.எம்.எ. கபூரும் தமது ஆய்வுக் கட்டுரையில் எடுத்தாண்டிருக்கிறார்.

இப்படியாக, குடும்பமொன்றில் உள்ள ஏடு யெமனிலிருந்து தான் முதல் குடியேற்றம் என்று சொல்ல, மேற்படி எஸ்.எம். ஹிலரி துருக்கி, பக்தாத் என இரு இடங்களைப் பதிக்க நாம் நெற்றியைச் சுளிக்கிறோம்.

காயல்பட்டினம் எடுத்தாளப்படவேயில்லை!

அத்தோடு, **பர்பலீன்** என்றே வேர்விளையைக் குறிப்பிடுகிறார். மற்றவர்கள் **'பர்பரீன்'**.

மேலும், வேர்விளையில் முதல் குடியேற்றம் கண்டதாக அவர் குறிப்பிட்டுள்ள **சுல்தான் ஷெய்க் ஜமாலுத்தீன்** என்பவர்களும், பெருமானார் (ஸல்) அவர்கள்தம் பேரனார் **இமாம் ஹுசைன்** (ரழி) அவர்களது 21வது வழித்தோன்றல், வணிக வல்லவர், ராஜதந்திரி, காயல்பட்டினத்தில் இரண்டாம் அறபுக்குடியேற்றத்தை ஏற்படுத்திய **செய்யிது ஜமாலுத்தீன் அவர்களும் ஒருவரே எனக் கருதி விடவும் கூடாது.**



எகிப்திலிருந்து ஹிந்துஸ்தானுக்கு (இந்தியா)ப் புறப்பட்ட ஐந்து கப்பல்களில் காயல்துறைக்கு வந்து சேர்ந்த (கி.பி. 1284) கப்பலில் இருந்தவர்களே செய்யது ஜமாலுத்தீன் குடும்பத்தினர். அவர்களே பாண்டிய வேந்தன் சுந்தரபாண்டியனுடன் மிக நெருக்கமான தொடர்பு பூண்டிருந்தவர்கள்.[3]

இந்த தகவலில் அபிமானிகள் மிகவும் தெளிவாக இருக்க வேண்டும்.

அடுத்து, சோழ மன்னன் பெரிய பெருமாள், அவன் ஆதரித்த பெரிய முதலி மரக்காயர் பற்றியும் சொல்லப்படுகிறது.

இதில் ஒரு பேருண்மைப் புலப்படும். அது என்னவென்பதை மற்றொரு புத்தகத்தைப் புரட்டிக் காட்டிவிட்டால் தெரிந்துவிடும்.

இலங்கைக் கல்வி வெளியீட்டுத் திணைக்கள வெளியீடாக 1990-ல் வெளியாகி, 1997-ல் எட்டாம் பதிப்பு கண்டுள்ள ஒரு வரலாற்றுப் பாடப்புத்தகத்தைப் புரட்டுவோம். இது, 9-ம் ஆண்டு மாணவர்களுக்காகச் சிங்கள ஆசிரியர்களால் எழுதப்பட்டு தமிழாக்கம் செய்யப்பட்டது. இதன் 52-ம் பக்கத்தில் இப்படி மாணவர்களுக்குப் போதனை:

**○ கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர், இந்து சமுத்திரத்து வர்த்தகம் அறாபியர் வசமானது. அன்று**

*3. முஸ்லிம் தமிழ்ப் பாரம்பரியம் - ஹாஃபிஸ் எம்.கே. செய்யது அஹ்மது, பக். 29.*

**தொட்டு அறாபிய வர்த்தகர்கள் இலங்கையுடன் வர்த்தகத் தொடர்புகளை வைத்திருந்ததாகத் தோன்றுகிறது. பல்வேறு நாடுகளிலிருந்து வந்த பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த வர்த்தகக் குழுவினர் அநுராதபுரத்தில் இருந்தனர் என்பதற்கு ஆதாரங்களுள. இவர்களுள் அறாபிய, பாரசீக வர்த்தகர்களும் இருந்தனரெனக் கூறப்படுகிறது.**

- இந்தப் பதிவில் அறபியர் வருகை மிகவும் தெளிவாகியுள்ளது. குறிப்பிடப்பட்டுள்ள **அநுராதபுரம்,** வடமேற்குக் கரையில் அமைந்த ராஜதானியாக, **'ரஜரட்டை'** என்ற பெயரில் இருந்தது. (இந்நூலின் பின் அட்டையில் உள்ள சர் ஜோன்சன் டெனண்டின் வரைபடத்தில் இது தெளிவாகக் காணப்படுகிறது)

இந்த ரஜரட்டை நிலப்பிரதேசம் ஆதிகால இலங்கையின் அதிகப் பெரும்பான்மை மக்கள் தொகையையும், அதிகளவிலான குடியேற்றங்களையும், பிரதான நீர்ப்பாசனங்களையும் கொண்டிலங்கியது எனலாம். இப்பிரதேசமே **யாழ்ப்பாணம்** (ஜம்புக் கொல), **மாந்தை** (மஹாதித்த), **திருகோணமலை** (கோகான) முதலிய பிரதான துறைமுகங்களையும், **ஊர்காவற்றுறை** (உரதொட), கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்க அம்சமாகும்.[4]

4. *'வரலாற்றுப் பாரம்பரியம் 1796வரை' - கட்டுரை, மரீனா இஸ்மாயில். முஸ்லிம் சமய, பண்பாட்டலுவல்கள் இராஜாங்க அமைச்சு வெளியிட்ட ''அநுராதபுர மாவட்ட முஸ்லிம்கள்'' தொகுப்பு நூலிலிருந்து. பக். 19. (1992).4.*



இத்தகைய அநுராதபுரம், கி.பி. 1017 முதல் 1070 வரையில் சோழர் ஆட்சிக்குட்பட்டிருந்தது.

தென் தமிழ்நாடும் சோழமண்டலமாகத் (கோரமண்டல்) தலைசிறந்து விளங்கியது.

அக்காலகட்டத்தில் அரசர்களுக்கு இன்றியமையாத துணைகளாக இருந்தன இரு பிராணிகள்.

யானை! குதிரை!

**''குதிரை வணிகம் அறபுக்களின் ஒரு பாரிய தொழில்''** - என்பது யாத்ரீகர் மார்க்கோபோலோவின் பதிவு.

உண்மையிலும் உண்மையே!

தமிழகத்தையும், இலங்கை அநுராதபுரத்தையும் ஆண்ட சோழ அரசுக்கு மட்டுமல்ல, அதன்பின் வந்த ஆட்சியாளர்களுக்கும் குதிரைகள் தேவைப்பட்டன. குதிரை வியாபாரிகள் இன்றியமையாதவர்களானார்கள்!

ஹுர்முஸ் துறைமுகத்திலிருந்து இந்தியாவுக்கு ஏற்றுமதியானவை குதிரைகளே![5] என்ற ஒரு தகவலைப் பார்க்கும்போது அங்கிருந்து தான் இலங்கைக்கும் வந்திறங்கியிருக்க வேண்டுமேயல்லாது அறபு நாடுகளிலிருந்து நேரடியாக அல்ல!

5. *Coastal Western India - M.N. Pearson. P. 70. (1981)*

ஏன்? ஏன்?

**அன்னை தமிழே முக்கிய காரணம்!**

ஆட்சியாளர்களது (சோழர் - பாண்டியர்) அரசுமொழி தமிழ்!

வணிகர்களது தாய்மொழி தமிழ்!

○ **அக்கால முஸ்லிம்களின் முக்கிய வியாபாரம் உயர்சாதி அரேபியக் குதிரைகளை இலங்கைக்குக் கொணர்தலும், அவற்றைப் பராமரித்தலும் பாதுகாத்தலும் ஆகும். ரத, கஜ, துரக, பதாதி என்ற நாற்படைகளுள் குதிரைப்படை முக்கியப் பங்கு வகித்தது. அரேபியக் குதிரைகளை இலங்கையில் இனவிருத்தி செய்வது இயலாத காரியம்.**

- என்றொரு முக்கியக் குறிப்பை லேடி ஆன் ப்ளன்ட் என்பார் தந்துள்ளார்.[6]

எம்.எம்.எம். மஹ்றூப் என்ற இலங்கை ஆய்வு எழுத்தாளர், **"குதிரைகள் இருக்கும் வரையில் குதிரை வியாபாரிகளும் இருப்பார்கள் என்ற ஹோராதாவில், அநுராதபுரத்தில் முஸ்லிம்கள் செழித்து வளர்ந்தார்கள் போலும்"** - எனக்குறிப்பிட்டுள்ளார்.[7]

6. *The History of the Arabian Horse - Lady Anne Blunt (1888) London.*
7. *'மஸ்ஜிதுகள்' - கட்டுரை, முஸ்லிம் சமய பண்பாட்டலுவல்கள் இராஜாங்க அமைக்க வெளியிட்ட 'அநுராதபுர மாவட்ட முஸ்லிம்கள்' தொகுப்பு நூலிலிருந்து. பக். 36. (1992).*



**"அநுராதபுரத்தில் காயல்பட்டினத்திலிருந்து வந்த முஸ்லிம்களும் கணிசமான அளவு முக்கியத்துவம் பெற்றிருந்தனர். அவர்கள் வியாபாரிகளாகவே இருந்தனர்"**- என ஏ.பி.எம். ஹுசைனும் குறிப்பிடுகிறார்.[8]

ஆக, இத்தகவல்களையெல்லாம் இணைத்துப் பார்க்கும்பொழுதும், சோழர்களுடைய இலங்கை ஆட்சிகாலத்தோடு (கி.பி. 1017 - 1070) ஒப்பிடும்போதும், தமிழ்நாட்டு முஸ்லிம்கள் - குறிப்பாகக் காயல்பட்டின வாசிகள் - எங்கே வந்திறங்க வசதிப்பட்டிருக்கும் என்பது புலனாகும்.

நிச்சயமாக அது வேருவிளையாக இருக்கமுடியாது.

ஏனெனில், சோழர்கள் இலங்கையை வெற்றிகொண்டு (கி.பி. 1017) இங்கே நுழைவதற்கு முன்பே, கி.பி. 875ல் கமாலுத்தீன் முஹம்மது கல்ஜி தலைமையில் 224 நபர்களைக் கொண்ட ஒரு மரக்கலம் எகிப்திலிருந்து காயல்பட்டினத்தை வந்தடைந்தது.[9] சோழமண்டலக் கரையில் குடியேற்றம் கண்டவர்கள் அறபு முஸ்லிம்கள். சோழ அரசர்களுடன் மிக நெருக்கமான உறவுகளைக் கொண்டிருந்தவர்கள்.

அத்தகையவர்கள், தங்கள் மாமன்னன் அயல்நாட்டையும் (இலங்கை) ஆட்சி செலுத்த ஆரம்பித்துவிட்டான் என்றால் என்ன செய்திருப்பார்கள்? வேர்விளையில் இறங்க ஏழாண்டுகள் வரையிலுமா (கி.பி. 1024) பொறுத்திருப்பார்கள்?

8. *'அநுராதபுரத்தில் முஸ்லிம்கள்' - கட்டுரை. பக்: 33 (1992) மேற்படி தொகுப்பு நூல்.*
9. *முஸ்லிம் தமிழ்ப்பாரம்பரியம் M.K. ஹாபிஸ் செய்யது அஹமது. பக். 15.*

பொறுக்கவில்லை என்பதுதான் உண்மை.

சாட்சி : பெரிய முதலி மரக்காயர்.

முன், எஸ்.எம். ஹிலாரியின் கட்டுரை அறிமுகப் படுத்திய அதே மனிதர்!

அவர், அநுராதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழனின் அனுசரணையில் வட-மேற்குப் பகுதி வழியாக பர்பலீனுக்குள் (வேர்விளை) குடிபெயர்ந்தவராகக் கருதப்படலாம்.

அந்த ஆண்டு 1018 - மே 7ந்தேதி என்பதும் சரியாகவே இருக்கலாம். சோழனும் செப்புப் பட்டயம் கொடுத்திருக்கலாம்.

அவனது ஆட்சி 1017 - 1070களில் அல்லவா!

இந்தப் பேருண்மையைத்தாள் எஸ்.எம். ஹிலாரியின் ஆய்வில் காண்கிறேன்.

அந்தவகையில், ஆர்.எல். புரோஹியர் டாக்டர் டென்ஹாம் போன்றார் குறிப்பிட்டிருக்கும் கி.பி. 1024 என்பது முழுப்பிழையாகப் போய் விடுகிறது!

அதுமட்டுமின்றி, தங்கள் நாட்டு மன்னன், இலங்கை, அநுராதபுரத்தை (ரஜரட்டை) ஆண்டு கொண்டிருக்கும் பொழுது, அங்கே தங்களது வணிகத்திற்கு வசதிகள் இருக்கும்பொழுது, தென்மேற்கிலுள்ள இறங்குவதற்குத் துறைமுகங்கள் இருக்கும் பொழுது, வேர்விளையில் ஏன் போய் இறங்கவேண்டும்?



அதுவும் 'வெறுங்கை, வீசின கை'யோடு - எந்த வணிகமும் இல்லாமல்?

அவ்வாறாயின், காயல்பட்டினவாசிகள் எந்தக் கரையில் தான் காலடி எடுத்து வைத்திருக்கலாம்?

நிச்சயமாக வடமேற்குப் புத்தளத்திலோ - கல்பிட்டியிலோ - குதிரைமலையிலோ தான்!

அல்லது - யாழ்ப்பாணத்து ஊர்காவற்றுறையில்!

இப்பெயர் ஆச்சரியத்தை அளிக்கும்! நினைவில் வைக்கச் சொன்னனே, வைத்தீர்களா!

கொஞ்சம் பொறுங்கள். இன்னும் சிறிது வரலாற்றுக் குறிப்பை வழங்கிவிட்டு அந்த ஊருக்கு வருகிறேன்!

அந்தச் சோழர் கால ஆட்சிக்குப்பிறகு (கி.பி. 1017-1070) அநுராதபுரத்தை **விஜயபாகு** சிலகாலம் ஆண்டான். அப்புறம் **முதலாம் பராக்கிரம பாகு** மன்னன். இவன் பொலநறுவையிலிருந்து ஆட்சி செலுத்த ஆரம்பித்த பொழுது, பாண்டியர்களோடு பழக்கம் கொண்டான். திருமண உறவும் பூண்டான். இவனது காலத்தில் பெருந்தொகையான தமிழர் பொலநறுவை, தம்பதெனிய முதலிய இடங்களில் வாழ்ந்தனர்.[10]

*10. 'தேசீயம் மணக்கும் பண்டைத் தமிழ்ப்பாக்கள்' - கட்டுரை, பல்கலைப்புலவர் க.சி. குலரத்தினம். அன்னார் தேர்குத்த ''தமிழ் தந்த தாதாக்கள்'' நூலிலிருந்து பக். 4. (1987)*

அவனது காலம் 12-ம் நூற்றாண்டு. (கி.பி. 1153-1186). இவன் யாழ்க்குடாநாட்டில் தமிழுக்கு முக்கியத்துவம் அளித்ததுடன், வர்த்தகத் துறையையும் வளமிக்கதாக மாற்றுவதற்கும் காரணகர்த்தாவானான் என்பதற்கு ஒரு தமிழ்க் கல்வெட்டு சாட்சி! காட்சி!

**○ 'நைனா(ர்) தீவுத் தமிழ்க் கல்வட்டு' - எனப் புகழடைந்துள்ள அது, வெளிநாட்டு வணிகர்களுக்கு என்றே - அதி விசேடமாக, தென்னிந்திய வர்த்தகப் பெருமக்களுக்காகவே - பதிக்கப்பட்டது. 'ஊராத் துறைக்கு' வந்திறங்கும் தென்னிந்தியர்கள் யானைகளையும், குதிரைகளையும் கொண்டுவர ஆக்கமும் அளிப்பதற்கான பிரகடனம் அது!**[11]

இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள ஊராத் துறையைப் பார்த்து மிரள வேண்டியதில்லை. ஊர்காவற்றுறை தான்! ஆங்கிலத்தில் Kayts!

ஆக - இந்த 'ஊராத்துறை'யுடனும், குதிரை வணிகத்துடனும் தொடர்பு கொண்டிருந்த ஒரே ஊர் மக்கள் காயல்பட்டினவாசிகளாகவே இருக்கமுடியும்!

பின் காணப்படும் பதிவைப் படிக்கப்போகிற உங்களுக்கு உண்மை மேலும் ஊர்ஜிதமாகும்:

**○ இலங்கையுடனான குதிரை வாணிபத்தில் காயல் முக்கியத் தொடர்பு கொண்டிருந்தது. 12-ம் நூற்றாண்டில்**

*11. "The Nainartivu Tamil Inscription of Parakramabaha" K. Indrapala. University of Ceylon Review. Vol. XXI M:1, 1903 63 ff.*



**வட-இலங்கை ஊராத்துறையில் இறங்கிய குதிரைகள் காயலின் வழியே வந்தவைகளே!**[12] - என எம்.என். பியர்ஸன் வியந்துரைக்கிறார்.

இதன்படி, 12-ம் நூற்றாண்டில் காயலின் வழியே குதிரைகள் வந்தன என்றால், 11-ம் நூற்றாண்டில் வேருவிளையில் இறங்கியபொழுது குதிரைகள் எங்கே போயின? அங்கே கூட அந்த மிருகங்களுடன் தானே இறங்கியிருக்கவேண்டும்?

அப்போதையத் தேவை அவையே!

டாக்டர் ஆர்.எல். புரோஹியரோ, டாக்டர் டென்ஹாமோ அப்படி ஒரு தகவலை தந்திருப்பதாகத் தெரியவில்லையே!

யாழ் - ஊர்காவற்றுறையுடன் காயல்பட்டினம் கொண்டிருந்த தொடர்பும் ஆயிரம் ஆண்டுகளைத் தொக்கி நிற்கிறது.

ஏற்கெனவே தொட்டுக்காட்டியதுபோல் தமிழ்த் தொடர்பு மொழியாக, தொழில் மொழியாகத் திகழ்ந்துள்ளது.

மேலும் - வடக்குவாழ் மக்களது தமிழும், காயல்பட்டினவாசிகளது தமிழும் தூயன. வேருவிளை - காலி - வெலிகாமம் - மாத்தறை மக்களது அப்படியன்று.

உண்மையிலேயே, காயல்பட்டினவாசிகள் வேருவிளையைத்தான் முதலில் கண்டிருந்தார்களென்றால்

*12. 'Merchants of Rulers in Gujarat' - M.N. Pearson. P.2. Berkeley (1976).*

அவர்களது தமிழே செல்வாக்குப் பெற்றிருக்கும். அல்லது சிங்களம் காயல்பட்டினத்திற்குக் கொண்டு போகப் பட்டிருக்கும்'

வாணிக ரீதியாகப் பார்த்தாலுங்கூட, அன்றிலிருந்து இன்றுவரை, வேருவிளை - சீனன்கோட்டை முஸ்லிம்கள் மாணிக்க வியாபாரிகள் மட்டுந்தான்! அவர்கள் முத்தோ, சங்கோ, அரிசியோ, உப்போ, கறுவாவோ, ஏலமோ, கொட்டைப்பாக்கோ விற்றவர்களல்லர். யானை, குதிரைகள் இறக்குமதி செய்தவர்களுமல்லர்!

இத்தனைத் தொழில்களையும் இலங்கையில் செய்தவர்கள் காயல்பட்டினம் - கீழக்கரைவாசிகளே!

மாணிக்கத் தொழிலை மட்டும் வேருவிளை - சீனன்கோட்டையுடன் வைத்துக்கொண்டு மற்றனைத்துத் தொழில்களையும் வடக்கு - கிழக்கு - மேற்கு - தெற்கு என்று பரவலாகச் செய்தார்கள்.

நல்லது. மேலும் நம் ஆய்வு யாழ்க்குடாநாட்டில் தொடருவதாக!

காயல்பட்டின மக்களது வர்த்தகம் 11, 12 என்று 13ம் நூற்றாண்டிலும் தொடர்ந்தது.

ஆனால், அந்த 13-ம் நூற்றாண்டில், முன் தெரிவிக்கப்பட்ட தமிழன்பன் முதலாம் பராக்கிரம பாகுவின் ஆட்சி, ஒரு கலிங்கத்து மாகனிடம் போய்விட்டது! (கி.பி. 1215).

இவன், 12,000 தமிழர்களுடன் நாட்டை ஆளத் தொடங்கினான். இவர்கள் அவனுடனேயே வந்தவர்கள்.



அச்சமயத்தில், பொலநறுவை - அநுராதபுரம் - பதவியா - முதலிய நகரங்களிலும், வடகிழக்கு, வடமேற்குப் பிரதேசங்களிலும் தமிழர்கள் நெருக்கமாகக் குடியேறி இருந்தனர்.[13]

மாகனின் தம்பி **ஜெயபாகுதேவர்** வடக்கில் ஓர் அரசினை உண்டாக்கினான். அவன் கண்ட அரசு 1216ஆம் ஆண்டளவிலாகும். ***வடமராட்சி, ஊர்காவற்றுறை*** முதலிய இடங்களில் படைகள் பரவலாக இருந்தன. ***எல்லா வகைகளாலும் வடக்கில் ஒரு தமிழரசு கலையெடுத்துப் பெருமையுடன் நிலவுவதாயிற்று.***[14] (ஊர்காவற்றுறையில் படைகள் இருந்தன என்றால் குதிரைகளுக்குத் தேவையில்லாமலா இருந்திருக்கும்?)

பின்னர், 1284 ஆம் ஆண்டில் குலசேகர பாண்டியனுக்காக இலங்கை மீது படையெடுத்து வந்த ஆரிய சக்கரவர்த்தி என்னும் படைத்தலைவன், தனக்குச் சாதகமாயிருந்த சூழ்நிலையில் வடக்கில் யாழ்ப்பாணத்து அரசை நிறுவினான். அவனுடைய தலைநகரம் சிங்கை நகர் எனப்பெயர் பெறுவதாயிற்று.[15]

தமிழ்நாட்டுச் சிதம்பரனார் (தூத்துக்குடி) மாவட்ட ஆதிச்ச நல்லூரில் அகழ்வாராய்ச்சியிற் காணப்பெற்ற பொருள்கள் போல, யாழ்ப்பாணத்து ஆனைக் கோட்டையிலும் கண்டெடுத் தார்கள். தமிழ் நாகரிகம் ஈரிடத்தும் ஒரு முகமாக இருந்தது.[16]

*13-14-15-16 'தமிழ் தந்த தாதாக்கள்' - கட்டுரைத்தொகுப்பு. யாழ்ப்பாணம் க.சி. குலரத்தினம். (1987) பக்கங்கள் : 13, 14, 20, 24.*

இதற்கும் ஒரு நூற்றாண்டு கழித்துத்தான் - 14வது நூற்றாண்டில் - பல முஸ்லிம் குடியேற்றங்கள் தென்மேற்குக் கரையோரப் பகுதிகளில் ஏற்படலாயின. கொழும்பு - களுத்துறை - வேருவிளை - வெலிகாமம் ஆகிய ஓடத்துறைகளை அண்டி இந்தக் குடியேற்றங்கள் உண்டாகின. சற்று முன் தரப்பட்ட இலங்கைக் கல்வி வெளியீட்டுப் பாடநூலிலேயே இது சம்பந்தமான பதிவும் உள்ளது.[17]

நமக்குத் தெளிவாக ஒன்று புலப்படுகிறது. இந்த 2001-டன் கணக்கிடும்பொழுது, தென்மேற்குப் பிரதேச வேருவிளை முதலிய ஊர்களின் குடியேற்றம் கிட்டத்தட்ட 700 ஆண்டுகளாகவே இருக்கமுடியும். அதே சமயத்தில், வடமேற்குப் புத்தள, நீர்வள நாகரிகமும் குடியேற்றமும் ஆயிரம் ஆண்டுகளையும் தாண்டிப்போய்க் கொண்டிருக்கிறது.

கடல்கோள் ஏற்படுமுன் தமிழ்நாட்டின் பொதிகைமலைத் தாமிரபரணி இப்பிரதேசத்திலும் ஓடியிருக்கும் சாத்தியம் உண்டு என்பதையும் கருத்துக்கு எடுத்துக்கொண்டால் காயல்பட்டினம் அதற்கு மிகவும் அண்மிய ஒரு துறைமுகப் பிரதேசமே!

காயல்பட்டினக் கரைக்கும் புத்தளக் கல்பிட்டிக் கரைக்கும் பதினாறு மைல் தூரமே என்ற செவிவழிச் செய்தி வெறும் சோடனையாக இருக்கமுடியாது. மன்னாரும் ராமேஸ்வரமும் அப்படித்தானே? இனி, நாம் யாழ்குடா நாட்டிற்குள் நுழைந்து பார்க்கலாமா? வருவீர்களா?

17. 'வரலாறு' - பாடநூல், 9ஆம் ஆண்டுக்குரியது. பக். 52, இலங்கை அரசு கல்வி வெளியீட்டுத் திணைக்களம் முதற்பதிப்பு: 1990. எட்டாம் பதிப்பு : 1997.



# 6

*The Moors of Jaffna are the decendants of one santha saibo and his friends, who came from Kaialpatnam (East of cape commarin) and settled at Mirusuvil South for purposes of trade. They called South Mirusuvil "Usan".*

**- S. Karthigesu**

*A Hand book to Jaffna Peninsula - (1905) P: 17*

## யாழ்ப்பாணம் - ஒரு பார்வை

சென்ற நூற்றாண்டில் பிரச்சினைக்குள்ளாகி இன்னும் தீர்வுக்காக ஏங்கிக் கொண்டிருக்கிற பிரதேசங்களில் ஒன்று யாழ்ப்பாணம்.

நினைத்தவுடன் போகிற சூழ்நிலையா இன்று? எத்தனை சோதனைகள்? எவ்வளவு காத்திருப்புகள்?

அபிமானிகளை வருவீர்களா எனக்கேட்டதே தப்பு! தப்பு!

இந்நூல் அச்சுக்குப் போகிற சமயம் வரையில் அங்கே முஸ்லிம் குடியிருப்பு என்பது இல்லை. வணிகக் கேந்திரங்கள் கிடையாது.

1990, செப்டம்பர் இறுதி வரையில் தமிழ், முஸ்லிம் இன உறவுகள் அற்புதமாக இருந்தன. இவ்விரு மக்களையும் பிரிக்கக்கூடிய எந்தப் பாரிய முரண்பாடுகள் என்றுமே தோன்றியதில்லை.

எவ்வாறு தமிழகத்தில் - குறிப்பாக, தொன்மைமிகு தஞ்சாவூர், திருநெல்வேலி வட்டாரங்களில் - இரு இன மக்களுக்குமிடையே கட்டுக்கோப்பான கலாசாரப் பாரம்பரிய மரபுகள் நிலவி வருகின்றனவோ அவ்வாறே இருந்தன இங்கும்!

அதிலே கண்ணேறு விழுந்தது!

1990, அக்டோபரில், "**முஸ்லிம்கள் குறிப்பிட்ட காலத் தவணைக்குள் வடக்கைவிட்டு வெளியேறவேண்டும். உத்தரவை மீறுபவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவர்**" - என்ற எல்டிடிஈ அறிவிப்பு இடியாக அவர்களை அதிர்ச்சி கொள்ளச் செய்தது.

ஏன் வெளியேறவேண்டும்? - என ஒருவருக்கொருவர் கேட்டுக் கொண்டனர்.

விடைக்குப் பதிலாக பிரியாவிடைதான் பெற்றனர் பாரம்பரிய மண்ணிலிருந்து!

1990 அக்டோபர் 22 - மன்னார்த்தீவு வெளியேற்ற உத்தரவு (48 மணித்தியால அவகாசம்).

1990 அக்டோபர் 24 - முசலி, மாந்தைப் பிரதேசங்களிலிருந்து விரட்டல் (48 மணித்தியால அவகாசம்).



1990 அக்டோபர் 24 - முல்லைத்தீவு, வவுனியா மாவட்டங்களிலிருந்து. (48 மணித்தியால அவகாசம்).

1990 அக்டோபர் 24 - கிளிநொச்சி மாவட்டங்கள் (48 மணித்தியால அவகாசம்).

1990 அக்டோபர் 30 - யாழ்ப்பாண மாவட்டம் (இரண்டே மணித்தியால அவகாசம்).

1990 நவம்பர், வடமாகாணம் முஸ்லிம்கள் அற்ற பிரதேசமாகியது.

தமிழ்ப் பேசும் மக்கள் வரலாற்றில் ஒரு கரைபடிந்த பதிவு ஏற்பட்டது.

வடக்கின் ஐந்து மாவட்டங்களிலுமாக, ஏறத்தாழ 75 குடியிருப்புகளில் வாழ்ந்த 15,240 குடும்பத்தினர் விரட்டப்பட்டனர். ஏறக்குறைய ஓர் இலட்சம். இதில், 12,080 குடும்பத்தினர் புத்தளம், குருநாகல் பகுதிகளிலும், ஏனையோர் கொழும்பு - தெஹிவளை நீர்கொழும்பு - பாணந்துறை - அநுராதபுரம் ஆகிய இடங்களிலும் இன்று சிதறுண்டு கிடக்கிறார்கள்.

இவர்கள் அத்தனை பேருமே பூர்வகுடிகள்! நாம் முன் அத்தியாயங்களில் அலசிய அதே வரலாற்றுப் புகழ்மிக்க புத்தளம் - அநுராதபுரம் போன்ற பிரதேசங்களில் மீண்டும் மறு குடியேற்றம் - அகதிகளாக!

நெஞ்சங்களை நெகிழவும், நெருடவும் செய்யும் ஓர் அம்சம் என்னவெனில், தலைமுறை

தலைமுறையாகத் தமிழ் மக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் வடமண்ணிலே நிலவிய பாசமும் நேசமும், பிணைப்பும் உறவும் அறுத்தெறியப்பட்டுப் போயின. பதினொரு ஆண்டுகள் பறந்தும் விட்டன!

என்னவோ இப்பொழுதுதான் - இவ்வாண்டு மார்ச் பிற்பகுதியில் - ஆளுங்கட்சியைச் சேர்ந்த ஒரு முக்கியமான தமிழ் அரசியல்வாதி, ''முஸ்லிம்கள் மீள்குடியேறுவதற்கு இப்பொழுது யோசிக்கலாம்'' என்றிருக்கிறார்.

மகிழ்ச்சி. இதற்குமேல் அலசிப்பார்க்க இந்த நூல் பொருத்தமாகாது.

நம் வழி தனி வழி!

இருக்கிற இடத்தில் இருந்தவாறு, பார்க்க வேண்டியதைப் பார்ப்பதே சிறப்பு! ஆகவே, யாழ்நகருக்கு அழைத்ததை திரும்பப் பெறுகிறேன்!

நமக்கு முன் அத்தியாயத்தில் அறிமுகமான ஆய்வாசிரியர் யாழ்.எம்.எஸ். அப்துல் ரஹீம் எம்.எட். அவர்களது நூல் இங்கும் துணை!

முதலில், இந்தப் புத்தகம் பற்றிய மேலும் ஒரு முக்கியக் குறிப்பு:

யாழ் மாவட்ட முஸ்லிம்களைப் பொறுத்த வரையில், அவர்களது வரலாற்று நூலாக முழுமையாக எதுவுமில்லை.

சுவாமி ஞானப்பிரகாசர், ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, பேராசிரியர் கே. இந்திரபாலா, கலாநிதி, க. குணராசா போன்றோர், அவசியம் கருதி, கட்டாயத்தில் ஒருசில



பக்கங்களுடன் குறிப்புகள் எழுதி நிறுத்திக்கொள்ள, ஜனாப் **எம்.எஸ். அப்துல் ரஹீம்** அவர்கள்தான். **'யாழ்ப்பாண முஸ்லிம்கள் - வரலாறும் பண்பாடும்'** என்ற ஆய்வு நூலை 1979-ல் பதிப்பித்தார். அதுவும் கைப்பணம் செலவிட்டு!

எனினும், இந்நூலானது ஒரு முழுமையான வரலாற்றுக் குறிப்பாக அமையவில்லை. ஆய்வின் போது ஏற்பட்ட சில தவறுகளை ஆசிரியரே ஒப்புக்கொள்கின்ற போதிலும், திருத்திய ஒரு பதிப்பு வெளியிட எந்தப் புரவலரும் முன் வரவில்லை என்ற போதிலும், அந்நூலின் முக்கியத்துவம் இன்றுவரை பெருமதிப்புமிக்க தொன்றாகவே உள்ளது. இவ்வாறான சிறு வரலாற்றுத் தொகுப்பு நூல்கள் வட பகுதியில் ஏனையப் பிரதேசங்களான முல்லைத்தீவு, மன்னார், வவுனியாவின் முஸ்லிம்கள் பற்றியும் வெளிவந்ததாகத் தெரியவில்லை.[1]

எவ்வாறாயினும், இவ்வத்தியாயத்தினுள் எனக்கு வடபுல முஸ்லிம்களது பாரம்பரியத்தைச் சொல்ல மிகவும் உறுதுணை இந்நூலே!

''ஆரம்பகாலத்தில் முஸ்லிம்களின் பிரதான குடியிருப்புகளாக ஐந்து பகுதிகளை அடையாளம் காணமுடியும்'' - எனக் குறிப்பிடுகிற அப்துல் ரஹீம், அதில் தலையாயது **'அலுப்பாந்தி'** எனத் தெரிவித்துள்ளார்.[2]

---

1. *'வடக்கு முஸ்லிம்களின் வரலாறு எழுதப்பட வேண்டியதன் அவசியம்' - கட்டுரை. முபஸ்ஸிர். - வடக்கு முஸ்லிம்களின் உரிமைக்கான அமைப்பு வெளியிட்ட ''அகதி'' சஞ்சிகை இதழ். 4. 1994. பக். 7-8*
2. *'யாழ்ப்பாண முஸ்லிம்கள் வரலாறும் பண்பாடும்' - பக். 15. (1979)*

அதென்ன அலுப்பாந்தி?

அலுப்புடன் வாசித்துக்கொண்டிருக்கும் உங்களுக்கு அலுப்பு மருந்தா?

விவரத்தைப் படித்ததும் வியப்பு ஏற்படும், உற்சாகம் வரும்.

'அலுப்பாந்தி' என்பது யாழ் நகரில் ஒரு துறைமுகப் பகுதியின் பெயர். இன்றைக்கும் அவ்வாறே அழைக்கிறார்கள். பறங்கித்தெரு - சின்னக்கடை - டச்சுக் கோட்டை மற்றும் காவல் நிலையப் பகுதிகளையும் உள்ளடக்கியதாக உள்ளது அது.

இது, அறபுக்களின் பிரதான வர்த்தகத் துறையாக இருந்ததற்குச் சாட்சியே அலுப்பாந்தி என்ற பெயர்.

அல்ஃபாண்டிகா (Alfandiga) என்ற அறபுவழி வார்த்தையின் மரூஉ. தமிழ்ப்படுத்தினால் 'சுங்கவரிச் சேகரிப்பாளர்'![3]

இப்பகுதியில் இருந்த கடல்துறையில் வந்திறங்கும் பொருள்களுக்கு வரி வசூலிக்கப்பட்டு வந்தது. இங்கே நாள்தோறும் வலம் வந்த அறபு வணிகர்கள் அந்த இடத்தை எப்படி அழைப்பது என்று தெரியாமல் சுங்கம் பெறுபவருக்குரிய அறபுப் பெயரையே வைத்து விட்டார்கள்!

3. *The Kingdom of Jaffna Patam - (1645) P.E. Peitis (1944) - p. 33.*



அடுத்ததாக, சாவகச்சேரி என்ற ஊருக்கும் கொடிகாமத்திற்கும் இடைப்பட்ட மிருசுவில் (மீசாலை) என்ற பகுதி '**குட்டிக் காயல்பட்டினம்**' எனச் சொல்லும்படியாகக் குடியேற்றம் கண்டது!

தென்மராட்சி எனப்படும் இந்த மிருசுவில் தென்பகுதியிலே '**உசன்**' என்றும் ஒரு கிராமம். இப்பொழுதும் அப்படியே அழைக்கப்படுகிறது. உண்மையில் இந்த உசன், ஹுசைன் என்பதன் மரூஉ. அக்காலவட்டத்தில் அப்பகுதியில் அப்பெயர்கொண்ட நிலச்சுவாந்தார் இருந்தார். அவர் காயல்பட்டினவாசியே எனக்கருத எல்லாவகையிலும் நியாயம் உண்டு. மக்கள் அவர் பெயரையே கிராமத்திற்குச் சூட்டினர். இதுபோலவே, கீரிமலையை அண்மியப் பகுதிகளில் **உசுமான் துறை, வலித் தூரண்டல்** என்பவற்றிலும் முஸ்லிம் பெயர்களின் செல்வாக்கைக் காணலாம்.

மூன்றாவதாக, '**சோனகன் புலவு**' - இதுவும் சாவகச்சேரிக்கு அண்மையில் அமைந்துள்ளது. இதுபற்றிய இரண்டொரு குறிப்பை இன்னும் சில பக்கங்களுக்குப் பிறகு தருகிறேன்.

நான்காவது, இப்பொழுது **நல்லூரிலே கந்தசாமிக்கோயில்** அமைந்துள்ள பகுதி.

ஐந்தாவது, நாவாந்துறைக்குக் கிழக்கான பகுதி. (கடந்த நூற்றாண்டில் விடுதலைப் புலிகளால் விரட்டப்பட்டபோது இங்கே தான் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள்).

இதேபோல, யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு வெளியே, **கிளிநொச்சி, பள்ளிக்குடா, நாச்சிக்குடா, பூநகரி** முதலியனவற்றிலும் முஸ்லிம்கள் குடியேறினர்.

**சோனகன் வடலி - சோனகவெளி - சோனகவாடி - சோனக அடி - சோனகரடைப்பு** என்றெல்லாம் சர்வசாதாரணமாகப் பெயர்கள் இன்றும் நின்று நிலவுகின்றன.

**நெயினா(ர்) தீவு, மண்டைத்தீவு, காரைதீவு** ஆகிய தீவுகளிலும் **மண்கும்பா**னிலும் எம்மவர் வாழ்ந்தனர்.

இவ்வாறாக, அறபு முஸ்லிம்களின் செல்வாக்கும், அவர்கள் வழித்தோன்றல்களான காயல்பட்டின மக்களினதும் குடியேற்றமும் வர்த்தகமும் யாழ்க்குடாவெங்கும் படர்ந்திருந்தன.

பதினான்காம், பதினைந்தாம் நூற்றாண்டுகளில் தோன்றியதும், புத்த குருமார்க்ளால் பாடப்பட்டதுமான தூதுப்பிரபந்தங்களாகிய '**கிரா சந்தேசய**' (கிளி விடு தூது), '**திசா சந்தேசய**' மற்றும் '**ராஜாளிய**' நூல்கள் காயல்பட்டினத்திலிருந்து வந்த முஸ்லிம்களின் கடல் ஆதிக்கத்தைப் பற்றியும், அவர்களது வர்த்தகத்தையும் பற்றியும் கூறுகின்றன. தமிழ், காயல்பட்டின முஸ்லிம்களின் தாய்மொழியாகவும் வர்த்தக மொழியாகவும் இருந்த காரணத்தினால் இலங்கை முஸ்லிம்களும் தமிழ்மொழியைத் தாய் மொழியாக ஏற்றனர். ஆரம்பத்தில் அறபு மொழியில் எழுதப்பட்டு 'அறபுத்தமிழ்' என்று பெயர் பெற்ற இப்புது மொழி, கிழக்காபிரிக்காவின் 'சுவாஹிலி' மொழியைப் போன்று வளர்ச்சி பெற்றது என்ற கருத்தை அஸீஸ்



அவர்களும் கலாநிதி சுக்ரியும் வெளியிட்டிருக்கிறார்கள். சுவாஹிலி மொழியுடன் நெருங்கியத் தொடர்பு அறபுத் தமிழுக்கிருந்தது என்று கலாநிதி சுக்ரி கருதுகிறார்.[4]

அதே நேரத்தில் இன்னுமொரு தமிழ்நாட்டு ஊரும் யாழ் மாவட்டத்தில் பேரும் புகழும் பெற்றிருந்தது என்பதனையும் தொட்டுக் காட்டிடவேண்டும்.

**அது, கீர்த்திமிகு கீழக்கரை!**

"நயினாதீவு, மண்கும்பான், மண்டைத்தீவு, காரைதீவு ஆகிய இடங்களில் பெரும்பாலும் முத்துக்குளித்தல், அம்பர் பெறல், சங்குக் குளித்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டவர்களில் கீழக்கரை முஸ்லிம்களின் செல்வாக்கே மிகுந்திருக்க வேண்டும்" - என்று கூறுகிறார் அன்பர் அப்துல் ரஹீம்.[5]

ஆனால், **அவர்கள் காயல்பட்டின வாசிகளுடன் தான் கைகோர்த்து நின்றார்கள் என்பதைச் சொல்ல மறந்துபோனார்!**

அத்தோடு, '**நைனா தீவு**' என்ற தீவுப்பகுதிக்கும் கீழக்கரை மக்களுக்கும் இருந்த ஒரு பெரும் சிறப்பும் அவர் ஆய்வுக்கு வராமல் தவறிவிட்டது!

---

4. *'இலங்கை முஸ்லிம்களின் வர்த்தக வளர்ச்சி' - கட்டுரை. முஹம்மது சமீம். 'ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சினைகள்' என்ற தொகுப்பு நூலிலிருந்து. பக். 77. (1997)*
5. *'யாழ்ப்பாண முஸ்லிம்கள் வரலாறும் பண்பாடும்' - பக். 14. (1979).*

ஒரு காலத்தில் **அந்தத் தீவுக்கே கீழக்கரை லெப்பை நைனார் மரக்காயர் சொந்தக்காரராக இருந்துள்ளார்!** இவரது காலம் ஹி. 1105-1185 / கி.பி. 1693-1772. எனது இலங்கை - கீழக்கரை ஆய்வு நூலில் விவரமாகச் சொல்லியிருக்கிறேன்.[6]

இவ்வாறு இவ்விரண்டு ஊர்களினதும் சிறப்புக்களையும் சீரழிக்க இரு கூட்டத்தினர் கடல் கடந்து வந்தனர். அவர்களது வருகை இந்திய - இலங்கைக் கரைகளின் வாணிக முயற்சிகளைப் பாதித்தது.

போர்த்துக்கேயர் (போர்ச்சுக்கீசியர்), ஒல்லாந்தர் (டச்சுக்காரர்) என வரலாறு பதித்திருக்கும் அந்த அந்நியர் முஸ்லிம்களையே முதல் எதிரிகளாகக் கருதினர்.

○ தமிழ்நாட்டுக் கரைகளில் இந்தப் போர்த்துக்கேயர்கள் சுமார் 74 ஆண்டுகளும் (1501 - 1575), தென்புல இலங்கைப் பகுதிகளில் 151 ஆண்டுகளும் (கி.பி. 1505 - 1656). வடபுல யாழ்க்குடாநாட்டில் 37 ஆண்டுகளும் (கி.பி. 1621 - 1658) அட்டையாக ஒட்டி இயற்கை வளங்களை, உற்பத்திகளை உறிஞ்சினார்கள். ஆன்மிக உணர்வுகளுக்கு அணையிட்டார்கள். பண்பாட்டு விழுமியங்களை வெட்டிப் புதைத்தார்கள்.[7]

யாழ்ப்பாணப் பேச்சு வழக்கிலேயே வர்ணிப்பதாயின், **"அவையனின்றை சேட்டையள் 1526 களிலேயே தொடங்கியாச்சுது கண்டியளே!"**

6. *'இலங்கை கீழக்கரை இனிய தொடர்புகள்' - பக். 45. 45 - 47 (1998).*
7. *'இலங்கை-கீழக்கரை இனிய தொடர்புகள்' - மானா மக்கீன். பக். 35. (1998)*



அந்த ஆண்டில் முஸ்லிம்களை நாடு கடத்தும் உத்தரவை அவர்கள் பிறப்பித்தனர். இது, இந்திய முஸ்லிம் வர்த்தகர்களைப் பாரதூரமாகப் பாதித்தது. அவர்களது தடையுத்தரவு நூறு வருடகாலம் நிலைத்து நின்றது. 1560-களில் யாழ் துறைமுகம் ஊடாக உள் நுழைந்த போர்த்துக்கேயர், 'சோனகர் கிட்டங்கி' எனப்பட்ட இடத்தைச் சூறையாடினர்.[8] பின்னர், 1591-ல் முஸ்லிம்கள் கட்டியிருந்த பண்டக சாலைகளைத் தமதாக்கினர்.[9]

ஆனால், ஒல்லாந்தரோ (டச்சு), போர்த்துக்கேயரைப் போல முஸ்லிம்களை அத்தனை கடுமையாக நடத்தாதபோதிலும், வர்த்தக நடவடிக்கைகளைக் குறைக்கப் பார்த்தார்கள். முஸ்லிம்கள் இறக்குமதி செய்யும் பொருள்கள் மீது ஏராளமான வரி விதித்தனர்.

ஒல்லாந்த கவர்னர் (ஆளுநர்) மாட்சுக்கரின் வரலாற்றுக் குறிப்புக்களிலிருந்து, இலங்கையின் தென்னிந்திய வர்த்தகம் முஸ்லிம்கள் கையிலேயே இருந்தது என அறிகிறோம்.

கண்டி அரசன் யாழ்ப்பாணத் துறைமுகங்களிலிருந்து தென்னிந்தியாவுடன் வர்த்தகம் செய்தான் என்றும், யாழ்ப்பாணத்திலிருந்த முஸ்லிம்கள்தான் இவ்வர்த்தகத்தைச் செய்தார்கள் என்றும் அறிகிறோம்.

8. *'யாழ்ப்பாண வைபவ விமரிசனம்' - சுவாமி ஞானப்பிரகாசர் (1928)*
9. *'யாழ்ப்பாணச் சரித்திரம்' - ஆ. முத்துத் தம்பிப்பிள்ளை - பக். 64 (1933)*

வான்கோயன்ஸ் என்ற மற்றொரு ஆளுநர், யாழ்ப்பாணக் கோட்டைத் தளபதிக்கு எழுதிய கடிதத்தில், ''முஸ்லிம் வியாபாரிகள் கண்டி மன்னனுடைய பெருமதிப்பைப் பெற்றிருந்தபடியால் இவர்கள் மூலம் கண்டி இராச்சியத்தின் இரகசியங்களை அறியலாம்'' என்று கூறியுள்ளார்.

கண்டி மன்னன் யாழ், கோட்டைத் தளபதிக்கு எழுதிய கடிதத்தில் ''முஸ்லிம்களுக்குச் சுங்கவரி விதிக்கக்கூடாது'' என்று கூறுகிறான்.[10]

பட்டினங்களில் வசிக்க ஒல்லாந்தர்கள் அனுமதி மறுத்தார்கள். சில ஊர்களுக்குள் விசேட அனுமதியின்றிப் பிரவேசிக்க முடியாதிருந்தது.[11]

முஸ்லிம்கள் அனைவருமே தமது தொழில், செல்வம் அனைத்தையுமே இழந்து யாரும் துணையற்ற நிலைக்குத் தள்ளப்பட்டார்கள்.

பலரது குடியிருப்புகள் குடி முழுகின. குடாநாடெங்கணும் தறிகெட்டோடி பல்வேறு இடங்களில் புதுக்குடியேற்றம் கண்டனர்.

ஒரு பகுதியினர் **பூநகரி, கரச்சி, சங்கத்தானை வயல்ல, சுண்டிக்குளம்** போன்ற பகுதிகளில் குடியேறி, முல்லைத்தீவு மாவட்ட முஸ்லிம்களுடன் இணைந்தனர்.

10. 'நம் முன்னோரளித்த அருஞ்செல்வம்' - பேராசிரியர் எஸ்.எ. பேக்மன், எம்.எ. ஜி.ஸி. மெண்டிஸ், பீ.ஏ. பிச்.டீ. (1969).

11. 'ஒல்லாந்தரின் ஆட்சிக்காலத்தில் முஸ்லிம்களின் வர்த்தகம்' - கட்டுரை. முஹம்மது சமீம். பக்: 108. ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சினைகள் நூலிலிருந்து.



சிலர் கண்டி ராஜதானிக்கும் குடிபெயர்ந்தார்கள்.

இதில் முக்கியமாகப் பாதிப்புற்றது இரண்டாம் பெரிய குடியிருப்பாக அமைந்திருந்த **மிருசுவில்** ('குட்டிக் காயல்பட்டினம்'). அப்பகுதியின் '**உசன்**' கிராமம். அங்கிருந்து ஒரு தொகையினர், **சாவகச்சேரி**க்கும் (சென்ற ஆண்டில் (2000) இராணுவத்தால் பலத்த அழிவுக்குள்ளாகியிருப்பது) **சங்கத்தானை**க்கும் இடையில் உள்ள பகுதியில் குடியேறினர். அன்று முதல் அது, '**சோனகன் புலவு**' என வழங்கப்படலாயிற்று. இன்று பெயர் மட்டுமே! ஆட்கள் இல்லை!

இச்சோனகன் புலவை, அக்காலக் காயல்பட்டினவாசிகளின் ஓர் அடைக்கல இடமெனச் சொல்லலாம்.

இதையடுத்து, நல்லூரிலும் குடியேறினர். ஏற்கனவே ஓரளவு முஸ்லிம்கள் வாழ்ந்து கொண்டிருந்த இடம். அப்பகுதிக்கு அவர்கள் பெருமளவினராகத் திரண்டதால் ஒரு பள்ளிவாசலின் தேவை உணரப்பட, ஏற்கனவே போர்த்துக்கேயர்களால் இடிக்கப்பட்ட பள்ளிவாசலையே பெரிதாக நிர்மாணித்துக் கொண்டனர். அவர்கள் வாழ்ந்த இடம் '**சோனகர் தோப்பு**' என வழங்கப்பட்டது.[12]

இக்காலத்தில், முஸ்லிம்களின் தலைவராக, வழிகாட்டியாக வாழ்ந்தவர் **முஹம்மது இப்ராஹிம்** என்ற பெரியார். இவரது மறைவில் பள்ளிவாசல் அமைந்த

12. 'யாழ்ப்பாண முஸ்லிம்களும் வரலாறு பண்பாடும்' - எம்.எஸ். அப்துல் ரஹீம். பக். 34. (1979)

நிலப்பரப்பிலேயே அடக்கம் செய்யப்பட்டார். அவரது அடக்கத்தளம் கல்லினால் கட்டுவிக்கப்பட்டது. இது, கோயிலின் மூலஸ்தானத்துக்குப் பின்னால் அமைந்துள்ளது. அது இன்னமும் இடிபடாத நிலையில் உள்ளது. ஒரு பீடம் போலக்கட்டப்பட்டுள்ளது. சூழவர அமைந்துள்ள சுவரில் அடக்கத்தலம் மறைந்து போய் விட்டாலும், கால்மாடு யாரும் காணக்கூடியதாக உள்ளது. அதில் இந்து நிர்வாகிகள், என்றுமே அணையாத விளக்கு ஒன்றை ஏற்றிக்கவனித்து வருகிறார்கள். முஸ்லிம்கள் தரிசிக்க விரும்பினால் இந்து ஆசாரப்படிப் போய் கால்மாட்டை மட்டுமே காணமுடியும்.[13]

இப்பதிவுகள் 22 ஆண்டுகளுக்கு (1979) முந்தியவை. இன்றைய நிலை எவ்வாறென்பதனை நேரில் சென்று காணமுடியாத ஆய்வாளனாக உள்ளேன். எனினும், தற்போது ஆறுமுகசாமி வாசல் அடைக்கப்பட்டுவிட்டது எனவும் தகவல். ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளவேண்டும்.

எவ்வாறாயினும், அங்கு ஓய்வுறக்கம் கொண்டுள்ள பெரியார் முஹம்மது இப்ராஹிம் என்பாரைப் பற்றிய ஓர் ஆய்வு அவசியம். அன்னார், காயல்பட்டினவாசியா அல்லது கேரள மலபார்க்காரரா என்பதை ஆராய வேண்டும்.

இந்த இப்ராஹிம் பெரியாரை, கெய்ரோஸ் என்ற பாதிரியார் தனது வரலாற்றுக் குறிப்பில், சூபி என்று குறிப்பிட்டு, அவரது தலைமையில் ஒரு கலவரம் நடந்ததாகப் பதித்துள்ளார்.

உண்மையில் நடந்தது வேறு.

*13. 'யாழ்ப்பாண முஸ்லிம்களும் வரலாறு பண்பாடும்' - எம்.எஸ். அப்துல் ரஹீம். பக். 36. (1979)*



நல்லூர்க் கந்தசுவாமி கோவிலின் உண்மையான அமைவிடம் நல்லூர் கள்ளியங்காட்டில் யமுனாரி ஏரிக்கு அண்மையிலாகும். அதனைப் போர்த்துக்கேயர் இடித்துவிட்டு, புனித யாகப்பர் ஆலயத்தை நிர்மாணித்தனர். அந்த இடத்தில் மீண்டும் நல்லூர்க் கந்தசுவாமி கோவிலைக் கட்ட முடியாத நிலை ஏற்பட்டது. அந்த சூழ்நிலையில் தான் முஸ்லிம்கள் நெருங்கி வாழ்ந்து ஆயிரம்பேர் வரைத் தொழக்கூடிய பள்ளிவாசல் பகுதியில் புதிய நல்லூர்க் கந்தன் ஆலயத்தை (தற்போதுள்ள இடம்) அமைத்தனர். ஆயினும் அங்குள்ள சியாரத்தை இடித்துவிட முடியாது போனது என்பதே உண்மை.

முஸ்லிம்களின் இந்த நல்லூர்ப் பிரதேச வாழ்க்கையில் ஒரு 'கசப்பான நிகழ்வு' ஏற்பட்டது என்பதையும் இங்கு குறித்துத்தான் ஆகவேண்டும்.

எனக்கு, **ஆ. முத்துத் தம்பிப்பிள்ளை** அவர்களது **"யாழ்ப்பாணச் சரித்திரம்"** தகவல் தருகிறது: அன்னாரது எழுத்துக்களை அப்படியே மறுபிரசுரம் செய்திருக்கிறேன்;

> ○ *முன் இடிபட்ட கந்தசுவாமி கோயிலை மீளவும் கட்டுதற்குத் தமிழர் முயன்று சோனகரை அவ்விடத்தினின்றும் நீக்கித்தருமாறு ஒல்லாந்த தேசாதிபதிக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். ஒல்லாந்த தேசாதிபதி அதற்கனுகூலஞ் செய்வதாக் கூறியும் செய்யாது காலம் போக்கினான். அது கண்டு தமிழர் சோனகரை அவ்விடத்தை விடும்படி கேட்டும் இரந்தும் பார்த்தார்கள். முடிவில் அந்நிலத்துக்குப் பெருவிலை தருவதாயுங் கேட்டார்கள். சோனகர் அதற்கும் இசையாமை கண்டு தமிழர் ஒரு பன்றியைக்கொன்று அவர்களுக்கெல்லாம்*

*பொதுவாயிருந்த கிணற்றிலிட்டார்கள். அது கண்டு சோனகர் தங்கள் நிலத்தை விற்றுவிட்டு நாவாந்துறைக்குக் கிழக்கேயுள்ள இடத்தை வாங்கிக்கொண்டு அங்கே குடியேறினார்கள். அது சோனகத்தெருவென வழங்குகின்றது. சோனகர்கள் அக்காலமுதல் பெரும்பாலும் வியாபாரத்தையே தமது தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றார்கள்.*

*○ அவர்களுள்ளே முயற்சியின்றி இருப்பவர்களைக் காண்பதரிது. அவர்கள் சமயாபிமானமும் ஒற்றுமையும் பெரிதும் உடையவர்கள்.*

- இதே குறிப்புகள் இரண்டொரு மேலதிகமான வர்ணிப்புகளுடன், **''யாழ்ப்பாண வைபவமாலை''** (1949) பக்கம் 60-லும் காணப்படுகிறது. (ஆக்கம் : **மயில்வாகனப் புலவர்**).

இந்த ஒரு சம்பவத்தைத் தவிர, மற்றனைத்து வகைகளிலும் இந்துக்களும் முஸ்லிம்களும் நகமும் சதையுமாகவே இருந்தனர். தமிழர்தம் பண்பாட்டுக் கோலங்கள் தமிழகத்தைப் போலவே இங்கும் புகுந்திருந்தன. போட்டியோ பொறாமையோ இல்லாத வணிக வாழ்வும் காணப்பட்டது.

இதற்கு ஓர் எடுத்துக்காட்டுத்தான் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலங்களில் (1925க்குப்பின்) **''எல்கேஎஸ்''** சகோதரர்கள் காட்டிய முன்மாதிரி!

என்ன முன்மாதிரி?

விவரங்கள் அறிய அடுத்த அத்தியாயத்தை உடன் புரட்டித்தான் ஆகவேண்டும்!







*யாழ்ப்பாணம் முஸ்லிம்களுக்குத் தனித்துவமான ஒரு வரலாறுண்டு. போர்த்துக்கேயருக்கு எதிராகச் சிங்கள மன்னர்கள் நடத்திய போராட்டத்தில் அம்மன்னருக்கு ஆதரவு கொடுத்தது போன்று, போர்த்துக்கேயருக்கு எதிராகத் தமிழ் மன்னர்கள் நடத்திய போராட்டத்திலும் தமிழ் மன்னர்கட்குத் துணையாக நின்றவர்கள் முஸ்லிம் மக்கள்.*

- காலஞ்சென்ற பேராசிரியர் சு. வித்தியானந்தன்.
எம்.ஏ., பிஎச்.டி.
துணைவேந்தர், யாழ். பல்கலைக்கழகம்
யாழ்ப்பாணம்

# ஏ.கே.எஸ். - எல்.கே.எஸ்.

வடக்கின் இருதயமான யாழ்ப்பாணத்தில் காயல்பட்டின முத்திரை மிகச் சிறப்பு பெற்றுள்ளது!

அதற்கு முன்மாதிரி காட்டிய **எல்.கே.எஸ்.** புகழ் அறிவதற்கு முன்னால் ஒரு **மன்னரைப் போல** வாழ்ந்து காட்டிய மனிதர் ஒருவரை அறிந்துகொள்ள வேண்டும்.

அவர்களே மர்ஹூம் **ஏ.கே.எஸ். மொகுதூம் முஹம்மது.**

யாழ் நகரில் **காயல்பட்டின நகைக் கடையாளர்களுக்குச்** செல்வாக்கைப் பெற்றுக்கொடுத்த பெருமை அவர்களைச் சாருகிறது.

1914-லில் அங்கே கால்பதித்து **ஏ.கே.எஸ். ஜுவலர்ஸ்** ஆரம்பித்தார்கள்.

ஹாஜி **முகம்மது முஹிதீன்** என்ற ஒரு புலவரைப் பெரிய தந்தையாகப் பெற்றிருந்த அவர்கள், தமிழ் வளர்ந்த யாழ்ப்பாணத்தில் தடம் பதித்தார்கள். (அந்தப் பெரிய தந்தையார் சங்கைக்குரிய ஷாதுலி நாயகம் மீது புகழ்பாடி அதனை யாழ்ப்பாணத்தில் வெளியிட்டு விழாக் கண்டவர்கள் என்பதும் கவனத்திற்கு வரவேண்டிய ஒன்று). 279ஆம் பக்கம் பார்க்க.

கண்ணாத்திட்டி என்ற இடத்தில் ஏகேஎஸ் நிறுவனம் ஆரம்பிக்கப்பட்ட காலத்தில், ஒரு பவுனின் விலை 12 ரூபாய்கள் தானாம்!

இது, எழுத்தாளர் - ஓவியர் **காயல் இபுனு அப்பாஸ்** (ஏ.லெப்பை சாகிபு) தகவல்.

மதிப்பிற்குரிய மொகுதூம் முஹம்மது அவர்களைப் பற்றிய மேலும் குறிப்புகளை பெறமுடியாத நிலையில் உள்ளேன். ஆனால் அன்னாரிடமிருந்து, தனது 21வது இளம் வயதில் நிறுவனப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட மூத்த மகனார் மர்ஹூம் ஹாஜி **எம்.எம். ஷேகு அப்துல் காதர்** அவர்களைப் பற்றி நிறையத் தெரிய முடிகிறது. அதற்கும் உதவி காயல் இபுனு அப்பாஸ் அவர்களே!



மர்ஹூம் ஷேகு ஹாஜி யாழ்ப்பாணம், வண்ணார்ப் பண்ணை இராமகிருஷ்ணா பாடசாலையின் தயாரிப்பு. அக்காலத்தில் எஸ்.எஸ்.சி. (எஸ்.எஸ்.எல்.சி.) தேர்வுக்குத் தோன்றிய 15 பேரில் அவர் ஒருவரே வெற்றி!

தமது 18 வயது தம்பியார் **எம்.எம். செய்யது அலவி** (மர்ஹூம்) அவர்களுடன், தந்தையாரது நிறுவனத்தை நிர்வகிக்கத் தொடங்கினார்.

பின்னர், 1949ல் தமது மச்சான் ஹாஜி **எஸ்.எல்.எம். தீபி** அவர்களை இணைத்துக்கொண்ட போது **ஏ.கே.எஸ். நகை மாளிகை** யாழ்நகரில் வெற்றிக்கொடி நாட்டியது.

> **○ தனது தந்தையிடம் கற்ற நகைத் தொழிலை தந்தையே பாராட்டும் அளவுக்கு, அதிகமாக விருத்தி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். தங்கள் கடைக்கு வரும் வாடிக்கையாளர் மீது உண்மையான பாசங்களைக் காட்டத் தொடங்கி விட்டார்கள்; நகை வாங்க வரும் ஏழைகளிடம் அன்புடன் நடந்து கொள்வதுடன் மட்டுமல்லாது, தாலிக்குத் தேவையான நகையை மலிவான விலையில் கொடுத்து ஏழைப்பங்காளர்களாகி விட்டார்கள். இதனால் இலங்கை பூராவும் ஏ.கே.எஸ். நகைக் கடையின் புகழ் பரவ வழியாயிற்று. பல ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்களை பெற்றுக் கொண்டார்கள். நகையைக் கலைத்திறனுடன் அமைத்துக் கொடுக்க 250 பத்தர் (ஆச்சாரி)களையும், உள்ளூர்வாசிகளான 15 பேர்களையும், தமது குடும்பத்து மக்களையும் ஊழியர்களாக்கிச் சிறப்புடன் தொழில் நடத்தி வந்தார்கள்.'**

-என வர்ணித்துள்ளார் 'காயல் இபுனு அப்பாஸ்'.(ஏ.எல். லெப்பை சாகிபு), "முத்துச்சுடர்" மார்ச் '84 இதழில்.

இச்சகோதரர்களுக்கு ஹாஜி **எம்.எம். முஹம்மது ரஷீது** என்ற தம்பியாரும் உண்டு. தற்சமயம் காயல்பட்டினத்தில் வாழும் அவருக்கு இலங்கைத் தொடர்புகள் குறைவு.

இவ்வாறாக, அரை நூற்றாண்டுக்கு மேலாக - 57 ஆண்டுகள் ஏ.கே.எஸ். நகை மாளிகை தனது தரமான முத்திரையை இலங்கை வடக்கிலே பதித்திருந்தது.

பின்னர் இலங்கை அரசின் சட்டம் காரணமாகத் தாயகம் மீளவேண்டிய ஒரு சூழ்நிலை ஏற்பட, 1971ஆம் ஆண்டு இலங்கையிலிருந்து வெளியேறித் தமிழக தலைநகரான சென்னையில் அதே 1971ஆம் ஆண்டு ஏ.கே.எஸ். நகைக்கடை அங்கப்பன் (நாயக்கன்) தெருவில் ஆரம்பமானது. அதன்பின் 1973இல் சென்னை நகரின். இதயமான சைனா பஜாரில் கம்பீரமாகத் தொடங்கியது.

இன்று, மர்ஹூம் ஷேகு ஹாஜியாரது நான்கு ஆண் மக்களாகிய **எஸ்.ஏ.சி. மொகுதூம் முஹம்மது, எஸ்.ஏ.சி. முஹம்மது ஷாஃபீ, எஸ்.ஏ.சி. மஹ்முது, எஸ்.ஏ.சி. முஹம்மது ஹாமீது** ஆகியோர் தந்தையாரைப் போலவே நகைத் தொழிலில் நம்பிக்கையையும் நாணயத்தையும் நிலைநாட்டி வருகிறார்கள்.

இவர்களில் இருவரை - ஜனாப்கள் **எஸ்.ஏ.சி. முஹம்மது ஷாஃபீ** அவர்களை என்.எஸ்.சி. போஸ் ரோடு ஏ.கே.எஸ். நகை மாளிகையிலும், ஜனாப் **எஸ்.ஏ.சி. மஹ்முது** அவர்களைப் புரசைவாக்கத்தில் ஜி.ஆர்.எஸ். ஜுவல்லர்ஸ் நகைக்கடையிலும் - ஆய்வுக்காக நேர்முகம் கண்டது பசுமை.



மர்ஹூம்கள் **எம்.எம். ஷேகு அப்துல் காதர், எம்.எம். செய்யது அலவி** முதலியோர் நிழற்படங்கள் நூலின் முன் பக்கங்களில் 'இரத்தினத் துவீபத்தில் மணம்பரப்பியவர்கள்' பகுதியில் இடம்பெற்றுள்ளது.

நல்லது. இப்பொழுது ஒரு முக்கியமான நிகழ்வைச் சொல்ல அடியெடுத்து வைக்கிறேன். உங்களையும் அழைக்கிறேன்.

**கீரிமலை!**

தலப்புராணம் உண்டு.

இலங்கை வடக்கிலே இந்துக்களுக்கு ஒரு முக்கியமான ஆன்மிகத்தலம்.

உளச்சுகத்திற்கும் உடல் சுகத்திற்கும் நீராடி மகிழ்ந்து, பக்தி சிரத்தையுடன் கோயில் தரிசனம் காணக்கூடிய இடம்.

யாழ்நகரிலிருந்து 32 கி.மீ. தூரம்.

என்னைப் போன்றவர்கள், அந்த இளங்காளைப் பருவத்தில் இந்து நண்பர்களுடன் கூடிக்குலாவியவாறு, பழைய கடபுடா பஸ்ஸிலே காங்கேசன்துறைச் சாலையிலே பயணித்து, கீரிமலைக் கேணியிலே (குளம்) குதித்துக் கும்மாளமிட்டது நினைவலைகளாக!

ஆர்ப்பரிக்கும் கடல் அலைகளைத் தழுவியவாறே இக்குளம்.

அற்புதமான நோய் நிவாரண நீரையுடையது என நம்பிக்கை எல்லோரிடமும்.

ஏறத்தாழ எண்பது ஆண்டுகளுக்கு முன்னால் கீரிமலைக் கேணியின் சுற்றாடல் அத்தனை சுகமாக இருக்கவில்லை. அன்றாடம் நூற்றுக்கணக்கிலே மக்கள் கூடுகிற ஓர் இடத்தில் நல்லபடியாக உடைமாற்றிக் கொள்ளவோ குளிக்க விசாலமான துறைகளோ இருக்கவில்லை.

இச்சமயத்தில் தான் **'எல்.கே.எஸ்.'** என்ற மூன்றெழுத்து, யாழ். கண்ணாதிட்டியில் மின்னியது. அது 1925! இந்த இன்சியல்களுக்குப் பின்னால் எழுவர்!

**மர்ஹூம் எல்.கே. லெப்பைத் தம்பி, ஹாஜி எல்.கே. ஷேக் முஹம்மது, மர்ஹூம்கள், ஹாஜிகள் எல்.கே. ஷேக்னா லெப்பை, எல்.கே. ஷம்சுதீன், எல்.கே. முஹம்மது சுலைமான், எல்.கே. காழி அலாவுதீன், எல்.கே. மானாதம்பி. அத்தனைபேரும் சகோதரர்கள். (இந்நூலின் 13-14-15ஆம் பக்கங்களில் படங்கள்.)**

எழுவருக்கும் மூத்தவராகத் தலைமை தாங்கியவர். **'காயல் நகரின் கல்வித்தந்தை'** என இப்பொழுது அழைக்கப்படும் மர்ஹூம், அல்ஹாஜ் எல்.கே. **லெப்பைத்தம்பி** அவர்கள். (26-01-1901 / 16-01-1983).

தமது இளங்காளைப் பருவத்தில் யாழ் மண்ணினை மிதித்து, **"எல்.கே.எஸ் லெப்பை பிரதர்ஸ்"** என்ற பலகையின் கீழ் சகோதரர்கள் துணையுடன் தங்க ஆபரணக்கடை ஆரம்பித்தார்கள். அப்பொழுது, **'எல்.கே. சேகுனா லெப்பை பிரதர்ஸ்'** என்பதே முழுப்பெயர்.



இச்சகோதரர்கள், ஒற்றுமை - ஐக்கியம் என்பதற்கு இலக்கணம் கற்பிப்பவர்களாக இருந்தார்கள்.

சொல்லிலும் செயலிலும், நம்பிக்கை - நாணயம் இரண்டுடன் இன்னுமொன்று இருந்தது.

**அது, மத நல்லிணக்கம்!**

யாழ்ப்பாணத் தமிழ் மக்களுக்குத் தங்களால் இயன்ற உதவியாக என்ன நல்ல காரியம் புரியலாம் எனச் சகோதரர்கள் யோசித்தபொழுது கீரிமலைக்கேணி தான் நினைவில்!

அப்பகுதியைப் புணருத்தாரணம் செய்தார்கள். யாத்திரை வருவோருக்குச் சிலபல வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தார்கள். அறைகள் கட்டப்பட்டு வசதியாக உடை மாற்றிக் கொள்ளும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

இந்துப் பெருமக்களுடனான தங்கள் தொன்மைத் தொடர்புகளை வணிகத்திற்கு வந்த இடத்தில் புதுப்பித்துக் கொண்டார்கள்.

அவர்கள் கீரிமலைக்கேணிப் புணரமைப்புடன் மட்டும் நின்றுவிடவில்லை.

யாழ்நகரின் பல கல்வி நிறுவனங்களுக்கும், பள்ளி வாசல்களுக்கும் பொருளாதார உதவி புரிந்தது

மட்டுமல்லாமல் வேறு பலவழிகளிலும் தங்கள் உதவிக் கரங்களை நீட்டினார்கள்.

குறிப்பாக - வண்ணார்பண்ணை வைத்தீஸ்வராவுக்கு இவர்கள் கட்டிக்கொடுத்த நூல் நிலைய மாடிக் கட்டடமும் ஏனைய உபகரணங்களும் இன்றைக்கும் இருக்கின்றன.

நாளடைவில், **'எல்.கே.எஸ். கோல்ட் ஹவுஸ்'** அருகிலேயே, **'எல்.கே.எஸ். ஜுவல்லர்ஸ்'** பரிணாமம் பெற்றது. கன்னாதிட்டியில், 67-69ஆம் இலக்கங்கள் அனைவருக்கும் மனப்பாடம் ஆயின.

**'தங்கமாளிகை' - 'நகை மாளிகை'** என்று தமிழ்ப் பேசுவோர் அனைவரது நாவிலும் உச்சரிக்கப்பட்டது.

'மாளிகை' என்பதற்குப் பொருத்தமாக யாழ்ப்பகுதி நகைக் கடைகளிலேயே ஆகப் பெரியதாகவும், மிகச்சிறந்த நிறுவனங்களாகவும் திகழ்ந்தன. சுமார் 250க்கு மேற்பட்ட பொற் றொழிலாளர்கள் இரவும் பகலும் அணி அணியாக ஆபரணங்களைச் செய்த வண்ணம் இருப்பர். நிறுவன ஊழியர்கள் எனத் தனியாக 65 பேர்.

அக்காலத்தில் இந்தளவுக்கு அதிக ஆட்களுக்குத் தொழில் வாய்ப்புகள் வழங்கி, சேமலாப நிதி கட்டிய நிறுவனம் அதுவே!

தலைநகர் கொழும்பிலே தூதுவராலயங்களில் பதவி கொண்டிருந்த ஜப்பான், சுவீடன் மற்றும் யூ.என்.ஓ.



அங்கத்தினர் முதலானோரும், ஆஸ்திரிய நாட்டு வணிக அலுவலர், மற்றும் பன்னாட்டுப் பிரமுகர்களும் யாழ்நகர் நோக்கிப் 'படையெடுத்து' (இக்காலத்தைப் போன்றல்ல!) இம்மாளிகைகளின் தரிசனம் பெற்றனர்! நற்காட்சிப் பத்திரங்களை வழங்கினர்.

அதிலொன்று ஜப்பான் தூதுவருடையது. ஆங்கிலத்திலும் ஜப்பானிய மொழியிலும் அமர்க்களம். அடுத்த பக்கத்தில் மறுபதிப்பு.

இதற்குமுன்னதாக, திருச்சிமாநகரில் பெரியகடை வீதியிலும், சென்னை சைனா பஜாரில் கிளை நிறுவனங்களும் அலுவலகங்களும் திறக்கப்பட்டிருந்தன. கொழும்பில், அலுவலகம் மட்டும் இரண்டாம் குறுக்குத் தெருவில் ஸம்ஸ் கட்டடத்தில் இருந்தது.

இந்த எல்.கே. குடும்பத்துத் தலைமகனார் - கல்வித்தந்தை - மர்ஹூம் **எல்.கே. லெப்பைத்தம்பி** அவர்களது மைந்தர் ஆலி ஜனாப் **எல். கனி** அவர்கள் பிரதம நிர்வாகியாகக் கோலோச்சினார்கள். தற்சமயம், காயல்பட்டினத்தில் **எல்.கே. பள்ளிகள் நிர்வாகத் தலைவர்.**

அத்தோடு, குடும்பத்து மருமக்களான மர்ஹூம்கள் ஹாஜி **எஸ்.ஏ. மீரா சாகிபு, எஸ்.ஏ. காதர் சாகிபு, எஸ்.ஏ. சுலைமான் எம்.ஏ., எஸ்.ஏ. ஷேக் முகம்மது** (பாலப்பா) ஆகியோரில், மூத்தவர், அடுத்தவர், இருவரும் யாழ் நிறுவனங்களில் வளர்ச்சியில் பாரிய பங்களிப்பை வழங்கியவர்களாவர்.





மர்ஹூம்கள் **மீராசாகிபு** ஹாஜி யாழ்நகரிலும், **காதர்சாகிபு** ஹாஜி கொழும்பு அலுவலகத்திலும் பொறுப்புகள் வகித்துள்ளனர்.

என்னைப் பொறுத்தவரையில், **'எஸ்.எ. மீராசாகிபு'** என்ற பெயர், பெரும் கிளுகிளுப்பைத் தருகின்றது.

ஏன் தெரியுமா? இன்று **திருச்சி தில்லைநகரில் ஆயிஷா மருத்துவமனையில்** ஒரு தேனீயாக இயங்கிக் கொண்டிருக்கின்ற **டாக்டர் எம்.எஸ். அஷ்றஃப் எம்.டி.** அவர்களது தந்தையாரே மர்ஹூம் ஹாஜி மீராசாகிபு! இவர்களால் யாழ் எல்.கே.எஸ். ஆல் போலத் தழைத்தது என்றால் அது மிகையாகாது

சமீப காலம் வரையில் இந்திய மருத்துவர் சங்கத் தமிழ்நாட்டுப் பிரிவுத் தலைவராகவும் பதவி வகித்து உயர்ந்திருக்கும் **டாக்டர் அஷ்றஃப்** என் போன்ற பேனாக்காரர்களின் வளர்ச்சியிலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துக்கொண்டிருப்பவர்.



*மர்ஹூம் எஸ்.ஏ. மீரா சாகிபு*



*டாக்டர் எம்.எஸ். அஷ்ஃறப்*

மர்ஹூம் **எஸ்.ஏ. காதர் சாகிபு ஹாஜி** அவர்களைப் பற்றியும் திருச்சியில் எனக்குக் கிடைத்த தகவலையும் இந்த இடத்தில் பதித்து மேல் செல்ல வேண்டியவனா கின்றேன்.


*மர்ஹூம் எஸ்.ஏ. காதர் சாகிபு*

1965ல் திருச்சியில் ஜனதா பர்னிச்சர், ஹோட்டல் அரிஸ்டோ என்ற இருபெரும் நிறுவனங்களை - அதாவது நகைத் தொழிலிருந்து முற்றிலும் வேறுபட்ட இரு தொழில்கள் - ஆரம்பித்து பெரும் வெற்றி கண்ட பெருமகனார். 1920ல் பிறந்து 1974லில் **ஓய்வுறக்கம்.**

மேலே தொடர்கின்றேன்...

இருபதாம் நூற்றாண்டு ஆரம்பகாலத்தில், அலைகடலுக்கு அப்பால், இலங்கையில் வடக்கிலே காலூன்றி, **'எல்.கே.எஸ். லெப்பை பிரதர்ஸ்'** என்ற தங்க நகைக்கடையாக ஆரம்பித்த நிறுவனம், இப்போதைய மில்லேனியத்தில் **'ஹவுஸ் ஆஃப் எல்.கே.எஸ்.'** (எல்கேஎஸ் குடும்பம்) எனப் பெயரெடுத்துள்ளது.

இப்பொழுது பார் சிறக்க பவள விழாவைக் கொண்டாடி விட்டது. அல்ஹம்துலில்லாஹ்.

எந்த இலங்கை (யாழ்) மண்ணில், **'கோல்ட் ஹவுஸ்'**, என்றும், **'ஜுவல்லர்ஸ்'** என்றும் பெயர் சூட்டப்பட்டதோ, அவ்விரு பெயர்களும் இப்பொழுது சென்னையிலும்



திருச்சியிலும் பட்டொளி வீசிப் பாரம்பரியம் பேசி நிற்கின்றன.




உதாரணத்திற்கு - சென்னை, தியாகராய நகர் Gold House - தங்க மாளிகை.

இது, உண்மையிலேயே ஒரு தங்கமாளிகையாக உஸ்மான் ரோட்டில் சிறப்பாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது.

சகோதரர்கள், ஹாஜிகள், **எஸ். செய்யது அஹ்மது,** பி.காம்., அவர்களும், **அக்பர்ஷா** பி.ஏ. அவர்களும் இம்மாளிகையின் தூண்கள்.

இவ்விருவருக்கும் பக்கபலமாக மூன்றாவது சகோதரர் ஜனாப் எஸ். இம்தியாஸ் அஹமது பி.காம். அவர்கள் திகழ்கிறார்.


*ஹாஜி எஸ். செய்யது அஹ்மது பி.காம்.,*


*ஹாஜி எஸ். அக்பர்ஷா, பி.ஏ.,*


ஜனாப் எஸ். இம்தியாஸ் அஹமது, பி.காம்.,

இன்று எல்.கே.எஸ். நிறுவனங்களில் 600க்கும் மேற் பட்டோர் பணி செய்கின்றனர். இவர்களால் காயல் பட்டினத்தின் 600 குடும்பங்கள் வாழ்கின்றன என்றால் அது மிகையான குறிப்பு அல்ல!

யாழ் நகரில் எல்.கே.எஸ். பெயரில் நகை மாளிகை நடத்திய சகோதரர்கள் **எல்.கே.எஸ். ஜுவல்லர்ஸ்** என்ற பெயரில் சென்னை, சைனா பஜார் என்ற அழைக்கப்பட்ட N.S.C.. போஸ் ரோட்டில் நகை வியாபாரம் தொடங்கியதும் முக்கிய வரலாறாகும்.

இதன் மூலகர்த்தா **எல்.கே. ஷெய்கு முகம்மது** அவர்கள் ஆவர். 96 வயதைத் தாண்டி இறையருளால் இன்றும் நலமுடன் வாழ்பவர்கள் இந்திய சுதந்திர போராட்ட தியாகி ஆன அவர்கள் பல சத்தியாகிரகங்களிலும் கள்ளுக்கடை மறியலிலும் ஈடுபட்டவர்கள். அல் ஜாமிவுல் அஸ்ஹர் ஜும்ஆப் பள்ளி முத்தவல்லியாக இன்றும் பொறுப்பு வகிப்பவர்கள். **காயில் காந்தி** என்ற சிறப்புப் பெயரும் அவர்களுக்கு உண்டு. அன்னாரை காண்பதும் நன்றே! அவர்களை நான் பலமுறை கண்டுவிட்டேன். திருச்சிக்கு ஒருமுறை பயணம் செய்யுங்கள். (இவர்களது நிழற்படம் இந்நூலின் ஆரம்ப பக்கம் ஒன்றில் **நூற்றாண்டை நோக்கி** இருக்கிறது.

அனைத்தும் புகழும் அவன் ஒருவனுக்கே.



மேலும், மதிப்பிற்குரிய **ஹாஜி அக்பர் ஷா** பி.ஏ. அவர்கள், கல்விக்காகக் கடைசி வரை உயிர்மூச்சு விட்ட பாட்டனாரது (மர்ஹூம், ஹாஜி எல்.கே. லெப்பைத்தம்பி) இலட்சிய வேட்கையைக் கொண்டெடுத்துச் செல்லும் பாங்கும் பிரமிப்பைத் தருகின்றது.

அன்னார், தற்சமயம் **'எல்.கே.எஸ். ஜுவலர்ஸ் எஜுகேசனல் டிரஸ்ட்'** துணைத்தலைவராக இருப்பதோடு, தமது தந்தையார் மர்ஹூம், **எஸ்.ஏ. சுலைமான்** எம்.ஏ., அவர்களது நினைவில் தமது சகோதரர்கள் ஆதரவுடன், **'எஸ்.ஏ. சுலைமான் பிளாக்'** என்ற பெயரில், பல லட்சங்கள் செலவில் பத்து வகுப்பு அறைகள் கொண்ட கட்டடமொன்றைக் காயல்பட்டினம் **எல்.கே. மேனிலைப் பள்ளிக்குக்** கட்டிக் கொடுத்திருக்கிறார்கள்.

அத்துடன் **எல்.கே. மெட்ரிக்குலேசன் பள்ளி** அமைப்பின் தலைவராக இருந்து ஓர் ஆங்கிலப்பள்ளி நடத்தியவாறே, எப்பொழுதெல்லாம் என்னென்ன தேவைகள் ஏற்படுகின்றதோ அப்பொழுதெல்லாம் உதவிக்கரம் நீட்டியவண்ணம் திகழ்கிறார்கள்.

அன்னாரது மூத்த சகோதரர் ஹாஜி **எஸ். செய்யது அகமது** பி.காம் அவர்கள் மேற்படி டிரஸ்டில் செயற்குழு உறுப்பினராகவும் சேவையாற்று கின்றார்கள்.

சென்னை, மண்ணடியில், தொழிலுடன் சமூக சேவையிலும் முன் நிற்கும் என்னருமைத்தம்பி, காயல்பட்டினம் 'லயன்' **எஸ்.எஸ்.எம். சதக்கத்துல்லா** (மா.எஸ். செய்கு ஷம்சுத்தீன் மக்கீ ஹாஜி அவர்களது

இளைய மகனார்) அவர்கள், வள்ளல் அக்பர்ஷா ஹாஜியை நான் நேர்முகம் கண்டிட வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். அவரது ஏற்பாட்டில் நிகழ்வுற்ற சந்திப்பு மிகப்பசுமை. அச்சமயம், எனது பாசமிகு மற்றொரு தம்பி, வள்ளல் **ஹபீபு அரசர்**, வாரிசு கீழக்கரை ஏ.ஜி.ஏ. **றிஃபாய்** அவர்களும் இணைந்திருந்தார்.

அந்தச் சந்திப்பு சிலமணித்துளிகளே! நான் ஆய்வுத் தேடலுக்காகப்படும் அல்லலைக் கண்டு பச்சாதாபம் கொண்டார்கள் அக்பர் ஷா ஹாஜி! தம்மால் யாழ் மண்ணின் தகவல்களை முழுதுமாக அள்ளி வழங்க முடியவில்லையே என ஆதங்கம். ஒரு மனிதநேய ஆர்வலராக என் பார்வையில் பட்டார்கள்.

எவ்வாறாயினும், இப்பொழுது இந்த ஆய்வு நூல் இறைவனது நற்கிருபையால் உருப்பெற்றுவிட்டது. அல்ஹ மதுலில்லாஹ்.

மேற்கண்ட இரு நிறுவனங்களுடன் **எஸ்.டி. அப்துற்றஜ்ஜாக் அன் கோ** கண்ணாதிட்டியில் இயங்கியது

சாளை **எஸ்.டி. அப்துற்றஜ்ஜாக்** ஹாஜி 1929ல் இலங்கை வந்து, 1944ல் காணி **எம்.எஸ்.எம். அப்துல் காதர்** ஹாஜி அவர்களுடன் பங்காளியாக தொடர்ந்து 25 ஆண்டுகள் மேற்கண்ட பெயரில் நகை வாணிபம் செய்து வந்தார்கள்.

இலங்கையின் முக்கியமான நகை வியாபாரிகளுக்கு மொத்தமாக தங்க ஆபரணங்கள் வினியோகித்தார்கள்



கொழும்பு செட்டித் தெரு முழுவதும், இரண்டாம் குறுக்குத் தெரு, பிரதான வீதிக் கடைகளிலும், அனுராதபுரம், வவுனியா, மட்டகளப்பு, இரத்தினபுரி, கண்டி, நீர் கொழும்பு, கேகாலை ஆகிய ஊர்களிலுள்ள நகை வணிகர்களுக்கும் மொத்தமாக நகை விநியோகம் செய்து நற்பெயர்பெற்றார்கள்.

யாழ்ப்பாணத்தில் சுமார் 100 பொற்கொல்லர்களுக்குத் தொடர்ந்து 25 வருடங்கள் வேலை கொடுத்துவந்த நிறுவனமும்கூட

1978ல் **எஸ்.டி. அப்துற்றஜ்ஜாக்** ஹாஜி - காணி **அப்துல்காதர் ஹாஜி** இருவரும் இணைந்து திருச்சியில் **"அரிஸ்டோ ஜுவல்லர்ஸ்"** நகைக் கடை தொடங்கினார்கள்.


காணி சதக்கத்துல்லாஹ்

அவர்களைத் தொடர்ந்து எஸ்.டி. அப்துற்றஜ்ஜாக் ஹாஜியாரின் மக்கள் **ஏ.ஆர். லுக்மான்** ஹாஜி, **ஏ.ஆர். முஹம்மது இக்பால்** ஹாஜி மற்றும் கொழும்பு ஸம்ஸ் பில்டிங்கில் இரத்தின வியாபாரம் செய்து வந்த **எம்.ஐ. முஹம்மது நாகு** ஹாஜியின் மக்களும் தொடர்ந்து அரிஸ்டோ ஜுவல்லர்ஸ் நடத்தி வருகிறார்கள்.

குறிப்பாக ஹாஜி **ஏ.ஆர். முஹம்மது இக்பால்** பல சமூக சேவை இயக்கங்களில் முக்கியப் பொறுப்பில் இருந்து வருகிறார்.

மர்ஹூம் காணி எம்.எஸ்.எம். அப்துல் காதர் அவர்களின் புதல்வர் காணி சதக்கத்துல்லாஹ். இப்போது சென்னைப் புரசை வாக்கத்தில் 'ஸ்டார் ஜுவல்லர்ஸ்' நடத்து கிறார்கள். இவர் யாழ்மா நகரில் கல்வி கற்றவர் களில் ஒருவர்.

ஓ! 'கல்வி' என எழுதும்பொழுதுதான் ஒன்று நினைவில் வருகிறது.

அக்காலங்களில், யாழ்நகரிலும், கொழும்பு ஸாஹிராக் கல்லூரியிலும் கற்றுத் தேர்ந்த காயல்பட்டின வழித்தோன்றல்கள் அனேகர்!

யாழ் வண்ணார்ப் பண்ணை வைத்தீஸ்வராக் கல்லூரி, வருக வருகவென அவர்களை வரவேற்றதற்குச் சான்றுகள் உண்டு. முஸ்லிம் மாணவர்களுக்கு நல்லாதரவு வழங்கிய கலாசாலை அது!

திருவாளர் எஸ். அம்பிகைபாகன் அதிபராக இருந்த காலமாக அமையலாம் என, முன்னைநாள் எல்.கே.எஸ். ஊழியரும், அலியார் தெருவைச் சேர்ந்தவருமான ஜனாப் **எம்.கே.எம். இப்ராஹீம்** (தற்சமயம் கொழும்பில் மாணிக்க வியாபாரி) ஒரு தகவலைத் தந்தார்கள்.

இந்தக் கல்லூரியில், காயல்பட்டினவாசிகள் யார் யார் கல்வி கற்றனர் என்பதற்கு ஒரு சிறு பட்டியலை அவர் வழங்கினார். பார்க்கிறீர்களா?



- ★ **மர்ஹூம் எஸ்.ஏ. சுலைமான். எம்.ஏ.**
- ★ **மர்ஹூம் ஏ.கே. ஷேக் அப்துல் காதர்**
- ★ **ஹாஜி எல்.ஏ. ஜெய்னுதீன்**
- ★ **ஜனாப் டி.ஏ.எஸ். அப்துல் காதர்**
- ★ **ஜனாப் டி.ஏ.எஸ். அபூபக்கர்**
- ★ **டாக்டர் எஸ்.எல். முஹம்மது லெப்பை**
- ★ **சாளை ஐதுறூஸ்**
- ★ **ஜனாப் அப்துல் ரஸ்ஸாக் லுக்மான்**
- ★ **ஜனாப் அப்துல் ரஸ்ஸாக் இக்பால்**
- ★ **ஜனாப் 'தீபி' இத்ரீஸ்**
- ★ **ஜனாப் 'தீபி' இல்யாஸ்**
- ★ **ஜனாப் காணி சதக்கத்துல்லாஹ்**
- ★ **ஜனாப் காணி மிஸ்கீன் சாஹிபு**
- ★ **ஜனாப் காணி முஹம்மது முஹியத்தீன்**
- ★ **ஜனாப் அப்துல் ரசீது**

டாக்டர் முஹம்மது லெப்பை

இதில் குறிப்பிடப்பட்டுள்ள டாக்டர், முஹம்மது லெப்பை அவர்கள், எல்.கே.எஸ். சகோதரர் களுள் ஒருவரான மர்ஹூம் எல்.கே. ஷேக்னா லெப்பையின் புதல்வர். சருமநோய் மருத்துவர். யாழ்நகரில் எஸ்.எஸ்.சி. வரை படித்த அவர்கள், பல பரிசுகளையும், பாராட்டிதழ் களையும் அக்காலத்தில் பெற்றவர். (பெறாமலிருந்தால்தான் கவலை!)

ஜனாப் **டி.ஏ.எஸ். அப்துல்காதர்** அவர்களும், தம்பியார் ஜனாப் **டி.ஏ.எஸ். முஹம்மது அபூபக்கர்** அவர்களும் யாழ்நகரில் கற்கும் காலத்தில் இலக்கியத்துறையிலும் காலூன்ற முயன்றவர்கள்.

ஆளுக்கு ஒரு கையெழுத்து இதழ்கள்! **'கலைச்செல்வி -' தித்திப்பு'** இரண்டுக்கும் தமையனார் ஆசிரியர். இளையரோ **'வெண்ணிலா'** ஆசிரியர் குழுவில்!



ஜனாப் டி.ஏ.எஸ். அப்துல் காதர்

அதே சமயத்தில், சிறப்பான சமூக சேவையாளர்களும்கூட.

ஜனாப் டி.ஏ.எஸ். அப்துல் காதர் அவர்கள், காயல்பட்டின ஜாவியா, திருச்சி முஸ்லிம் இலக்கிய மன்றம் இரண்டிலும் செயற்குழு உறுப்பினரும், திருச்சி முஸ்லிம் பவுண்டேசன் டிரஸ்ட் நிர்வாகியுமாவார்.

ஜனாப் அபூபக்கர் அவர்களோ, காயல் பட்டினம் மருத்துவ அறக்கட்டளை மருத்துவமனையின் (கேஎம்டி) முதல் செயலாளரும் (1990-96) தற்சமயம் செயற்குழு உறுப்பினருமாவார். அது நிறுவப்படுவதற்கு மூலகர்த்தாக்களுள் ஒருவர் என்றாலும் மிகையன்று. (அன்னாரது நிழற்படமொன்றைச் சேகரிக்க முடியாதுபோனது என் துர்ப்பாக்கியமாகும்.)



இவர்களிருவருக்கும் சகோதரர்களாக, ஜனாப்கள் **டி.ஏ.எஸ். உவைஸ், டி.ஏ.எம். முஹம்மது மீராசாகிபு** ஆகியோர் திகழ்கின்றனர். முன்னையவர் திருச்சியின் முன்னைநாள் முனிசிபல் கவுன்சிலர். (இப்பொழுதும் அப்படியே அழைக்கிறார்கள்) முஸ்லிம் கல்வி வளர்ச்சிக்குத் தோன்றாத்துணை. பின்னையவர் துபாய்நாட்டில் பணி.

இந்நாள்வரையும் உருவாக்கிய உத்தமரோ, இரத்தினபுரி - எஹலியா கொடை நகரங்களிலும், கொழும்பு மாநகரிலும் **அப்பா** என அன்புடன் அழைக்கப் பட்ட வணிகப் பெருமகனாராவார் (மேலும் விவரங்கள் அறிய 10-ஆம் அத்தியாயம் வரும்வரை பொறுப்பீர்களாக!)



ஜனாப் டி.ஏ.எஸ். உவைஸ்

இப்பக்கங்களில் ஒருசிலரே இடம்பெற்றுள்ளனர். மேலும் பலரது தகவல்களைப் பெற முயன்றும் ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை.

அத்துடன் அபிமானிகள் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும்.

1505-ல், இலங்கையின் போர்த்துக்கேயர் - டச்சுக்காரர் ஆதிக்கம் ஆரம்பித்ததிலிருந்து முஸ்லிம் சமுதாயமும், அவர்கள்தம் வணிகமும், அறநெறி வாழ்க்கையும் செயலிழந்து போயின. முஸ்லிம் உலகுடனான

தொடர்புகளும் அறுந்தன. வரலாற்றுப் பதிவுகளும் அழிக்கப்பட்டு விட்டன.[2]

எனவே, சுமார் மூன்று நூற்றாண்டுகாலத் தேக்க நிலைக்குப் பின்தான் நமது 'தேடல்' யாழ்ப்பாணத்தில் ஆரம்பித்தது.

இப்பொழுது 'தேனகம்' நோக்கி!

அது எங்கே இருக்கிறது தெரியுமா, இந்திய அபிமானிகளுக்கு?



2. *'மஸ்ஜிதுகளும் மத்ரஸாக்களும்' - எம். அஜ்வத் காஸிம். இலங்கை அரசின் முஸ்லிம் சமய, பண்பாட்டு அலுவல்கள் திணைக்களம் வெளியிட்ட 'கண்டி மாவட்ட முஸ்லிம்கள்' கட்டுரைத்தொகுப்பு நூல். பக். 110. (1996)*



# 8

*மட்டக்களப்பு முஸ்லிம்களின் சரித்திரத்தில் மிக முக்கியமான இடத்தை மட்டக்களப்பு ஆறு பெற்றிருந்தது. ஆதிகால வர்த்தகர்களான அறபியர்கள், பாரசீகர்கள், கிரேக்கர்கள் என்போரும், பிந்திய காலத்தில் இந்திய முஸ்லிம்களும், மட்டக்களப்புத் துறைமுகத்தை நோக்கி வருவதற்கு, புவியியற் (ஜாக்கிரபி) சூழலில் 50 மைல் நீளமுள்ள மட்டக்களப்பு ஆறு இருந்தது காரணமாகும். இதனை, அறபு, இந்தியக் கடல் யாத்திரிகர்கள் வழங்கிய அனுபவக் குறிப்புக்களிலிருந்து விளங்கிக் கொள்கின்றோம்.*

**- எம்.எல்.ஏ. காதர்**
தென்கிழக்கிலங்கைப்
பல்கலைக்கழக உப-வேந்தர்.
'வரலாற்றுப் பாரம்பரியம்' கட்டுரையில்.

# தேனகத்தில் தேடல்!

தேனகம்?

யோசிக்க மாட்டீர்கள்!

முன்பக்கக் குறிப்புப் புரிய வைத்திருக்கும்.

மட்டக்களப்பு மட்டுமல்ல, ஏறாவூர் - காத்தான்குடி, மருதமுனை - கல்முனை - சம்மாந்துறை - சாய்ந்தமருது - அட்டாளச்சேனை அக்கரைப்பற்று அனைத்துமே தேனான தேனகம் தான்!

அப்பகுதிக்கு இப்பெயரை என் பேனா சூட்டுவதற்கு, காயல்பட்டினத்து நெய்யைப் போலத் தித்திக்கும் தேன் மட்டுமல்ல காரணம்! இன்னும் பல!

முதலில் ஒரு வரலாற்றுக் குறிப்பு.

கிழக்குப் பகுதி முஸ்லிம்கள், இலங்கையின் கிழக்குக் கரையோரத்தில் திருகோணமலை, கொட்டியாரம் (கொட்டியார்), மட்டக்களப்புத் துறைமுகங்களிலிருந்தும் தென்னிந்திய முஸ்லிம் நகரங்களான காயல்பட்டனம், கீழக்கரை போன்ற இடங்களுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்தனர். தென்னிந்திய முஸ்லிம்களின் **'சம்பான்கள்'** (தோணிகள்) **கொட்டியாரம், மட்டக்களப்பு, சம்பான்துறை** போன்ற துறைமுகங்களுக்குப் பண்டங்கள் ஏற்றி வந்ததுடன், இலங்கை விளைபொருள்களான பாக்கு, கிராம்பு போன்றவற்றை ஏற்றிச் சென்றார்கள்.



இந்த இடத்தில் ஒரு நெருடல் ஏற்படலாம்.

'சம்பான்துறையா? எங்கே?'' - என்று எனது இலங்கை அபிமானிகளே கேட்பார்கள்.

மருள வேண்டாம். இப்போதைய கிழக்கிலங்கையின் சம்மாந்துறையே சம்பான்துறை!

இன்னும் ஓர் அதிசயம்!

இன்று, 'மட்டக்களப்பு' என ஒரு பிரதேசத்தைக் குறிக்கும் பெயர் ஒரு காலத்தில், தென்கிழக்கில் உள்ள சம்மான்துறையைச் சார்ந்துள்ள களப்புப் பகுதியையே குறித்து வந்திருக்கிறது!

அதுவே மிகப்பிரசித்தி பெற்ற கப்பல் கட்டும் இடமாகவும், வர்த்தகத் துறைமுகமாகவும் போர்த்துக்கேயர் காலத்திற்கு முன்பிருந்தே வந்திருக்கின்றது. போர்த்துக்கேயர் புளியந்தீவில் தமது கோட்டையை (1628) அமைத்து அதனை மட்டக்களப்பு என்று அழைத்ததன் பின்பே மட்டக்களப்பு என்ற பெயர், சம்மாந்துறைக்கு 20 மைல் தூரம் வடக்கே இருந்த பிரதேசத்தைக் குறிப்பதாக மாறியது.[1]

1. *"இலங்கை - கீழக்கரை இனிய தொடர்புகள்" - பக். 67-68.*

'மட்டக்களப்புத் துறைமுகம்' என்று வரலாற்றுக் குறிப்புகள் சொல்வதும், யாத்திரிகர் களின் நினைவுக் குறிப்புகள் சொல்லுவதும் உண்மையில் தென்கிழக்கைச் சார்ந்த **சம்மாந்துறைப் பகுதியையேயாகும்.**[2]

மேலும், ஒல்லாந்தர் (டச்சுக்காரர்) இலங்கையில் முதல் முதல் காலடி எடுத்து வைத்த இடம் சம்மாந்துறையேயாகும் என்பது இங்கு கவனிக்கத் தக்கது. தேதி: 31-3-1602. ஜோரிஸ்வான் ஸ்பில்பேர்கன் அவ்வாறு வந்தான். சம்மாந்துறையில் வாழ்ந்த முஸ்லிம்களோடு உறவாடி கண்டிப் பிரதேசத்தையும் கண்டி மன்னனையும் (விமலதர்ம சூரியன்) அறிந்து கொள்கிறான். அதே மக்களது உதவியோடு மன்னனையும் சந்திக்கிறான்.[3]

அவ்வாறு சந்தித்தவன், போர்த்துக்கேயருக்கு எதிராகப் படைத்துணை வழங்குவதாகவும் சொல்கிறான். இப்படி வரலாறு தன் பாதையில் செல்கிறது.

இன்னும் இரண்டொரு வரலாற்றுக் குறிப்புகளைக் கண்ணை மூடிக்கொண்டு படித்து விடுங்கள்! (அதெப்படி, கண்ணை மூடிக்கொண்டு என்பீர்கள்! யாரோ சொன்னார்கள். நானும் சொல்லிவிட்டேன்!)

2. *'அம்பாறை மாவட்ட முஸ்லிம்கள்' - கட்டுரைத் தொகுதியில் முதலாவது கட்டுரை 'வரலாற்றுப் பாரம்பரியம்' எம்.எல். காதர். பக். 4. (இலங்கை முஸ்லிம் திணைக்கள (இலாகா) வெளியீடு. (1997)*
3. *மேற்படி - பக். 21. (1997)*



மட்டக்களப்புத் துறைமுகத்திற்கும் தென்னிந்திய துறைமுகங்களுக்கும் இடையிலான தொடர்பு நெடுங்காலமாக நிலைத்து நின்ற ஒன்று எனப் பேராசிரியர் அரசரத்தினம் குறிப்பிடுகிறார்.

தென்னிந்திய வர்த்தகம் இலகுவாகவும், தொடர்ச்சியாகவும் எல்லாக் காலங்களிலும் மட்டக்களப்புக் கரையோரப் பகுதிகளில் இடம் பெற்றிருக்கிறது. மதுரை, தஞ்சாவூர், திருநெல்வேலி, தொண்டி, நாகப்பட்டினம், தேவிப்பட்டினம், முசலிப்பட்டினம், கீழக்கரை, காயல்பட்டினம், அதிராம்பட்டினம் ஆகிய துறைமுகங்களிலிருந்து முஸ்லிம்கள் வர்த்தகங்களை மேற்கொண்டிருக்கின்றனர்.

தென்னிந்திய மக்களின் குடியேற்றத்திற்குத் திறந்து விடப்பட்ட இடம் போன்றே மட்டக்களப்புப் பிரதேசம் ஆரம்ப காலத்திலிருந்து காணப்படுகின்றது.[4]

மட்டக்களப்புப் (சம்மாந்துறை) பிரதேசம் கண்டிமன்னன் செனரத் என்பானின் நேரடி நிர்வாகத்தின் கீழ் இருந்ததோடு, கண்டி இராச்சியத்தின் கிழக்குத் துறைமுகமாகவும் இருந்தது. இந்த அரசன், நாட்டின் பல பாகங்களிலிருந்தும் போர்த்துக்கேயர்களால் நாடு கடத்தப்பட்ட 4000 முஸ்லிம்களை இப்பகுதியில் குடியமர்த்தினான்.[5]

4. *'வரலாற்றுப் பாரம்பரியம்' - கட்டுரை. எம்.எல்.ஏ. காதர். 'அம்பாறை மாவட்ட முஸ்லிம்கள்' - ஆய்வுத் தொகுப்பிலிருந்து. பக். 26 (1997)*
5. *'Monograph of Batticaloa. District of Eastern Province' - By Mudaliyar S.O. Kanagaratnam.*

இந்த வகையில், அபிமானிகள் புரிந்துகொள்ள வேண்டிய முக்கியத் தகவல்கள் சிலவும் உண்டு.

வாவியாக (ஆறு) இருந்த நீர்ப்பரப்பில் தென்கரையில் அமைந்திருந்த ஊரே மட்டக்களப்பு. சம்மாந்துறையே இறங்கு துறை.

அது, கண்டி இராச்சியத்தின் கிழக்குக் கரையோரப் பிரதான துறைமுகமாக இருந்தது.

காயல்பட்டினத்திலே ஒரு **முதலிப்பிள்ளை மரக்காயர்** குடும்பத்தினர்., கீழக்கரையிலே ஒரு **பெரியதம்பி மரக்காயர்** குடும்பத்தினர்., தஞ்சாவூர்ப் பிரதேசங்களில் இன்னும் சில மரக்காயர் குடும்பத்தினர்கள் பெரும் வணிகர்களாகத் திகழ்ந்தனர்.

கிழக்குக் கரையோரப் பிரதேசத்தில் வரண்டு கிடந்த தரிசு நிலத்தை நெற்காணிகளாக் மாற்றிய முஸ்லிம்கள், தென்னிந்தியக் கிழக்குக் கரையோர முஸ்லிம் நகரங்களான காயல்பட்டினம், கீழக்கரை போன்ற இடங்களுடன் வணிகத் தொடர்பு வைத்திருந்தார்கள். தென்னிந்திய முஸ்லிம்களின் **'சம்பான்கள்'** (தோணிகள்) பண்டங்களை ஏற்றி வந்ததுடன், இலங்கையில் விளையும் பொருள்களான பாக்கு, கிராம்பு போன்றவற்றை அதிலே ஏற்றிச் சென்றார்கள்.[6]

6. *'கண்டி இராச்சியத்தின் கீழ் இருந்த முஸ்லிம்களின் நிலை' - முஹம்மது சமீம். 'ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சினைகள்' என்ற ஆய்வுத் தொகுப்பிலிருந்து. பக். 129 (1997).*



*(இந்த இடத்தில் '**சம்மான்**' பற்றி ஓர் அலசல்: அரட்டை என்றும் சொல்லலாம்!)*

தோணிகளைக் குறிக்கும் **'சம்பான்'** என்பதன் சரியான உச்சரிப்பு **'சம்பேன்'** என்பதாகும். அது சீன வார்த்தை. இன்றைக்கும் ஹாங்காங் போன்ற இடங்களில் புழக்கத்தில் இருப்பதாக அன்பருள் அன்பர் **எம்.எம். முத்துவாப்பா** அவர்கள் தகவல். இதையெல்லாம் புரியாத கொழும்பு முஸ்லிம்கள், தென்னிந்திய முஸ்லிம்களைச் **'சம்மான்காரர்'** ஆக்கினர். தங்களைச் சோனகர் எனக்கூறி **'உயர் வம்ச'**த்தினராக ஆக்கிக் கொண்டனர். இந்தச் சோனகர் என்ற பெயர் வரலாறு பற்றியும் இவர்களுக்குத் தெரியாது. அதுவும் தென்னிந்திய முஸ்லிம்களைச் சாரும் என்பதை யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை! கேவலமான கேலிக்கூத்து இது!

தனி நூலொன்று எழுதி அறியாமையைப் போக்கவேண்டும். இன்ஷாஅல்லாஹ்.

இதை இந்த அளவில் நிறுத்திக்கொண்டு காயல்பட்டின மண் வாசனையை மட்டக்களப்புப் பகுதியில் நுகர்வோம். வாருங்கள்.

## சொளுக்கார் சகோதரர்கள்

கிழக்கிலங்கையைப் பொறுத்தளவில் காயல்பட்டின 'யவனி' (யவனர்?) வம்சத்தவரே நிறைந்திருந்ததாக வரலாறு.

19-ம் நூற்றாண்டு ஆரம்பப் பகுதிகளிலேயே 'நேனா **மூனா மானா**' என்ற நிறுவனமே பழமை வாய்ந்த

காயற்பட்டின நிறுவனம். அது தெங்குத் தொழிலில் வியாபித்திருந்தது. **ஜமாலிய்யா முத்து அஹமது** அவர்கள் 'நேனா ஈனா மானா'வின் நெருங்கிய உறவினராகவும் பங்காளியாகவும் திகழ்ந்தார்..

அதன்பின் '**சொளுக்கார்**' என்றொரு பெயர், தேனகமாம் மட்டுநகரை வசீகரித்துவிட்டது! கொழும்பிலும் கல்முனையிலும் கிளை பரப்பியது.



சொளுக்கு முகைதீன் அப்துல் காதர்

**முகைதீன் அப்துல் காதர் - செய்யது முகம்மது சாகிபு - முகம்மது தம்பி** ஆகிய மூன்று சகோதரர்கள் 'மூன்று வீரர்'களாகக் காயல் பட்டின மண்ணுக்குப் புகழ் சேர்த்தனர். ஏறத்தாழ நான்கு தலை முறைகளைக் கண்ட நிறுவனத்தினர்.

இந்தச் சொளுக்கார் குடும்பத்துப் பெருமை பேச - வரலாறு சொல்ல - பலர் இருந்தாலும், தொன்னூறு வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் 'ஓர் இளைஞர்' கூறுவதை நாளெல்லாம் கேட்டுக் கொண்டேயிருக்கலாம் அவரும் அக்குடும்பத்தவரே! அவர்கள் இருப்பது குருணாக்களில். அவரை நேர்முகம் காண உள்ளேன். அபிமானிகளும் என்னுடன் வருவீர்கள். சற்று பொறுங்கள்.



''எஸ்.எஸ்.எம். சொளுக்கார் நிறுவனத்திற்குள் ஒருவர் நுழைந்தால் மண்ணைக் கேட்டாலும் தராமல் இருக்க மாட்டார்கள்'' என்கிறார் அப்பெரியவர்.

''எந்தப் பொருளும் எப்பொழுதும் எம்மிடத்தில் இருக்க வேண்டும். இல்லையென்று யாரும் திரும்பிப் போகக்கூடாது'' - என்ற கொள்கையைக் கடைப்பிடித்தாராம் 'பெரிய சொளுக்கார்' (முகையதீன் அப்துல் காதர்).

ஆக - தனியான நிறுவனம் மட்டுமின்றி, எரிபொருள் (பெட்ரோல்) நிலையம், பேருந்து (பஸ்) சேவை, சரக்குகள் கொண்டுபோகும் கொழும்பு - மட்டக்களப்புச் சேவை என வணிக நடவடிக்கைகள் வியாபித்திருந்தன. நிறுவனத்தின் நிர்வாகியாக **நஹ்வி சதக்கத்துல்லா** ஆலிம் அவர்கள் இருந்திருக் கிறார்கள்.



நஹ்வி சதக்கத்துல்லா ஆலிம்

மட்டக்களப்புக்கு அடுத்த பெரு நகரான கல்முனை வரையில் வெற்றிக்கொடி கட்டியிருந்தார்கள். அப்பொழுது அங்கே **எம்.எஸ்.எம். புஹாரி** நிறுவன மொன்றும் தனியாக இயங்கியது. அதன் உரிமையாளராக **மா.செ. முஹம்மது லெப்பை** அவர்கள்! ஆனால் இரண்டையும் பிரித்துப் பார்க்க முடியாத நிறுவனங்களாக இருந்ததே உண்மை!


நூஹு லெப்பை

இதற்கோர் உதாரணமாக, கல்முனை புஹாரி நிறுவனம் முதன் முதல் தொடங்கிய **'நிவ் ஈஸ்டர்ன் பஸ் கம்பெனி'** பேருந்துச் சேவையைத் திருகோணமலை வரை நடத்திய பெருமை சொளுக்காரரையே சேரும். (இப்பொழுதும் ஒரு ஈஸ்டர்ன் பஸ் கம்பெனி அங்கே! ஆனால் பழசுடன் தொடர்பற்றது.) இதன் ஏஜண்டாக நூஹு லெப்பை மாமா அவர்கள் இயங்கினார்கள்.

இப்பொழுதும் மட்டக்களப்பு நகருக்குப் பெருமை சேர்க்கும் **'டவுன் பள்ளிவாசல்'** பார்த்திடவேண்டிய வொன்று!


முத்துவாப்பா ஆலிம்

இத்தகையதொரு பள்ளிவாசல் அமைவதற்கு சொளுக்கார் இணைப்பங்களார் **முத்துவாப்பா** ஆலிம் (தை.மு.க.) அவர்கள் முழுமுதற்காரணமாக இருந்தார்கள். ஊர் ஜமாஅத் ஒத்துழைப்பில் சிறப்பாக்கப்பட்ட இறையோனின் இல்லத்தை நிறுவனத்தினரே நிர்வகித்தார்கள். பல காலம் அறநெறி வாழ்க்கை மட்டுநகரை வியாபித்தது.



இச்சொளுக்கார் சகோதரர்களால் தொழில்ரீதியில் புடம் போடப்பட்டு, தொழில் பழகி பின்னாளில் புகழடைந்த பலரிருந்தனர்.


மர்ஹூம் ஏ.கே. செய்யது அஹ்மது

அவர்களுள் ஒருவர், மர்ஹூம் **'கண்ணாடி ஆலிம்சா'** (பெயரை மறந்தேன்!) இன்னொருவர் அல்ஹாஜ், மர்ஹூம் ஏ.கே. **செய்யது அஹ்மது.** முன்னையவர் நாட்டு மருந்துக் கடையொன்று தனியாக நடத்திப் புகழடைந்தார். அடுத்தவர், 1980 - 1994களில் காயல்பட்டினம் எல்.கே. மேனிலைப்பள்ளித் தாளாளராகச் சேவையாற்றிச் சிறந்தார்.

மேலும், பின் காணப்படும் காயல்பட்டின நிறுவனங்களும், தேனகமாம் மட்டுநகர் மத்தியில் இருந்தன:

**அஸ் - ஹாபியா ஸ்டோர்ஸ்** (மர்ஹூம் **அப்துல் மஜீத்)**

**'விளக்கு' நிறுவனம் (அல்-ஹாஃபிஸ் முகம்மது உமர் ஆலிம்)**

**'ஃபார்ம் அவுஸ்' (பண்ணை அகம்) - அல்ஹாபிஸ் மர்ஹூம் எம்.கே. செய்யது அஹமது.**

**கபீர் ஸ்டோர்ஸ்.** (மர்ஹூம் **முகையதீன் தம்பி)**



கம்பல் பக்ஷ்



மர்ஹூம் எம்.கே.
செய்யது அஹமது

**'நஹ்வி ஸ்டோர்ஸ்.' (முஹம்மது இஸ்மாயில் ஆலிமுல் முஃப்தி)**

**எம்.கே.எம்.டி. ஷாகுல் ஹமீது அன் கோ**

**என்.கே.எஸ்.கே. கம்பெனி - கம்பல் பக்ஷ்.**

இனி நான், இரு தனி மனிதர்களைப் பற்றியத் தகவல்களைத் தர விருப்பம்.

ஒருவர் - அல்ஹாஃபிஸ், மர்ஹூம் **எம்.கே. செய்யது அஹமது.** மற்றவர், யூசுப் ஸாஹிபு.

மர்ஹூம் செய்யது அஹமது அவர்களை, எனது இளவயதில், கொழும்பு-13 ஆட்டுப்பட்டித்தெரு ரெயின்போ அச்சகத்து **'இளம்பிறை' இலக்கியப் பண்ணையில்** அறிமுகமாகிக்கொண்டேன்.



உதவியவர், மேற்படி நிறுவனராகவும் ஆசிரியராகவும் இருந்த **எம்.ஏ. ரஹ்மான்** அவர்கள். (இப்பொழுது, சென்னை, கோடம்பாக்கத்தில் 'மித்ர'ப் பதிப்பகத்தைத் தொடர்கிறார்).

ஒரு காயல்பட்டினத்து ஹாஃபிஸை, முஸ்லிம் எழுத்தாளர் சங்கம், கொழும்பு இலக்கியவட்டம் ஆகியவற்றின் தலைவராகவும், அனைத்திலங்கை எழுத்தாளர் கூட்டமைப்புத் துணைத் தலைவராகவும் நேருக்கு நேர் கண்டதில் ஒரு தனி அனுபவம் பெற்றேன். அவரது 'பண்ணை அகம்' மட்டுநகரிலும், கொழும்பிலும் (டாம் வீதி) இயங்கிக் கொண்டிருக்க, அவர் இலக்கியத்தில் சங்கமித்துக் கொண்டிருந்தார்.

தொடர்ந்தும் பழகிக்கொள்ள சிலரது இடையூறுகள் இருந்தன. இப்பொழுது அவற்றை நினைத்துத் துவளக்கூடாது. சென்றவை சென்றவைகளாக இருக்கட்டும். இனி நடப்பவை நல்லவைகளாகட்டும்.

அன்னார் பல நூல்களின் ஆசிரியர். அதில் தலையாயது **'முஸ்லிம் தமிழ்ப் பாரம்பரியம்'**. அரசு வெளியீட்டின் பதினாறாவது நூலாக, நான் குறிப்பிட்ட பால்ய நண்பர் **எம்.ஏ. ரஹ்மான்** அவர்கள் பதிப்பித்து 1968ல் வந்தது. இலங்கை-காயல்பட்டின இனிய தொடர்புகளை அடையாளமிடும் ஆய்வு நூலாகவும் கொள்ளலாம்.

○ **'வர்த்தகப் பிரமுகராக இருந்துகொண்டே தமிழ்ப்பணி - இலக்கியம் - கலை - வரலாறு - ஆராய்ச்சி ஆகிய பலதரப்பட்ட துறைகளிலெல்லாம் ஈடுபாடுடைய**

**விந்தை மனிதராக நம் மத்தியில் வாழும் ஹாபிஸ் எம்.கே. செய்யிது அஹமது'**

- என அன்பர், 'இளம்பிறை' எம்.எ. ரஹ்மான் அன்று '68ல் பதித்திருக்கிறார்.

முற்றிலும் உண்மை. இன்று, இந்த ஆய்வின்பொழுது அவரில்லையே என ஏங்குகிறேன்.

மற்றவர் - **யூசுப் ஸாஹிபு.**

நான், இவரை அறிந்தவனல்லன். அறிந்தவர் - அதுவும் நன்கு அறிந்தவர் - ஒருவர் இருக்கிறார். அதுவும் ஆஸ்திரேலியாவில்!

**''எஸ்.பொ'' (எஸ். பொன்னுத்துரை)** என்ற அந்த இலக்கியவாதி யாழ் - மண்ணின் மைந்தனாக மலர்ந்து மட்டக்களப்பில் குடியேறிப் பலருக்கு 'நற்போக்கு' போதித்த நல்லாசானாகவும் திகழ்ந்தவர்.

அச்சமயத்தில் தான் **''எஸ்.பொ.''**, காயல்பட்டின யூசுப் சாஹிபு அவர்களைக் காண்கிறார்; பழகுகிறார்; பதிக்கிறார் பேனாவில்!

**❍ என்னிடம் ஏராளமான முஸ்லிம் மாணவர்கள் தமிழும் சரித்திரமும் கற்றுத் தேறினார்கள். அவர்களுள் காயல்பட்டினத்தைப் பூர்வீகமாகக் கொண்ட யூசுஃப் சாஹிபு என்ற மாணாக்கரை நான் என் வாழ்நாளில் என்றும் மறக்கமாட்டேன். அவருடைய பங்களிப்பினை நன்றி மறவா மட்டக்களப்பு மண்ணும் மறக்காது என்றே நம்புகின்றேன். மாணாக்கராக இருந்து கொண்டே, கலை - இலக்கிய - உடல் நல முயற்சிகளுக்கு அவரைப் போன்று ஆக்கமும் ஊக்கமும் அளித்த பிறிதொரு மாணாக்கனை நான் இன்னமும் என் வாழ்நாளிற் சந்திக்கவேயில்லை. அவர் மட்டக்களப்புத் தமிழ்க்கலா மன்றத்தின் உயிர் மூச்சாகவும் இயக்க சக்தியாகவும் இயங்கினார். புலவர் மணி ஏ.பெரிய தம்பிப் பிள்ளை கவிதைத் துறையிலும், வித்துவான் எப்.எக்ஸ்.சி. நடராஜா வரலாற்றுத் துறையிலும், செ. இராஜதுரை எம்.பி. பேச்சுத் துறையிலும், எஸ். பொன்னுத்துரை புனைகதைத் துறையிலும் ஆற்றிய சேவைகளைக் கௌரவிக்கும் முகமாக அம்மன்றம் பெருவிழா ஒன்றினை எடுத்தது. நால்வரும் பாவாரங்களும் பொற்பதக்கங்களுஞ் சூட்டிக் கௌரவிக்கப்பட்டார்கள். தமது முன்னோர்களின் வழி நின்று, இந்தத் தங்கப் பதக்கங்களை உபகரித்தவர் யூசுப் ஸாகிபு என்பதை அறிந்த பொழுது நான் அசந்து போனேன். இவ்வாறு கலை - இலக்கியப் பணிகளுக்குக் கை சிவக்கும் அளவுக்கு அள்ளிக் கொடுத்தார். அவருடைய உறவினர்களே மட்டக் களப்புப் பள்ளிவாயிலைப் பராமரித்தார்கள்.**[5]



அவர்தம் இதயத்தில் நிறைந்த யூசுப் சாஹிப் அவர்களைப்பற்றி மேலும் தகவல்களை அறிவதில் முயன்றபொழுது ஆலிஜனாப் **காயல் மகபூல்** அவர்கள், 1990-களில் வெளியிட்ட **'காயல்பட்டினம் தேர்வுநிலைப் பேரூராட்சி நூற்றாண்டு நிறைவு சிறப்பு மலர்'** பக்கங்களில் சில கண்டேன்.

*5. 'இஸ்லாமும் தமிழும்' - என். பொன்னுத்துரை. பக். 48-49 (1975).*

★ **கிழக்கிலங்கையில் யூசுப் அவர்கள் இலக்கிய ஆர்வலராக மட்டுமின்றி, இலக்கியவாதியாகத் திகழ்ந்துள்ளார். 16ஆம் வயதில் கவி பாடத் தொடங்கிய ஒரு தந்தைக்கு (ஹாஜி எஸ்.எஸ். செய்கு அப்துல் காதர் - முன்னாள் பஞ்சாயத்து போர்டு தலைவர்) மகனார்! இருவருமே கவிஞர்கள்! தந்தையார் மரபுக்கவிதை. மகனார் புதுக்கவிதை. அவர், 'பாவலர் அப்பா'. இவர், 'பாவலர் யூசுப்' பிற்காலத்தில் தினத்தந்தியிலும் பணியாற்றி, "முத்துச்சுடர்" சஞ்சிகையில் ஓராண்டுகாலம் காயல் பெரியவர்களுக்குப் புகழ்மாலை - கவிதைச்சரம் அணிவித்துப் பெருமை கொண்டவர். இருவரும் இப்பொழுது ஒய்வுறக்கத்தில்.**

தகவல்கள் : பேராசிரியர், முனைவர் ஏ. அப்துல் ரசாக். அல்ஹாஃபிழ் எஸ்.கே.எம். நூஹூத்தம்பி ஆலிம் - ஆசிரியர் "முத்துச்சுடர்".

இனி நாம், காத்தான்குடி - ஏறாவூர் நோக்கி!

மட்டக்களப்புக்கு மிக அருகில் உள்ள ஊர்கள். இங்கு முஸ்லிம் உம்மத்துக்கள் அனேகமனேகர்.

**'காத்தநகர்'** எனப்பெருமையுடன் அழைக்கப்படும் காத்தான் குடிக்குள் நுழைந்தால் காயல்பட்டினத்திற்கோ கீழக்கரைக்கோ விஜயம் செய்துவிட்ட உணர்வும் உற்சாகமும் ஏற்படும்.

இங்கு, ஒப்பாரும் மிக்காருமின்றித் திகழும் **பலாஹ் அறபிக் கலாசாலைக்கு** அடிக்கல் நாட்டிய பெருமகனார் முன்குறித்த (தை.மு.க.) முத்துவாப்பா ஆலிம் அவர்களாகும். (சொளுக்கார் இணைப்பங்காளர்.)



இவ்விரண்டுடன், வாழைச்சேனை - ஓட்டமாவடிப் பகுதிகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அங்கேயும் காயல்பட்டின உலகமாக்களினது பங்களிப்பு கணிமாசனது.

முக்கியமாக - **ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக்** (ரலி) அவர்களது பரம்பரையில் வந்தவர்களும், பெரிய முத்துவாப்பா வமிசத்தவர்களைச் சேர்ந்தவர்களுமான நஹ்வி **ஆலிம் முஃப்தி** குடும்பத்தினர் பங்களிப்பு அபரிமிதமானது. ஆனந்தப்படத்தக்கது.

பெரும்பாலும் கிழக்கிலங்கைவாழ் முதிய ஆலிம்கள் - இமாம்கள், இந்த நஹ்விகள் ஒருவரிடம் ஓதியவர்களாகவே இருப்பார்கள் என்பது நிச்சயத்திலும் நிச்சயம்.

இவர்களது வணிக நிறுவனமே **'நஹ்வி ஸ்டோர்ஸ்'** என்ற நாமத்தில் மட்டக்களப்பில் நின்றிலங்கியது.

இந்த நூலின் முதலாம் அத்தியாயமான 'இலங்கை - காயல்பட்டின இதயக்கனி'களில் இந்தக் கனிகளும் உள்ளனர். அப்பொழுது பார்க்கத்தவறியவர்கள் இப்பொழுது பார்த்து விடுங்கள்.

இவர்களைப் போல, மர்ஹூம் **டி.எம்.கே. முத்துவாப்பா** ஆலிம் அவர்கள் இலங்கையில் ஹாஃபிஸ்கள் இல்லாக்குறையைத் தீர்க்க முயன்று வெற்றி பெற்றவர்கள்.

இவர்களால் ஹிப்ளு (அல்-குர்ஆன் மனனம்) மதரஸாக்களின் அவசியம் உணர்த்தப்பட்டது.

முக்கியமாக, இன்று புகழுடன் உள்ள காத்தநகர் **'மத்ரஸத்துல் ஃபலாஹ்'** (1955) அறபுக்கலாசாலையில்

ஹிப்ளு ஓதிக்கொடுக்கப்பட வேண்டியதன் தேவை பற்றி, முதல்வர், அதிராம்பட்டினம் **அல்லாமா அப்துல்லா** ஆலிம் அவர்களிடம் மன்றாடிய மனிதர் மர்ஹூம் முத்துவாப்பா ஆலிம் அவர்களாகும் என அறிய முடிகிறது.

இது, பின்னர் காலத்தால் கனிந்தது.

இவ்வூர்களுக்கு அடுத்து, தென்கிழக்குப் பிரபல்ய நகரங்களிலொன்றான **கல்முனை** கவனத்திற்குள்ளாகிறது.

ஏற்கனவே குறித்தது போல், **எம்.எஸ்.எம். புஹாரி** நிறுவனத்தினருடன், **எம்.எ.எம். செய்யிது ஹஸன் மவ்லானா** நிறுவனமும் இயங்கியது. **'சொளுக்கார் சாம்ராஜ்ய'**மும் வியாபித்திருந்தது.

இங்கே, அவர்களது கடைத்திறப்புவிழாவன்று முதலாவது வாடிக்கையாளராகத் திகழ்ந்தவர் ஒரு **பரிகாரி!**

அப்படியென்றால் நாட்டு வைத்தியர்!

அன்னார் இலேசுப்பட்டவரல்லர். சாந்தமருதூரார். இன்றயைப் பிரபல இலக்கியவாதி - கல்விமான் - ஹாஜி **எஸ்.எச்.எம். ஜெமீல்** அவர்களது அன்னையாரது தந்தை. (அப்பா!) பரிகாரி **ஏ.பி. முத்தலிபு** அவர்கள் வாங்கிய முதல்பொருள் ஒரு **சுவர்க்கடிகாரம்!** இது இன்றும் பரிகாரி அவர்களது கடைசி மகனாரது இல்லத்திலாம்!

அறநெறி வளர்ச்சியைப் பொறுத்தவரையில், இப்படியொரு தகவலை அறிய முடிகிறது:



**★ தமிழக ஆலிம்கள், கேரள கேசரிகள், பட்டாணிகள் என்று பலதரப்பட்ட முஸல்மான்கள் இம்மண்ணை வளம்பெறச் செய்துள்ளனர். தமிழகத்தில் அக்காலத்தில் 'லெப்பைகள்' என்றால், 'இஸ்லாமியப் பணிபுரிவோர்' எனப்பொருள்பட்டது, அத்தகைய லெப்பைகள், அம்மாபட்டினம், பாசிப்பட்டினம், காயல்பட்டினம், கீழக்கரை போன்ற பேரூர்களிலிருந்து இங்குவந்து குடிபதிகளாகி இம்மண்ணின் மக்களிடையே இஸ்லாமியத் தொண்டு புரிந்திருக்கிறார்கள்.**

**- ஹாஜி உஸ்மான் சாகிப், எஸ். ஆதம் பாவா.**

கல்முனைவாழ் எழுத்தாளர்களான மேற்கண்ட இருவரும் தங்களது **'வரலாற்றுப் பேழை'** நூலின் 15-ம் பக்கத்தில் பதித்துள்ள வரிகள் என் பேனாவுக்கு மிகவும் துணை.

என்றாலும், அவர்கள் யார், எவர் என்பதைப்பற்றிய தனித்தனி விவரங்களைப் பெற முடியாதவனானேன்.

ஆனால், முன் குறிப்பிட்ட பழம்பெரும் துறைமுகநகர் சம்மாந்துறைப் பகுதியிலிருந்து ஒரு தகவல் கிடைத்தது:

- **சம்மாந்துறையில் வாழ்ந்த மௌலவி எம்.எச். அப்துல் காதிர் ஆலிம் காஹிரி அவர்கள் தமது தந்தை வழிப் பெயர் வரலாற்றை எழுதி வைத்திருந்தார். அதன்படி, அவரது தந்தையாரது தலைமுறை 10 வரிசையினர் சம்மாந்துறையிலும், அதற்கு முந்திய தலைமுறையில் 8 வரிசையினர் காத்தான்குடியிலும் குடிபதியாக வாழ்ந்ததாகவும், காயல்பட்டினத்திலே அவர்களது பரம்பரைவேர் தொடங்குவதாகவும் குறிப்பிட்டுள்ளார்.**

இந்த 'ஸில்ஸிலா'வை அவர்தம் பாட்டனரான அல்ஹாஜ் மஹ்முத் லெப்பை ஆலிம் இப்னு முறாத் லெப்பை ஆலிம் அறபியில் எழுதி வைத்துள்ளதாகவும் தெரிய முடிகிறது.[6]

அதுமட்டுமின்றி, முஹியத்தீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்களது சீடர்கள் இப்பகுதியில் மேற்கொண்ட அறநெறிப் பிரசாரங்களும், கராமாத்துக்களும் வாய்மொழிக் கதைகளாக வெகு பிரசித்தமாக உள்ளதைக்கொண்டு காயல்பட்டினத் தொடர்புகளைச் சிறப்பாகக் கணிக்கலாம்.

மேலும் - காரைத்தீவுக்கும் சம்மாந்துறைக்கும் இடையிலுள்ள **மாவடிப்பள்ளி** கிராமத்திலும், சம்மாந்துறையிலும் அமைந்துள்ள **'முஹியித்தீன் பள்ளிவாசல்'** ஊருக்கே முதலாவது. 15-ம், 16-ம் நூற்றாண்டுகளில் திறக்கப்பட்டிருக்கலாம்.[7]

**'முஹியித்தீன்'** என்ற பெயரை வைத்தே காயல்பட்டின - கீழக்கரைச் செல்வாக்கை உணர நமக்கு அதிகநேரம் அவசியமில்லை. அதனை எண்ணிப் பெருமைப்பட்டவாறு, கிழக்கின் முக்கிய ஒரு பகுதியான திருகோணமலையில் ஒரு **வி.பி. முஹம்மது அலி ஸாகிபு அன் கோ (ஜுவலர்ஸ்)** இயங்கியது என்பதையும் நினைவு கூர்ந்து மலையகம் நோக்கிப் பயணமாவோம்.

களைப்புக்குப் பதிலாகக் களிப்புடன் இருப்பீர்கள் என ஓர் எதிர்பார்ப்பு!

6. *'குடியிருப்புகளின் பரம்பல்' - மன்சூர் ஏ. காதிர். அம்பாறை மாவட்ட முஸ்லிம்கள் கட்டுரைத் தொகுதியில் 2-வது கட்டுரை. பக். 72. (1997) இலங்கை முஸ்லிம் திணைக்கள வெளியீடு.*
7. *'மஸ்ஜித்கள், மத்ரஸாக்கள்' - யூ.எல். அலியார். மேற்படி கட்டுரைத் தொகுதியில் 3-வது கட்டுரை. பக்கம்: 107.*



# 9

*'பெரும்பான்மை இனங்கள் வாழ்ந்த கிராமங்களிலே தமது வியாபாரத்தினை விஸ்தரிப்பதில் தமிழ்நாட்டு முஸ்லிம்கள் முன்னோடிகளாகத் திகழ்ந்தார்கள். அஃது அந்நியர் ஆட்சி உச்சம் பெற்றிருந்த காலம். அரசின் ஆதரவுடன் பெரும் பணபலத்துடன் கிறிஸ்தவ மிஷனரியினர், கல்வி நிறுவனங்கள் போன்ற பல சாதனங்களின் சகாயங்களுடன் மதமாற்ற வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். வியாபாரஞ் செய்த ஊர்களிலே வாழ்ந்த மக்களைப் பிரீதி செய்து, தங்களுடைய வியாபரத்தினைப் பெருக்கிக் கொள்ளுவது தான் முஸ்லிம் வர்த்தகர்களுடைய நோக்கமாக இருந்திருப்பின், பன்சலைகள், (விஹாரைகள்) கட்டுவதற்கும், கோயில்கள் கட்டுவதற்கும் நன்கொடைகள் வழங்கி, வியாபாரத் திணையும் வாடிக்கையாளர்களையும் பெருக்கி, இந்த நாட்டின் செல்வத்தைச் சூறையாடியிருக்கலாம்.'*

- பன்னூலாசிரியர், **எஸ். பொன்னுத்துரை**, பி.ஏ.
'இஸ்லாமும் தமிழும்' - ஆய்வு நூலில்
பக். 50 (1975)

# மலையகமாம் கண்டி - மாத்தளை

அக்கால இலங்கையின் கண்டி இராச்சியம் ஒரு தனி ஆட்சி.

எந்தப் போர்த்துக்கேயராலும், எந்த ஒல்லாந்தராலும் (டச்சுக்காரர்) அசைக்க முடியாத அரசாக அமைந்திருந்தது. 1815ல் ஆங்கிலேயர் கண்டி அரசனைக் கைதியாக்கி ஆட்சியை அபகரிக்கும் வரையில் அப்படித்தான்.

கண்டி அரசர்கள் முஸ்லிம்களை ஆதரித்த விதத்திற்கு அருமை அருமையான சான்றுகள் உள்ளன.

முதலாம் இராஜசிங்கன் (1581-92) காலம் தொடங்கி சேனரதன் (1604) - இரண்டாம் இராஜசிங்கன் (1635) இரண்டாம் விமலதர்மசூரியன் (1687) - கீர்த்தி இராசசிங்கன் (1747) ஆகியோரெல்லாம் முஸ்லிம்களின் அன்பர்கள்.

இதிலே, அரசன் **சேனரதன்** தனியிடம்.

முஸ்லிம்களுக்கு அபயமளித்து அரவணைத்த தோழன்!

எடுத்துக்காட்டாகச் சில தகவல்களை முன்னும் குறித்துள்ளேன்.

கண்டி இராச்சியத்தின் வர்த்தகச் செழுமைக்கு, எடுத்துக்காட்டாகத் திருகோணமலை - கொட்டியாரம் -



மட்டக்களப்பு - சம்மாந்துறை - புத்தளம் - கற்பிட்டி ஆகிய துறைமுகங்கள் திகழ்ந்தன.

முஸ்லிம் வணிகர்கள் அரசனுக்குப் பக்கபலமாக இருந்தனர்.

- **காயல்பட்டினத்தையும் கீழக்கரையையும் சேர்ந்த முஸ்லிம்கள் மலைநாட்டில் பெருந்தோட்டங்களுக்குப் பக்கத்தில் தோட்டத் தொழிலாளர்களின் தேவைகளைப் பூர்த்திசெய்யச் சிறு சிறு கடைகளை வைத்து வியாபாரஞ் செய்யத் தொடங்கினர்.**[1]

என்கிறார் ஆய்வாளர் முகம்மது சமீம்.

இந்தப் பின்னணியில் மலையகத்திற்குள் நுழையலாம்.

இச்சமயத்தில் ஒரு கீழக்கரைப் பெருமகனார் எனது நினைவலைகளில்!

தமது பிறந்த மண்ணைப் பெருமைப்படுத்திட பல ஆய்வுகளைச் செய்து நூல்கள் பல வெளியிட்டு, ஏறத்தாழ 90 ஆவது வயதில் ஓய்வுறக்கம் கொண்டு விட்ட அல்ஹாஜ் **எம். இத்ரீஸ் மரக்காயர்** அவர்கள் இந்தக் கண்டியில் ஏறத்தாழப் பதினாறாவது வயதில் கால்பதித்திருக்கிறார்! பின் மாத்தளையில்.

1 *'ஆங்கிலேயரின் ஆட்சியில் முஸ்லிம்கள் பெற்ற அந்தஸ்து' - கட்டுரை முஹம்மது சமீம் 'ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சினைகள்' ஆய்வுத் தொகுப்பிலிருந்து. பக். 153 (1997)*

அந்த மிக இளவயதில் கீழக்கரை மைந்தரான அவர் அறிந்ததெல்லாம் காயல்பட்டின மக்களது தொழில் வளத்தையே!

அவர்களுடன் ஏற்பட்ட தொடர்பு அவரை ஒரு தொழில் வித்தகராக்கியது.

உலகம் சுற்றி வந்து பெரிய மாணிக்க வியாபாரியானார்!

அவர்தம் வாழ்க்கை வரலாறு, 'நினைவு மலர்கள்' என்ற பெயரில் 1996-ல் வெளியாகியுள்ளது. அதில், அவருக்கேயுரிய நல்ல பண்பிற்கமைய, தமது இளமை வாழ்க்கையை ஒளிவு மறைவின்றித் தெரியப்படுத்தியுள்ளார். காயல்பட்டின வாசிகளின் தொடர்புகளையும் குறித்துள்ளார்.

- **......... அழகான ஹனபிப் பள்ளிவாசல் இருந்தது. அங்குதான் நான் தொழச்செல்வேன். சில மாதங்கள் சென்றதும் நோன்பு வந்துவிட்டது. நோன்பு கடைசி ஜும்ஆ அன்று திரிகோணமலைத் தெருவுக்குப் பக்கத்தில் தைக்கா பள்ளி (மஸ்ஜித்) என்ற இடத்துக்கு நோன்புப் பிறை 27 அன்று ஜும்ஆ தொழச் சென்றிருந்தேன். அங்கு காயல்பட்டினத்துக் கண்டி ஆலிம்சாவின் மகன் அபுல் ஹஸன் ஆலிம் சிறிய வயதானாலும் நல்ல தொனியுடனும், மிகவும் உருக்கமாகவும் மனதைக் கவரக் கூடிய வகையிலும் பயான் செய்தார். அவர், 'போறாயோ! போறாயோ! எங்கள் பாவங்களை நீக்கி விட்டுப் போறாயோ! ரமலான்!'' என்று உருக்கமாகக் குத்பா ஓதியது எல்லோரின் மனத்தையும்**



**உருகச் செய்தது. அன்று நான் கேட்ட பயான் இன்றும் மறக்காமல் என் நினைவில் உள்ளது. இவ்வாறு நடந்தது அனேகமாக 1926 மத்திபமாக இருக்கலாம்.**[2]

இதே பெரியவர், தமது மாத்தளை வாழ்க்கையையும் மூட்டடிப்புச் செய்யாமல் சொல்லியிருக்கிறார்கள்:

**எனது பெரிய தாயாரின் மூத்த மகன் செய்யிது அஹ்மது ஆலிம் அவர்களின் மகன் முஹம்மது அப்துல் காக்கா அவர்கள் மாத்தளையில் காயல்பட்டினம் கே.வி.எஸ். செய்யிது அஹ்மது பெரியப்பா அவர்களின் கம்பெனியில் மேனேஜராக இருந்தவர்கள். "மாத்தளையில் நான் இருக்கும் கம்பெனிக்கு வந்துவிடு" என்றார்கள்.**

**நான் மாத்தளை சென்று, மேற்படி கே.வி.எஸ். செய்யிது அஹ்மது பெரியப்பா கம்பெனியில் சேர்ந்திருந்தேன். அப்பொழுது ஜூலை ஆகஸ்ட் 1926 ஆக இருக்கலாம்.**

**அது சமயம் முதலாளிகளில் முதியவர்களாக இருந்தவர்கள் செய்யிது முஹம்மது சாஹிபு சாச்சப்பா அவர்கள். நல்ல பேணுதலான ஹாஃபிழ் சூபியானவர்கள். கடையில் இருக்கும் எல்லோரும் பக்கத்திலுள்ள பள்ளிவாசலில் ஐந்து நேரமும் தொழச் செல்ல வேண்டும். மாலை 6.00 மணிக்குக் கடை அடைத்துவிடுவோம். இரவு 9.00 மணிக்கு மேல் யாரும் வெளியே போக அனுமதி இல்லை. கடையில் முதலாளி பிள்ளைகள் 5, 6 பேரும், உள்ளூர்ப் பிள்ளைகள்**

[2] நினைவு மலர்கள்' -எம். இதரீஸ் மரைக்காயர் - ஏப். 1996. பக். 33

**2,3 பேரும் இருந்தனர். கடை விசாலமானது. கடையின் பின்புறம் 40, 50 தென்னை மரங்களும் இருந்தன. கடையில் கட்டிடச் சாமான்களும் இரும்புச் சாமான்களும், தகடுகளும், ஆயில்மன் ஸ்டோர் சாமான்களும் இருந்தன. அப்பகுதியில் ரப்பர், தேயிலை, கொக்கோ முதலிய பெரிய பெரிய தோட்டங்கள் வெள்ளைக்காரக் கம்பெனிகளுக்கு உரியது. அவர்களின் தோட்டங்களுக்குச் சப்ளை செய்வதுதான் முக்கிய வியாபாரம்.**

**இந்தக் கம்பெனியும், 'ஹாஜி ஸ்டோர்ஸ்' என்னும் பெயரிலிருந்த மற்றொரு காயல்பட்டினத்துக்காரர் கம்பெனியும் ஆகிய இரண்டும்தான் அங்கு பிரதானமாக இருந்தவை. இரு கம்பெனியாரும் மாமா-மச்சான் முறை கொண்டாடி அளவளாவி இருப்பார்கள்.[3]**

பெரியவர் இத்ரீஸ் மரக்காயர் அவர்களுக்குத் தந்தை - தாய் வழிகளில் காயல்பட்டினத்தில் உறவினர் இருந்தனர். பிரபல கொழும்பு நிறுவனமான பி.எஸ்.கே.வி. பல்லாக்குலெப்பையுடன் - குறிப்பாக, பங்காளிகளுடன் நிறைய நெருக்கம் இருந்துள்ளது. அவர்களைப் பற்றியும் குறிப்புகள் எழுதியுள்ளார். அபிமானிகளை கொழும்புக்குக் கூட்டிச் செல்லும் பொழுது அவற்றையும் அறியத் தருகிறேன்.

ஆக - ஒரு முதிய கீழக்கரைப் பெருமகனார் மூலமாகவே, இலங்கை மலையகத்தில் காயல்பட்டின செல்வாக்கைப் புரிந்துகொள்ள முடிவது பெரும் பாக்கியமே!

*3. 'நினைவு மலர்கள்'-எம். இதரீஸ் மரைக்காயர் - ஏப். 1996. பக். 33.34.35.*



மத்திய மாகாணம் எனச் சொல்லப்படுகிற கண்டி - கட்டுகஸ்தோட்டை - வத்தேகம - உக்குவளை - மாத்தளை போன்ற பகுதிகளில் காயல்பட்டின வாசிககளின் நூற்றுக்கணக்கான வணிக முயற்சிகளையும், குடியேற்றங் களையும் காணமுடிவதுடன், காயல் பட்டினத்தின் பக்கத்து ஊர்களாகத் திகழ்கிற ஏர்வாடி, தூத்துக்குடியும் மற்றும் ஆத்தூர், கீழக்கரை, அதிராம்பட்டினம் ஆகிய மிஃபர் பகுதி ஊர்களின் மணமும் வீசவே செய்கின்றன.

இப்பொழுது மேற்படி மலையக நகரங்களிலும் ஊர்களிலும் பல தலைமுறைகள்

ஆனால்... ஆனால்..?

**வெகு சிலருக்கே தங்களது மூதாதையர்களின் மண்ணை நினைத்திடவும் அதன் பெருமையைப் பேசிடவும் விருப்பம்!**

**வேறு சிலருக்கோ வெட்கம்! தாழ்வுச் சிக்கல்! 'ஆங்கில - சிங்களக்குஞ்சுகள்'**

போகட்டும்... போகட்டும்.

நாம், நம் பயணத்தைத் தொடருவோம்.

கண்டி, திருகோணமலை வீதியில் காயல்பட்டினப் புகழ் சேர்த்துக் கொண்டிருக்கும் பழம்பெரும் நிறுவனமான **'எஸ்.கே.எஸ். இப்ராஹிம் பிரதர்ஸ்'** (1925) நகைக்கடை வம்சாவளிகள் மேற்குறிப்பிட்ட மனிதர்க் கெல்லாம் விதிவிலக்கானவர்கள்!


எஸ்.கே. முஹம்மது லெப்பை

இந்த எஸ்.கே.எஸ் நிறுவனத்திற்கு, மர்ஹூம்கள் ஹாஜிகள், **எஸ்.கே.எஸ். இப்ராஹிம், எஸ்.கே. முஹம்மது ஹஸன், எஸ்.கே. முஹம்மது லெப்பை** சகோதரர்களுடன் **எஸ்.கே. மூஸா நெய்னா**வும் பங்காளிகள்.

தற்சமயம் நிறுவனர், மர்ஹூம் ஹாஜி **எஸ்.கே.எஸ். இப்ராஹிம்** அவர்களது மக்களுள் மூவர் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். மூத்தவர் ஜனாப் **எஸ்.ஐ.எம். முஹியித்தீன்** அவர்கள் கண்டியில் ஒரு சிறந்த வணிகராகவும், நல்ல இலக்கிய ஆர்வலராகவும், என் எழுத்துக்களின் அபிமானியாகவும் திகழ்கிறார். மற்றிருவர், ஜனாப்களான **அப்துல் ஜபார், முஹம்மது கலீல்** ஆகியோர் சென்னையில் உள்ளனர்.

ஜனாப் **எஸ்.ஐ.எம். முஹியித்தீன்** வழங்கிய குறிப்புகளிலிருந்து நான் அறிந்த தகவல்கள் :

அவரது தந்தையார், மர்ஹூம் ஹாஜி **இப்ராஹிம்** அவர்கள், 1920இல் ஒரு சிறு பெட்டியில் தங்கம், பொன், வெள்ளி, மாணிக்கக்கற்களையும், பொற்கொல்லர்களுக்குத் தேவையான ஆயுத சாமான்களையும் கிராமங்கள் தோறும் கொண்டு சென்று வாழ்க்கையில் உயர்ந்தவராவர்.



பிற்காலத்தில் நிறுவனத்தைத்திறம்பட நடத்திய பெருமை முஹியித்தீனின் தமையனார் மர்ஹூம் **எஸ்.ஐ.எஸ். ஹமீது** அவர்களைச் சாரும். இப்பொழுது நிறுவனத்தைத் தலைமுறையினர் நடத்திக் கொண்டிருக்கின்றனர்

இந்த நிறுவனம் போல, **எம்.எஸ். பிரஷ் கம்பெனி, பிரிட்டிஷ் பிரஷ் மனுபெக்சர்ஸ், ஹாஜி ஸ்டோர்ஸ்** முதலியவை மாத்தளை **ஆப்தீன் ஹாஜியார், மீராலெப்பை ஹாஜியார், ஐ.எல். எஸ். புஹாரி** ஆகியோரைப் பங்காளிகளாகக் கொண்டு நடந்தது.

மர்ஹூம் **பஸ்லுள்ளாஹ் ஸாஹிபு** அவர்கள், கொக்கோ, மிளகு, ஜாதிக்காய் வர்த்தகராய் வளம் கொழித்தார்கள். இவர்களது மகனார் **இஸ்மாயில்** அவர்கள் மாத்தளையிள் மணமுடித்து அந்நகரத்து மாநகரசபை அங்கத்தினராகப் பேரும் புகழுமாக இருந்துள்ளார்.

மேலும், **செய்யத் இஸ்மாயில்** அவர்கள் நகைக்கடையும், **ஐதுருஸ் காக்கா, முஹம்மது முஹியித்தீன்** முதலியோர் காசுக்கடையும் வைத்திருந்தார்கள்.

இவை மட்டுமன்றி, **எம்.கே.எம்.கே.ஏ.கே. அன்கோ, ஸுபைதா ஸ்டோர்ஸ், ஜுஹரா ஜுவலர்ஸ், நஃபீஸா ஜுவலர்ஸ், சுலைமான் பிரதர்ஸ், உவைஸ்னா லெப்பை**யின் நாட்டு மருந்துக்கடை போன்றவை கண்டிமாநகரில் காயல்பட்டின மணம் பரப்பியவையாகும்.

இன்றைக்கும் ராஜவீதிக்குள் (கிங்ஸ் ஸ்டீரிட்) நுழைந்தோமானால் 19-ம் இலக்கத்தில் ஒரு **'தைக்காப்பள்ளி'**யைப் பார்த்துப் பரவசப்படுகிறோம்.

இதற்கு **முஹியித்தீன் ஜும்ஆப் பள்ளிவாசல்** எனப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. அன்று இது அமைவதற்கு முழுமுதற்காரணமாக அமைந்தவர்கள் காயல்பட்டினம் **அவுலியா ஸாஹிப் அப்பா** என்பவர்களாகும். (சொந்தப் பெயர் அறிய முடியாது போனதற்கு மன்னிப்பு வேண்டும்)

இப்பள்ளியில்தான் கொழும்பு ஸாஹிரா கல்லூரி ரெக்டர், அறபுப் பேரறிஞர் மர்ஹூம் **எம்.ஏ. அபுல் ஹஸன்** அவர்களது பயானை கீழக்கரைப் பெரியார் இத்ரீஸ் மரக்காயர் கேட்டுப் பரவசப்பட்டது!

மர்ஹூம் அபுல்ஹஸன் நிழற்படமும் குறிப்புகளும் முதலாம் அத்தியாயம் 'இதயக்கனிகள்' பகுதியில் இடம் பெற்றுள்ளன.

இங்கே, ஆரம்பத்திலிருந்து பேஷ் இமாம்களாகக் கடமை புரிந்த ஆலிம்களாக-

* **கண்டி ஆலிம்** (நூ.கு. முஹம்மது இபுராஹிம் ஆலிம்)
* **கி.தூ. சாகுல் ஹமீது** ஆலிம்.
* **ம.கு.த.** ஆலிம்.
* **அப்துல் காதர்** ஆலிம்.



* **ஹாமிதுல்லாஹ்** ஆலிம்.
* **ஹாமிது** ஆலிம்.

ஆகியோர் திகழ்கின்றனர். இவர்களைக் காயல்பட்டினத்தின் பிரபல அறநெறிப் பணியாளர்களாகக் குறிப்பதில் பேனாப் பெருமைப்படுகிறது.

மேலும் - மற்றுமிரு கண்டிப் பள்ளிவாசல்களுடன் காயல்பட்டின மக்களுக்குத் தொடர்பு இருந்திருக்கிறது.

* மஹியாவை என்கிற பகுதியில் அமைந்துள்ள **'காட்டுப்பள்ளி'** என அழைக்கப்படும் மிகப்பழைய பள்ளிவாசலாகிய **''ஜாமிஉல் ஹைராத்''** ஜும்ஆ மஸ்ஜித் இராஜாதி இராசசிங்ஹன் அன்பளித்த நிலத்தில் அமைந்து ஓய்வுறக்க இடத்தையும் (மையவாடி) கொண்டதாகும். இங்குதான் ஆரம்பகால காயல்பட்டினவாசிகள் ஓய்வுறக்கத்திற்கு இடம் தேடிக் கொண்டனர்.[4] (அவர்கள்தம் ஆத்ம ஈடேற்றத்திற்கு இறைஞ்சுவோமாக).

* நகரின் மத்தியில் காசல் ஹில் வீதியில் அமைந்துள்ள **''ஜாமிஉல் அஃலம்''** ஹனஃபிப் பள்ளிவாசலும், இஸ்லாமியக் கட்டடக்கலை அம்சங்களுக்கும், இஸ்லாமிய நூலகமொன்றுக்கும் பிரபலமானதாகும். (உலகளாவியரீதியில் புகழுடைந்துள்ள மௌலவி **எச். சலாஹுத்தீன்** அவர்கள் இந்நூலகத்தின் மூலபிதா).

4 *'கண்டி மாவட்ட முஸ்லிம்கள்' - தொகுப்பு மலர். 'மஸ்ஜித்களும் மத்ரஸாக்களும்' கட்டுரை. எம். அஜ்வாத் ஹாஸிம். பக். 94-95.*

ஹனஃபிப் பள்ளியாயினும், ஷாஃபியினராகிய காயல் பட்டினவாசிகள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர்.

இலங்கை முஸ்லிம் சமுதாயத்தினரின் கல்வித் தந்தையருள் ஒருவர் **எம்.சி. சித்தி லெப்பை.** (1838 - 1898). ஒரு மார்க்க அறிஞராகவும், வழக்கறிஞராகவும், சிறந்த சிந்தனையாளராகவும், இதழாளராகவும் ('முஸ்லிம் நேசன்') நாவலாசிரியராகவும், விளங்கினார்.

இவரது தலையாயதொண்டு, முஸ்லிம் சமூகம் உயர்கல்வி கற்பதை வலியுறுத்தும் முகமாகக் கிராமங்கள் தோறும் பிரசாரங்கள் செய்ததாகும்.[5]

இத்தகைய அறிவுப் புரட்சியாளருக்கு, காயல்பட்டினம் - கீழக்கரை - தஞ்சாவூர் (வல்லம்) ஊர்வாசிகளுடன் நெருங்கிய தொடர்பு இருந்தது. உலமாக்கள் சிலரால் தமக்கு ஏற்பட்ட இடையூறுகளுக்கு இவ்வூர்ப் பேரறிஞர்களது 'பத்வா'க்களையும் பொருளுதவிகளையும் (நூல் வெளியீடுகளுக்கு) விரும்பியவராக அவர் இருந்ததாகத் தெரிகிறது.

**முஹம்மது காசிம்** என்பது தான் இவர் இயற்பெயர். ஆனால் தந்தையார் சித்திலெப்பையின் பெயரிலேயே புகழடைந்தார். இவர்தம் மூதாதையர் பெரும்பாலும் திருநெல்வேலி பகுதியைச் சேர்ந்தவர்களாகவே இருக்க வேண்டும் என்பது என்னைப் போற்ற சிலரது கணிப்பாகும். உண்மையை

*5. மேற்படி மலர். 'கல்வி' - கட்டுரை. எஸ்.எம்.எ. ஹஸன். பக். 145. (1996)*



**கலாநிதி** அல்ஹாஜ் ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் போன்றவர்கள் வெளிச்சத்திற்குக் கொண்டு வரலாம்.

நல்லது, இனி நமது பயணம் **மாத்தளைமாநகர்** நோக்கி....

**கட்டுகஸ்தோட்டை** என்ற **ஊரைக்** கடந்துதான் செல்லல் வேண்டும்.

கண்டியின் எல்லையைத் தாண்டினால் நாம் சந்திக்கும் ஊர். இங்கே பல காயல்பட்டினவாசிகள் இலங்கைப் பெண்களை மணமுடித்துப் பல தலைமுறைகளைக் கண்டுவிட்டனர்.

ஏற்கெனவே தெரிவித்தது போல, பரம்பரைப் பெருமை பேசிட பலருக்குத் தாழ்வுச் சிக்கல். (இது என்ன இடியப்பச் சிக்கலோ!)

நாம் மேலே பயணிப்போம்.

**ஹுன்னாஸ்கிரிய, வத்துகாமம்** (வத்தேகம), **உக்குவளை** என நாம் கடந்து செல்லும் ஊர்களில் காயல்பட்டினம் - கீழக்கரை செல்வாக்குகள் உண்டு.

ஹுன்னாஸ்கிரியாவில் மர்ஹூம் **'எம்.டி.'** (முழுப்பெயர் அறிய முடியவில்லை) அவர்கள் மகனார் **புஹாரி** தமது சகோதரர்களுடன் இணைந்து ஏலக்காய்த் தோட்டமும் செய்து வந்திருக்கிறார்.

உக்குவளையில் ஒரு **'கண்டி அப்பா!'** (பெயர் கிடைக்கவில்லை!). இவர், நவதானிய வியாபாரம்.

இனி. மாத்தளை!

இங்கே, காயல்பட்டினப் பெருமை பேசிட **'டவுன் பள்ளி'** (நகரப்பள்ளி) சாட்சியாகக் காட்சி!

**''நிறை அறிவும் வரலாற்றுணர்வும் உள்ளவர்''** என, எனது பள்ளித்தோழர் - முன்னை நாள் இலங்கை முஸ்லிம் சமய, பண்பாட்டலுவல்கள் இராஜாங்க அமைச்சரும், இந்நாள் நாடாளுமன்ற உறுப்பினருமான அல்ஹாஜ் **அப்துல் ஹமீத் முஹம்மது அஸ்வர்** அவர்கள் குறிப்பிடும் மாத்தளை ஸாஹிராக் கல்லூரியின் முன்னைய அதிபரான அல்ஹாஜ் **ஏ.ஏ.எம். புவாஜி**, பி.எ., (கல்வி டிப்ளோமா) அவர்கள் டவுன் பள்ளி பற்றிப் பதித்துள்ள குறிப்புகளையே இங்கு அர்ப்பணம் செய்கின்றேன் :

- **மாத்தளை நகரத்தின் மத்தியிலே அமைந்து, நகரத்துக்கு அழகையும் சோபையையும் வழங்கிக் கொண்டிருக்கும் மாத்தளை டவுன் ஜும்ஆப் பள்ளி, வியாபாரத்தின் நிமித்தம் மாத்தளைக்கு வந்து குடியேறிய தென்னிந்திய வர்த்தகர்களால், ஏறத்தாழ 1870-களில் கட்டப்பட்ட ஒரு பள்ளிவாசலாகும், கண்ணியத்துக்கும் மரியாதைக்குமுரிய பல பெரும் ஆலிம்களோடும் பெரியார்களோடும் நெருங்கியத் தொடர்புடைய இப்பள்ளிவாசலின் வரலாற்றில், முதன் முதலாக குறிப்பிடப் பட்டுள்ளவர்கள், மாபெரும் மார்க்க ஞானியும் இறை நேசருமான தைக்கா சாஹிப் அப்பா ஒலியுல்லா அவர்களின் மருகரும், கலீபாவுமான செய்ஹுனா காமில் சுல்தான் அப்துல் காதர் ஹாஜியார் அவர்களாவார்.**



- **ஹாபிஸ் முகம்மது சுலைமான் லெப்பை ஆலிம் அவர்களின் புதல்வர் கதீப் முஹம்மது சம்சுதீன் லெப்பை ஆலிம் எனும் பெரியார் 1902 ஆம் ஆண்டுவரை இப்பள்ளிவாசலின் தலைமைப் பொறுப்பில் இருந்தார்கள். மர்ஹூம் மொன்னா அஹ்மது இப்னு உவைசுனாலெப்பை காஹிரி, ஹாஜி சேரா முதலியார் இப்னு உவைசுனா லெப்பை காஹிரி ஆகிய இரு பெரியார்களும் வர்த்தகத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்த அதே வேளையில், இப்பள்ளிவாசலின் உயர்வுக்காகவும், இங்கே வாழ்ந்த முஸ்லிம்களின் சமய வளர்ச்சிக் காகவும் அரும்பாடு பட்டுள்ளார்.**

- **1970 ஆம் ஆண்டு வரை காயற்பட்டணத்தைச் சேர்ந்த ஆலிம்களே இப்பள்ளிவாசலின் கதீப்களாகக் கடமையாற்றினார். கிட்டத்தட்ட 1940 ஆம் ஆண்டிலிருந்து 1950 ஆம் ஆண்டுவரை மர்ஹூம் அப்துல் ரஹீம் லெப்பை ஆலிம் அவர்கள் கதீபாகக் கடமையாற்றினார்கள். இவர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்த சிலர் இன்றும் மாத்தளையில் வாழ்வதோடு, பள்ளியின் வளர்ச்சியிலும் தொடர்ந்து அக்கறைக் காட்டி வருகின்றனர்.**

- **1950 - 1965 காலப்பகுதியில் கதீபாகக் கடமையாற்றிய மக்கீ ஆலிம் சாஹிப் அவர்களும், மாமூனா லெப்பை ஆலிம் அவர்களும் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆவர்.**

● **1965 - 1970 காலப்பகுதியிலே சுல்தான் ஆலிம் சாஹிப் அவர்கள் கதீபாகக் கடமையாற்றினார்கள்.**[1]

எப்படிக் குறிப்புகள்? இப்படியான பதிவுகளுக்குப் பிறகும் இந்தப் பேனாவுக்கு எழுத என்ன இருக்கிறது?

ஆனால் இலங்கை 'தினகரன்' இதழில், 1993 - டிச. 26ல் என் கைவண்ணத்தில் வாரா வாரம் வந்த 'லைட் ரீடிங்' முழுப்பக்கப் பகுதியில் ஒரு பரபரப்புச் செய்தேன்!

**'காயல்வாசிகளின் சேவை பேசும் கல்வெட்டு'** - என ஒரு தகவல் வழங்கியிருந்தேன். அதனை மறுபிரசுரம் செய்தால் நான் உட்பட அனைவருமே திருப்பிப் படிப்போம். இதோ, அது....

● தமிழின் மீது எத்தகையதொரு அன்பும் அபிமானமும் இருந்திருந்தால் முஸ்லிம்கள் ஒரு கல்வெட்டிலே அதைச் செதுக்கியிருப்பார்கள்?

விருந்தோம்பலுக்குப் புகழ்பெற்ற காயல்பட்டன வாசிகளிடம் அந்த உணர்வு இருந்திருக்கிறது.

அதுவும் அவர்கள் ஊரில் அல்ல.

வாழ்ந்து சிறக்க வந்த இடத்தில் மாத்தளையில்.

1. *'மாத்தளைப் பள்ளிவாசல்கள்' - ஏ.ஏ.எம். புவாஜி பி.ஏ. கல்வி டிப்ளோமா. 'மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள்' - ஆய்வுத் தொகுப்பில் 9-ம் அத்தியாயம் பக் : 160 - 163 (1993).*



எங்கள் உடுநுவர தினகரன் நிருபர் அல்ஹாஜ் எச்.எம். மன்சூர் லைட் ரீடிங்குக்கெனப் பிரத்தியேகமாகத் தந்திருக்கும் தகவல்கள் இதோ:

மாத்தளையின் பிரதான பாதையில் உள்ள பெரிய பள்ளிவாசலின் சுவரில் கண்ணாடி பிரேம் இடப்பட்டுப் பாதுகாப்பாக உள்ளது ஒரு தமிழ் கல்வெட்டு-

மேற்படி பள்ளிவாசல் 100 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டுள்ளதற்கு ஆதாரமாக உள்ளது இது.

அது அமைவதற்கும், அதன் பின்னர் விஸ்தரித்துக் கட்டுவதற்கும் காரணமாக இருந்த முக்கிய நபர்கள் நால்வர். அவர்களது மறைவுக்குப் பின்னர் இன்றைய தலைமுறையினருக்கு அவர்களை அறிமுகப்படுத்தி அடையாளம் காட்ட இக்கல்வெட்டு உதவுவதோடு அவர்களது ஓய்வுறக்க இடங்களும் பள்ளிக்கு ஒதுக்குப்புறமாக இருப்பதையும் காணக்கூடியதாக உள்ளது.

கல்வெட்டில் உள்ள பெயர்களை நாம் அறிந்து வைத்திருத்தல் அவசியம்.

காயல்பட்டணம் தைக்கா சாஹிபு (ஒலி) அவர்கள் மருமகன் கலீஃபா செய்குல் காமில் சுல்தான் அப்துல் காதர் ஹாஜியார். (1878)

கதீபு முஹம்மது சம்சுதீன் லெப்பை ஆலிம் இப்னு ஹாபிஸ் முஹம்மது சுலைமான் லெப்பை ஆலிம் காஹிரி (1902)

3. *மொன்னா அஹ்மது இப்னு உவைஸுனா லெப்பை காஹிரி (1902)*

4. *ஹாஜி சேரா முதலியார் இப்னு உவைஸுனா லெப்பை காஹிரி*

இதில், காயல்பட்டினம் தைக்கா சாஹிபு மருமகனே சுல்தான் அப்துல் காதர் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் புவாஜி அவர்களது பதிவில் ஊர் விடுபட்டுள்ளது. அதனால் எந்த ஊர் தைக்காசாகிபு என்பதில் சற்று மயக்கம் சிலருக்கு ஏற்படலாம்.

மற்றுமொரு மேலதிகத் தகவல் : மர்ஹூம், ஹாஜி **சேரா முதலியார் இப்னு உவைஸுனா லெப்பை** காஹிரி அவர்கள், மேற்படி டவுன் பள்ளிக்கு மாதா மாதம் வருமானமொன்று வருவதற்கு, மாத்தளைப் பிரதான வீதியில் ஒரு **கட்டடத்தையே வக்பு செய்தது!** அதன் உறுதியை இக்கல்வெட்டில் பார்க்கக்கூடியதாக உள்ளது. வக்பு செய்த தேதி, கட்டட வருமானத்தைப் பள்ளிவாசலுக்குக் கொடுக்கும்படியான வேண்டுகோள், மாதந்தோறும் தமது பெயருக்குக் கத்தமுல் குர்ஆன் தமாம் செய்யும் கோரிக்கை என்பன கல்வெட்டில் உள்ளன. (மேற்படி கல்வெட்டு செதுக்கப்பட்ட ஆண்டு 1889. அதனை நிழற்படமாக்கிய பொழுது தெளிவான படம் கிடைக்கவில்லை. ஆகவே அச்சிடுவதைத் தவிர்த்தேன்.)

எவ்வாறாயினும், மாத்தளை மாநகரில் மிகவும் பிரசித்தி பெற்றிருந்த, **'மீஸான் ஹாஜியார்'** என அழைக்கப்பட்ட, மாத்தளை சத்கோரளை முகாந்திரம் வீடு,



சேகு அப்துல் காதர் ஹாஜி மகன், ஹாஜி **எஸ்.எம். முஹியித்தீன் ஜே.பி.** அவர்களது தலைமையில் இப்பள்ளிவாசலுக்குப் பெரியதோரு புனரமைப்புப் பிற்காலத்தில் நடந்ததையும் குறிக்க நான் தவறக்கூடாது.

அழகான, கம்பீரமான ஒரு முகப்பை இன்று பார்க்கிறோமே, அது அவர்களது முயற்சி தான். பகிரங்கப்படுத்தாவிட்டாலும் கூட, செலவின் பெரும்பகுதியை மீஸான் ஹாஜியார் அவர்களே ஏற்றுச் செய்தார்கள் அன்னாரது ஒய்வுறக்கம் பள்ளி நிலத்தில் பள்ளிக்கு அருகாமையில் தான்.[2] ஆண்டு 1964.

மீஸான் ஹாஜியார் அவர்களைப் போன்று ஒப்பிட்டுச் சொல்லக்கூடிய இன்னொருவர் **'ஹாஜி அப்பா'**!

காயல்பட்டினம் அப்பாப்பள்ளி - மரக்காயர் பள்ளி ஜமாத்தைச் சேர்ந்த மர்ஹூம் ஹாஜி, **பி..இ ஷாகுல் ஹமீது 'ஹாஜி அப்பா'** அவர்கள், மாத்தளையை அடுத்த அளுவிகாரை என்னுமிடத்தில் நிலச்சுவாந்தாராகத் திகழ்ந்தார்கள். 'Gazetteer of the Central province of Ceylon' என்ற பதிவில், ஏ.சி. லோரி என்பார், **''அளுவிகாரை அமைந்துள்ள உடவிகாரைக் காணிகளை ஒரு முஸ்லிம் வைத்திருந்தார்''** என்றும், **''அக்காணிகளுக்குப் பிரதியாக சேவைகள் ஆற்றியோ, பணம் வழங்கியோ பிரதியுபகாரம் செய்தார்''** என்றும் தெரிவித்துள்ளார்.

---

2. *'மாத்தளைப் பள்ளிவாசல்கள்' - ஏ. ஏ. எம். புவாஜி பி.ஏ. கல்வி டிப்ளோமா 'மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள்' - ஆய்வுத்தொகுப்பில் 9 -ம் அத்தியாயம் பக் : 161 (1993)*

பெரும்பாலும் அவர்கள் குறிப்பிடும் அந்த 'முஸ்லிம்', ஹாஜியார் அப்பா அவர்களாகவே இருக்க முடியும் என்ற கணிப்பு எனக்கேற்படுகிறது. உங்களுக்கு எப்படி?

அன்னார் அங்கு வாழ்ந்த 100 முஸ்லிம் குடும்பங்களின் மார்க்கக் கல்விக்காக, தனது பொருளைச் செலவிட்ட ஓர் ஆன்மிகவாதி. தொழுகையின் நன்மைகளைப் பற்றி எந்த இடத்திலும் இரண்டொரு வார்த்தைகள் உபதேசிப்பார்கள். அளுவிக்காரையில் தமது சொந்த இருப்பிடத்தை, மத்ரஸாவாகவும், பள்ளி வாசலாகவும் பாவித்துக் கொள்ளும்படி அவ்வூர் மக்களுக்கு அர்ப்பணம் செய்த அற்புதமானவர். தற்சமயம் அதன் நிர்வாகப் பொறுப்பு. **முஹியித்தீன் பிச்சைக்** குடும்பத்தாரிடம் இருப்பதாக எனது நண்பர் ஜனாப் **எம்.கே.எம். இப்ராஹிம்** அவர்கள் தகவல்.

இந்த ஹாஜி அப்பா அவர்கள் தமது பிறந்தகத்திலும் ஓர் ஆன்மிக சாதனையாளர்!

23.2.1923ல், காயல்பட்டின மக்களுக்கு ஒரு தொடர்வண்டி (ரயில்) நிலையம் கிடைத்தது. ஆனால் அது சற்று தொலைவில். பயணிகள் ரயில் நேரசூசிகையை அனுசரித்துத் தொழுகைக் கடமைகளைத் தவறவிட வேண்டிய இக்கட்டு.

இதனை நேரில் கண்ணுற்ற ஹாஜி அப்பா, உடனே செயலில் இறங்கினார்கள். நல்மனங்கொண்ட வசதியான வணிகப்பெருமக்கள் அனுசரணையுடன் காரியம் சாதித்தார்கள். **"ஸ்டேசன் பள்ளி"** என ஓர் இறையில்லம்



20.3.1936ல் உருவானது. இப்பொழுது ஆறுமுகநேரிப் பேரூராட்சிப் பகுதியில் அமைந்துள்ளது.

**சரி, மீண்டும் மாத்தளையில்...**

கொழும்பில் பல்லாண்டுகாலப் புகழுடன் இலங்கிக்கொண்டிருக்கும் காயல்பட்டின நிறுவனமான **பி.எஸ்.கே.வி. பல்லாக்கு லெப்பை** மாணிக்க வணிகர்களால், இங்குள்ள பிரபல கல்லூரியான ஸாஹிரா வளாகத்திற்குள் 1980-களில் ஓர் இறையில்லம் கட்டப்பட்டது. இதுவே, மாத்தளை மாவட்டத்தில் மாணவர்களின் இறைவழிப் பாட்டுக்கெனக் கட்டப்பட்ட முதல் பள்ளிவாசல். இந்தக் கல்லூரிப் பகுதியிலே வேறு பள்ளிகள் இல்லாதபடியால் இதுவே சகல முஸ்லிம்களின் ஆன்மிகக் கடமைகளையும் பூர்த்தி செய்யப் பெரிதும் உதவுகிறது.

இனி நாம், மாத்தளைப் பகுதிக்குக் காயல்பட்டின வாசிகள் வந்து குடியேறிய வரலாற்றுத் தொன்மையைப் பார்ப்போம். இதற்கும் எனக்குப் பக்கபலம் அல்ஹாஜ் புவாஜி அவர்களே! நன்றி. நன்றி.

- **மாத்தளையில் குடியேறிய தென்னிந்திய முஸ்லிம்கள் பெரும்பாலும் காயல்பட்டினம், கீழக்கரை, காயாமொழி, ஏர்வாடி போன்ற ஊர்களைச் சேர்ந்தவர்கள் ஆவர். இவர்கள் காட்டிய சமயப்பற்று, அன்றாட இஸ்லாமியக் கடமைகளுக்கு அவர்கள் கொடுத்த முக்கியத்துவம் போன்றவை மாத்தளை முஸ்லிம்களின் வாழ்க்கையிலும் மாற்றங்களை ஏற்படுத்த ஆரம்பித்தன.**

- எட்டிபொல என்னுமிடத்திற்கு அருகில் உள்ள படாவி என்ற ஊரிலும், மாத்தளை மாவட்டத்தைச் சேர்ந்த மொரகொல்லை என்ற ஊரிலும் கண்டெடுக்கப் பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டுக்கள் 9ஆம் 10 ஆம் நூற்றாண்டுக் காலப்பகுதிகளில் இந்திய வியாபாரிகள் இலங்கையின் உட்பகுதிகளில் வியாபாரம் செய்து கொண்டிருந்ததைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

- உக்குவளை (மாத்தளைக்கு அண்மியது) நகரம் ஒரு தென்னிந்திய முஸ்லிம் நகரச் சாயலைப் பெற ஆரம்பித்தது. இங்கு குடியேறிய இந்திய வியாபாரி களில் சிலர், மானாம்பொடை முஸ்லிம்களோடு திருமணத் தொடர்புகளையும் ஏற்படுத்திக் கொண்டனர். 'த.அ' குடும்பம், 'நாவன்னா' குடும்பம், 'கி.செ.' குடும்பம், 'மீயன்னா ஈனா'க் குடும்பம் இங்கு பிரசித்தமானது.

- 1855 ஆம் ஆண்டு மாத்தளை - ரத்தொட்டைப் பாதை தேசாதிபதி வார்டினால் அமைக்கப்பட்டது, வியாபாரம் பெருகவே, காயல்பட்டின முஸ்லிம்கள் ரத்தொட்டையில் கடைகளை ஆரம்பித்தனர். இவ்வூரில் ஒரு ஜுமுஆப் பள்ளியும் ஒரு தைக்காவும் உள்ளன.

இவ்வாறாக, அல்ஹாஜ் புவாஜி அவர்களது 'மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள்' பற்றிய ஆய்வு நீண்டு செல்கிறது.

மாத்தளை மக்கள் யாரை மறந்தாலும், 'கானா அப்பா'வையும் கோயா முதலாளியையும் மறக்க முடியாது.



அந்தளவுக்குப் பிரபலம். 'கானா' செய்யது அஹ்மது ஆலிம் அவர்கள் தொழில் புரிந்தவாறு அறநெறி வளர்ச்சியிலும் அதிகமாக ஈடுபட்டவர்களாவர்.

சிங்களவர், கோயா முதலாளியை ஒரு சிற்றரசருக்கு ஒப்பிடுவார்களாம்! அவரது முழுப்பெயரையும் அறியமுடியாமல் போனேனே!

ஏற்கெனவே நாம் கண்டிமாநகரைக் கண்டபோது, கீழக்கரைப் பெரியார், மர்ஹூம் எம். இத்ரீஸ் மரக்காயர் மூலமாக, இங்கு கொடிகட்டிப் பறந்த கே.வி.எஸ். செய்யிது அஹ்மது கம்பெனி - ஹாஜி ஸ்டோர்ஸ் முதலிய மாத்தளை நிறுவனங்களை அறிந்தோம். இவை பழம்பெறும் நிறுவனங்களாகும்.

மேலும், கண்டியிலேயே நாம் அறிந்துகொண்ட கொக்கோ, மிளகு வணிகர் மர்ஹூம் பஸ்லுள்ளாஹ்வின் மகனார் ஜனாப் இஸ்மாயில் இலங்கைப் பிரஜையாகி, இந்த ஊரில் மணமுடித்து மாநகரசபை அங்கத்தவராகவும் சேவையாற்றியவராவர்.

நல்லது; இங்கிருந்து கொழும்புமாநகருக்குப் பயணப்படும் நேரம் வந்துவிட்டது.

வழக்கமான கண்டி - கொழும்பு 'கார்ப்பட்' நெடுஞ்சாலையில் செல்லாமல், கட்டுகஸ்தோட்டை வரை வந்து, கலகெதர - மாவத்தகம - குருணாக்கல் - பொத்துஹற எனக் கொழும்பு சென்றடைவோம்.

காரணம் - முன் தெரிவித்ததுபோல, குருணாக்கல் நகரில் இறங்கி 90 வயதினை எட்டிக் கொண்டிருக்கும் ஓர் 'இளைஞ'ரை உங்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டியிருக்கிறது.

சந்திப்போமா?

பெரியவர், ஹாஜி, **முஹம்மது அப்துல்காதர் செய்யிது அபூதாஹிர்** அவர்களை நேருக்கு நேர் காணும் யாரும் **'ஓர் எகிப்து நாட்டுப் பிரஜை'**யைச் சந்தித்துவிட்ட பிரமையை அடைவர்!

"I Cannot believe as you are an Indian!
You are an Egyption!"

-என்றானாமே ஒரு வெள்ளைக்காரன்! அது சரியே! சரியே!

அதுமட்டுமல்ல, காயல்பட்டினத்தை **'காஹிரா பதன்'** என அழைப்பதிலும் அர்த்தமில்லாமலில்லை!

சந்திப்புக்கு ஏற்பாடுசெய்து அழைத்துச்சென்ற நண்பர்களான, **எம்.எம். முத்துவாப்பா - எம்.கே.எம். இப்ராஹிம் - எம்.ஒ.எம். முஹியத்தீன்** ஆகியோருக்கு நன்றி பாராட்ட வேண்டியது பேனாவினது கடமை.

சொளுக்கார் குடும்பத்து அபூதாஹிர் ஆலிம்சா அவர்கள் என்னைப் பார்த்து, "எழுத்துக்களிலே பார்த்த உங்களைக் காணவேண்டுமென்ற ஹாஜத்து திடீரென்று நிறைவேறியிருக்கிறது. நானோ ஆலிமாகாதவன், ஆனால் என்னை ஏனோ எல்லோரும் ஆலிம்சா என்கிறார்கள்" எனச் சொல்லிவிட்டு கலகலவெனச் சிறுபிள்ளையாகச் சிரித்தார்.



'இவரா தொன்னூறை நெருங்கிக் கொண்டிருக் கிறார்? கண்ணேறு படப்போகிறது' - என இறைஞ்சிக் கொண்டேன்.

குருணாக்கலில் அரை நூற்றாண்டுக்குமேல் வாழ்க்கையைக் கழித்துப் பல தலைமுறைகளைக் கண்டுள்ள பெரியவர், கொழும்பு வாழைத்தோட்டத்தில் வாழ்ந்து, மருதானை ஸாஹிராவில் கல்வி கற்று, பலாங்கொடையுடனும் தொடர்பு வைத்திருந்தவர்கள்.

அவர் இலங்கையின் கௌரவப் பிரஜை. ஆரம்ப அத்தியாயங்களில் நாம் புத்தளம் பற்றிப் பார்த்தோமல்லவா, அப்பிரதேசம் முழுக்கவும் படகும் பாய்க்கப்பலும் ஓட்டியவர்கள் **'சம்பன்காரர்கள்'** (சம்மான்)தான் என முன்னைநாள் இலங்கைச் சபாநாயகர் மர்ஹூம் **எச்.எஸ். இஸ்மாயில்** அவர்கள் (புத்தளவாசி) ஒளிவுமறைவின்றித் தம்மிடம் சொல்லியிருப்பது இப்பெரியவர் நினைவில் நீங்காதுள்ளது.

இப்பெரியவர், காயல்பட்டினம் மரக்காயர் பள்ளித் தெருவைச் சார்ந்த **சேகப்துல் காதிர்** (மு.க.செ. சேகு அப்துல் காதிர்) அவர்களுடன் பங்காளியாக மிகப் பெரிய அளவில் கொப்பரை வியாபாரம் செய்தார்கள்.

புதிதாக காயல்வாழ் மக்கள் இலங்கைக்குச் செல்லும்போதெல்லாம் குருணாக்களில் இறங்கி (ரயில்

மூலமாக) இவர்களது நிறுவனத்திற்குச் சென்று உணவு உண்டு தங்கி அதன்பின்தான் அடுத்த அலுவல்களுக்குச் செல்வார்களாம்.

முன்குறித்த இவர்களது பங்காளி சேகு அப்துல் காதர் அவர்களும் ஊரில் பல சமூகச்சேவைகளில் ஈடுபட்டவர்களாக பல பள்ளிவாசல்களின் நிர்வாகியாக இருந்துள்ளதையும் நான் தெரிவித்தாகவேண்டும். (குறிப்பாகத் திருச்செந்தூர் பள்ளி வாசலுக்கு.)

இங்கு பணிபுரிந்த பல காயல்பட்டின பேஷ் இமாம்கள் மிகவும் புகழடைந்தவர்களாவர்.

- **பஸ்லுள்ளாஹ் லெப்பை ஆலிம்**
- **அல் - மக்கீ ஆலிம்**
- **முஹம்மது மாமூனா லெப்பை ஆலிம்**

ஆகிய மூவர் பிரபல **ஜாமிஉல்' அழ்கர்** பள்ளிவாசலில் கடமையாற்றியுள்ளனர்.



அல் மக்கீ ஆலிம்

மேற்கண்டவர்களில் **மக்கீ** ஆலிம் அவர்கள் இலங்கையில் வாழ்ந்த 60 ஆண்டுகளில், குருணாக்கள் நகரிலே ஜும்ஆப் பள்ளியின் இமாமாக - கதீபாக 20 ஆண்டுகள் சிறப்புடன் பணியாற்றி உள்ளார்கள். இருப்பினும், அவர்களது பெயர் கண்டி, மாத்தளை, அக்குரணை போன்ற மலைப்பகுதி நகரங்களிலும் வேருவிளை,



அலுத்கம, காலி போன்ற கடற்கரை பிரதேசங்களிலும், இரத்தினபுரி, கஹவத்தை, ரக்வானை பேன்ற மாணிக்க நகரங்களிலும் ஒரு புகழ்மிக்க பெயராக அமையப்பெற்றிருந்தது.

இதற்குக் காரணம் இருக்கிறது. அதனை அவர்களது மைந்தர் ஆலி ஜனாப் **மக்கீ நூஹூத் தம்பி** இப்படி குறிப்பிடு கிறார்:

"அவர்களது எளிமையான உடை, அழுத்தமான மார்க்க பிரசங்கம், 'நுஸ்ரத்' என்ற கூப்பிட்ட குரலுக்கு ஓடிவரும் அழகிய நற்குணமும் தான்"!

அன்னாரது அழகிய அமைதியே உருவான நிழற்படத்தை எதிர்ப்பக்கத்தில் வழங்கி உள்ளேன்.

நான் ஏற்கனவே குறிப்பிட்ட பெரியவர் அபூதாஹிர் 'ஆலிம்சா' அவர்கள்கூட, சமீபகாலம் வரையில் இப்பள்ளிவாசலில் நம்பிக்கைப் பொறுப் பாளராகத் திகழ்ந்துள்ளார்கள். தற்சமயம் அப்பொறுப்பை மகனார் ஹாஜி **பஹ்மி** அவர்கள் நிறைவேற்றி வருகிறார்கள்.

இனி, குருணாக்கலுக்கு அடுத்த **பொத்துஹர** என்ற சிற்றூரையும் எட்டிப்பார்த்துவிட்டு அப்படியே கொழும்பைச் சென்றடைவோம்.

இங்கு, **தம்பொக்க** என்னுமிடத்தில், ஏறத்தாழ 150 - 200 ஆண்டுகளுக்கு முன்பு, **திதெனியாத் தோட்டம்** என ஒரு தென்னந்தோட்டம் **சேனாஆனா செய்யது முஹம்மது**

அவர்களுக்குச் சொந்தமாக இருந்தது. தெங்கு விளைபொருள் வியாபாரம் வியாபித்திருந்தது.

அன்னாருக்கு ஆண் வாரிசுகள் இல்லா நிலையில், நான்கு பெண்களில் மூத்தவரான **உம்மு சல்மா** அவர்களின் கணவர் **கோ.சு. முஹம்மது முஹியித்தீன்** (மருமகன்) இத்தோட்டத்தைப் பரிபாலித்தார். அவரது காலத்திற்குப் பிறகு பெண்மக்களுள் ஒருவரான மர்ஹூமா **ஹலீமா பீவி**யின் கணவர் **மூனா கீனா சேனா முஹம்மது** முஹயித்தீன் நிர்வகித்தார்.

இப்பொழுது ஐந்தாவது தலைமுறையினரான **ஸிந்தா ஹாஜியார்** போன்றவர்களைக் கொழும்பில் மாணிக்க வியாபாரிகளாகக் காண முடிகின்றது.

மேலும், **'பங்களாத்தோட்டம்'** எனவும் ஒரு காணி, காயல்பட்டினத்தவருக்குச் சொந்தமாக இருந்ததாகத் தெரிகிறது.

**'கோப்பியப்பாக் கடை'** என்ற பெயரிலும், **'எம்.ஏ. அஹமது மொகிதீன் அன் சன்ஸ்'** என்றொரு நிறுவனம் இயங்கியிருக்கிறது.

மர்ஹூம் **எம்.கே.டி. மரக்காயர்** அவர்கள் நாட்டு மருந்துக் கடையொன்றை நடத்தியுள்ளார்.

நல்லது. இனி நாம் வரக்காப்பொல நகரை ஊடறுத்து, பிரதான கண்டி - கொழும்பு 'கார்ப்பட்' சாலையில் பயணித்துக் கொழும்பு சென்றடைவோம்.





# 10

*'நாம் (இலங்கை முஸ்லிம்கள்) அறபியர்களின் சந்ததியினர் தான். இதில் ஐயப்பாடில்லை. ஆனால், நாம் அறபிய சந்ததிகளானாலும், இந்தியாவிலிருந்து ஈழம் வந்த அறபுச் சந்ததிகள். அதிலும் குறிப்பாகத் தமிழகத்திலிருந்து இலங்கை வந்த அறபியர்கள். அறேபியாவிலிருந்து தென்னகம் வந்து, குடும்பத்தினராகி, தமிழகத்து மண்ணோடு கலந்த அறேபிய முஸ்லிம்கள். தமிழ்மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட இவர்களே பின்னர் ஈழத்துக்குத் தமிழ்மொழியையும், கலை, கலாசாரத்தையும் சேர்த்துக்கொண்டு வந்தார்கள்.'*

-இலங்கை எழுத்தாளர்,
**மர்ஹூம் எச்.எம்.பி. முஹிதீன்.**
தமிழும் முஸ்லிம்களும் - நூல் (1964)

# சம்ஸ் கட்டடமும் சப்பல் சந்தும்

**கொ**ழும்புப் புறக்கோட்டை!

ஆண்டாண்டுகாலமாக இலங்கையின் பெருமதிப்பு மிக்க வணிககேந்திரம்!

பன்னாட்டு வணிகப்பெருமக்களும் வளங்கொழித்த பூமி!

ஓரிரு நூற்றாண்டுகளுக்கு முன்னால் காயல்பட்டினப் பண்பையும், அவர்களது விருந்தோம்பலையும் அனுபவிக்க **சம்ஸ் கட்டடம்** அல்லது **சப்பல் சந்து** காஹிராக் கட்டடத்திற்குள் போய்விட்டால் போதும்!

இரண்டாம் குறுக்குத்தெரு பிலாவூஸ் ஓட்டலுக்கு முன்னிருந்த அந்தச் சம்ஸ் கட்டடம் இன்றில்லை.

ஆனால் குமாரவீதியில் (பிரின்ஸ் வீதி) பிரபல **டீன் லெதர்** நிறுவனத்தின் அருகாமையிலிருக்கும் அந்தச் சப்பல் சந்து (சப்பல் லேன்) இருக்கிறது! அந்தப் பழைய கட்டட வரிசையும் அப்படியே இருக்கிறது! 85-ம் இலக்க இரண்டாம் குறுக்குத்தெரு வழியாகவும் இதற்குள் நுழையலாம்.

இதுவொரு '**சின்ன காயல்பட்டினம்**' - அக்காலத்தில்!



அவர்களது முக்கியக் கேந்திரம் என்றும் சொல்லலாம்.

கொழும்பைப் பொறுத்தவரையில் மிகுதியான காயல்பட்டினவாசிகள் சம்ஸ் பில்டிங்கிலும், சப்பல் லேன் கட்டடத்திலும் வாழ்ந்தார்கள். சம்ஸ் கட்டடம், பஞ்சிக்காவத்தை ஷம்சுத்தீன் என்பவருக்குச் சொந்தமானது அதன் மாடியில் நுழைந்ததும் எதிர்ப்படும் பகுதியில் முதலாவது அறையில் இருந்தவர் **முகம்மது சதக்கத்துல்லா பல்லாக்கு லெப்பை** ஆலிம்சா அவர்கள். இரண்டாவதில் **ஏ.கே. நூஹு** ஹாஜியார். மூன்றாவதில் கதீப் **எல்.ஜி. லெப்பைக்கனி** அவர்கள். நாலாவதில், **எம்.கே.ஏ.எம். மீராசாஹிபு** அவர்கள். இப்படியே **பி.எம்.எஸ். ஷாதுலி, எம்.எம். அஹமது** ஹாஜி, **எம்.கே.எம்.ஆர். முகம்மது ஹஸன்** லெப்பை ஆகியோர் ஒவ்வொரு அறையிலும், **எம்.கே.எம்.கே. மிஸ்கின் சாஹிபு** கம்பனி, **எஸ்.எல்.எஸ். நூர்தீன்** அன்சன்ஸ், **எம்.எம். அகமது** அன் சன்ஸ் மற்றுமொரு வரிசை அறையிலும், **எல்.கே.எஸ். முகம்மது சுலைமான், எஸ்.ஏ. காதர் சாகிபு** முதலியோர் இன்னுமொரு வரிசை அறையிலும் உற்றார் உறவினருடன் குழுமியிருந்தார்கள்.

பலரும் மாணிக்கத் தொழிலையே மேற்கொண்டிருந்தார்கள். இதேபோல, சப்பல்லேன் 'காஹிரா'க் கீழ்மாடியில் (தளத்தில்) **எம்.கே.ஏ. அபுல்ஹஸன் மரக்காயர் கம்பனி**, மர்ஹூம்கள் கதீப் **மஹ்மூத்**, ஹாஜி **சித்திக்** முதலானோர் வணிகர்களாக விளங்கினர். மேல்மாடியில், மர்ஹூம்கள் **நெய்னா மரக்காயர்**, 'ஹிட்லர்'

**மஹ்மூது** ஹாஜி, **முகம்மது மீரா சாகிபு** முதலியோர் இருந்தனர். இங்கே, விசாலமான ஹால் ஒன்றும் அமைந்திருந்தது. இதில் முக்கியமாகக் கதீப் **செய்யித் அஹ்மது அன் சன்ஸ்** இயங்கியது. இங்கே **'இந்தியன் முஸ்லிம் அசோசியேசன்'** சங்கமும் இயங்கிக் கொண்டிருந்தது.

அப்பொழுதெல்லாம் தொழிலுக்கு **'ரிக்ஷா'**தான் முக்கியப் போக்குவரத்துச் சாதனமாக இருந்தது. எந்தவிதப் பயமுமில்லாமல் (இப்பொழுது நாம் பார்க்கிற 'செக்கியூரிட்டி' இல்லாமல்) பெருமதிப்புமிக்க மாணிக்கக் கற்களை, ரிக்ஷாவில் கொண்டுபோய் விற்பதும் வாங்குவதுமாக இருப்பார்கள்!

இவ்வாறான வணிக வாழ்க்கையே 19ம், 20ம் நூற்றாண்டுகளில் அமைந்திருந்தது.

அன்றையப் பழமையான பெரிய நிறுவனங்களை இப்படி வரிசைப் படுத்தலாம்: இவை பெரும்பாலும், புறக்கோட்டை இரண்டாம் குறுக்குத்தெருவிலேயே இயங்கின.

- ★ **ஷெய்குனா லெப்பை கம்பெனி** (பின்னர் எம்.கே.ஒ.எம். மீராசாகிப் நிறுவனம்).
- ★ **பி. எஸ்.கே. பல்லாக்கு லெப்பை**
- ★ **எம்.கே.எம்.ஆர். ஹஸனா லெப்பை கம்பெனி.**
- ★ **ஏ.கே. முஹம்மது அப்துல்காதர் அன்கோ** (ஆனா கானா)



- ★ **வாவு சாஹுல் ஹமீது அன் கோ**
- ★ **என்.கே.எம். ஏ. மிஸ்கீன் ஸாஹிபு அன் சன்ஸ்**
- ★ **கதீப் அன் சன்ஸ்.**
- ★ **எஸ்.எல்.எஸ். நூர்தீன் அன் சன்ஸ்**
- ★ **எம்.ஏ.பி. சுலைமான். (புஹாரி அன்கோ)**
- ★ **ஓமர் அன் சன்ஸ்**
- ★ **அப்துல் அஸீஸ் அன் கோ**
- ★ **எஸ்.டி.எம். சுலைமான் அன் கோ**
- ★ **வாவு அப்பாஸ் கம்பெனி**

மேற்கண்ட நிறுவனங்கள் மட்டுமன்றி, பிரதான **வீதி**யில் (மெயின் ஸ்டிரீட்) எம்.கே. **செய்யது அகமது கம்பனி**, எஸ். ஈ.பிச்சைத்தம்பி **(குடிகார மாளிகை)**, எஸ்.ஈ. **ஷாஹுல் ஹமீது அன் கோ, சாகிபு கம்பெனி, எம்.கே. ஷேக் அலி கம்பெனி, பேங்க்சால் வீதியில் எஸ்.எஸ்.எம். சொளுக்கார் ஸ்டோர்ஸ், பழைய சோனகர் தெருவில் வா.சே. சதக்குத்தம்பி பிரதர்ஸ்** (அரிசிக்கடை) எனப் பல நிறுவனங்கள் காயல்பட்டின மணம் பரப்பியவை.

**ஷெய்குனா லெப்பை கம்பெனி**
**(எம்.கே.ஒ.எம். மீராசாகிப் நிறுவனம்)**

ஏறத்தாழ 150 ஆண்டுகளுக்கு மேலான பின்னணி இந்நிறுவனத்திற்கு உள்ளது. அதிகாரபூர்வப் பதிவுகளுக்கு முன்பேயே இயங்கி வந்துள்ளது. மர்ஹூம் **ஷெய்குனா**

லெப்பை அவர்களால் நிறுவப்பட்ட இது, மக்கள்மார்களான **முஹம்மது உமர், முஹம்மது அலி** ஹாஜிகளால் நடத்தப்பட்டது. பின்னர், **எம்.கே. மருமகனார் எம்.கே. எம்.கே. ஸெய்னுதீன்** மரக்காயரால் கம்பெனிச் சட்டத்தின் கீழ் பதிவாகி, **எம்.கே.ஒ எம். மீராசாகிப் பிரதர்ஸ்** என்றும், **சன்ஸ்** என்றும் பெயர் மாற்றங்கள் கண்டது.

நாளடைவில், ஷெய்குனா லெப்பைப் பரம்பரையினர்களான மர்ஹூம் ஹாஜி **எம்.எம். உமர்** மகனார் **எம்.ஒ.எம். முஹியத்தீன், ஹாஜி எம்.எம். அலி** மக்களான ஆலிஜனாப்கள் **எம்.ஏ. மீராசாகிபு, எம்.ஏ. அபூபக்கர் சித்தீக்,** எம்.ஏ. **முஹியத்தீன் அப்துல்காதர், எம்.ஏ அய்யூப்** ஆகியோர், ஹாஜி **எம்.எம். உவைஸ்** மகனார் ஹாஜி **முகம்மது மீரா சாகிபு,** மர்ஹூம் **எஸ்.எம். முகியத்தீன்** ஹாஜி மகனார் **எம்.எம். முத்துவாப்பா** ஹாஜி முதலானோரால் முன்னெடுத்துச் செல்லப்பட்டது.

இந்நிறுவனத்தின் முதுகெலும்பாகத் திகழ்ந்த அல்ஹாஜ், அல்ஹாஃபிஸ், அல்-ஆலிம் **மூனா கானா ஊனா முஹம்மது மீராசாகிபு** அவர்கள், வேர்விளை, சீனன் கோட்டை **சி.எம்.எச். சாலிஹ் அன் சன்ஸ் சாலிஹ்** ஹாஜியார் அவர்களுடன் நெருங்கிய வணிகத் தொடர்பு கொண்டவர்களாக இருந்தார்கள். அன்னாருடைய மக்களாகிய ஹாஜிகள் **வஃபா சாலிஹ் இப்ராஹிம் சாலிஹ், ஜாபீர் சாலிஹ் அபுல்ஹஸன் சாலிஹ்** ஆகியோர் இப்பொழுது பிரபல மாணிக்க வியாபாரிகள்.

அத்துடன், அன்றையப் பிரசித்திப்பெற்ற இரத்தினக்கல் வியாபாரிகளான மர்ஹூம்கள் ஹாஜி



**எஸ்.டீ.எச். அப்துல் கபூர், மாக்கான் மாக்கார், மரைக்கார் பாவா** ஆகியோருடனும் நீடித்த வணிகத்தொடர்பு இருந்தது.

மேலும், மர்ஹூம் முகம்மது மீராசாகிபு அவர்களுக்கு இந்திய அரசாங்கத்தின் மூலம் கிடைக்கப்பெற்ற ஒரு கௌரவப்பதவியும் குறிப்பிடப்பட வேண்டியவொன்றாகும்.

அன்னார் அரசு நியமனம் பெற்ற ஒரு **முத்து மதிப்பீட்டாளராகத்** (செவ்வுக் கணக்கு) திகழ்ந்தார்கள். அத்துடன் ஒரு முத்து வர்த்தகராகவும் மரிச்சுக் கட்டியிலும், திருகோணமலை - மூதூரிலும் கொடிகட்டிப் பறந்தார்கள்.

இவர்களது குடும்பத்திற்கு **ஒத்த முத்து ஹாஜி குடும்பம்** என்றே பெயர். அன்னாரது தகப்பனார் காலத்தில் ஒத்த முத்து கிடைத்துப் பேரும் புகழும் பெற்றதனால் அப்படி!

இப்பொழுது 'கொமர்சியல் வங்கி'யாகப் பெயர் மாற்றம் பெற்றுள்ள அன்றைய 'ஈஸ்டர்ன் பேங்' கில் தான் பெரும்பாலான காயல்பட்டின வணிகர்களின் கணக்குகள் இருக்கும். அந்தவகையில் மர்ஹூம் மீராசாகிப் அவர்களது கணக்கிலக்கம் எட்டு! ஆம்! வெறும் எட்டு!

இந்த 8-ம் இலக்கம், **அமெரிக்காவின் ஹாரி வின்ஸ்டன், பிரிட்டனின் பீட்டர் லெவர்சன், பெஞ்சமின் ஜோர்விக், பிரான்ஸ் பீ.எ.அஸ்செர் கம்பெனி, ஜெர்மனி**

**கெப்ருட்டர் கோயர்லிட்ஸ்** போன்ற பிரபல நிறுவனங்களுக்கு மிகவும் பரிச்சயமானது.

விலைமதிப்பான கற்களையும் முத்துக்களையும் ஏற்றுமதி செய்துவிட்டுப் பின்னால் அதற்கான அரசாங்க அனுமதியைப் பெற்றுக்கொள்ளும் ஒரு விசேட சலுகை இந்த எம்.கே.ஒ.எம். மீராசாகிப் கம்பெனிக்குக் கிடைத்திருந்தது என்றால் அதன் அன்றைய செல்வாக்கைப் புரியலாம்.

மீன் அம்பர் வணிகமும் இந்தக் குடும்பத்து வம்சாவளிகளுக்கு ஒரு தனித்துவமான தொழிலாக வாழையடி வாழையாக இருந்து வருகிறது.

மர்ஹூம் அல்ஹாபிஸ், அல் - ஆலிம் மூனா **கானா ஊனா** முஹம்மது மீரா சாகிபு ஹாஜியாரின் ஆன்மிக ஈடுபாட்டை 'இதயக்கனிகள்' இறுதிப் பக்கங்களில் பார்த்த நினைவு ஏற்படவேண்டுமே!

### பி.எஸ்.கே.வி. பல்லாக்கு லெப்பை அன் கோ

கொழும்பு, இரண்டாம் குறுக்குத்தெரு 163-ஆம் இலக்கத்தில் காயல்பட்டினப் பெருமை பேசி நிற்கும் மற்றொரு பழம்பெரும் நிறுவனம். நூற்றாண்டுகளுக்கு மேலான பழமை. சில விநாடிகள் அடுத்த பக்கத்தில் படத்தைப் பார்த்து ரசிப்போம்.

இக்கம்பெனி அதிகாரபூர்வப் பதிவுகளின்படி நிறுவன ஆண்டு 1897. பெருமைக்குரிய நிறுவனர் **பாவன்னா ஸுானா (பி.எஸ்.) சதக்கு அப்துல்காதிர் பல்லாக்கு லெப்பை** ஆலிம் அவர்கள்.






**''பல்லக்கில் மாணிக்கப்பொதிகள் ஏற்றிப் பாரெல்லாம் ஒளி வீசிய அப்துல்காதிர்''** எனக் கவிஞர் பெருமக்களால் புகழப்படுகிறார்கள். இவர்களது குமாரர்களான, மர்ஹூம்கள் **பி.எஸ்.எம். சுலைமான் லெப்பை ஹாஜி** (பெரிய பி.எஸ்.), அன்னாரது தம்பியார் **பி.எஸ். அப்துல் காதிர் நெய்னா ஹாஜி** (சின்ன பி.எஸ்.) ஆகியோரும், மற்றும் மர்ஹூம்களான, **எஸ்.ஒ. ஹபீப் முஹம்மது, எஸ்.எம். ஷஹாபுத்தீன்** ஆகியோரும் **நிறுவனத்தின் நான்கு தூண்களாக விளங்கினர்.**

**ஹாஜி எம். இத்ரீஸ் மரக்காயர்** மர்ஹூம் அவர்கள், **தமது சொந்த வாழ்க்கை வரலாற்று நூலில் பதித்துள்ள சில குறிப்புகளைத்தந்து என் பேனாவுக்குச் சற்று ஓய்வளிக்கிறேன் :**

- அல்ஹாஜ் P.S. முஹம்மது சுலைமான் லெப்பை மச்சான் அவர்கள் கொழும்பில் P.S.K.V. பல்லாக்கு லெப்பை கம்பெனியில் மூத்த பங்காளியும், P.S. அப்துல் காதிர் மச்சான் அவர்களின் மூத்த சகோதரரும் ஆவார்கள்.

  வியாபாரத்தில் மிகவும் நேர்மையாகவும், கராராகவும் இருப்பார்கள். வியாபாரிகளிடம் இரத்தினங்களைக் கொள்முதல் செய்யும் போதும், விற்கும் போதும், மற்றவர்களைப் போல் அழுத்தமின்றி மிக நிதானமாக நடந்து கொள்வார்கள். இதனால் விற்பவரும், வாங்குபவரும் அவர்களின் சொல்லுக்கு மதிப்பு கொடுப்பார்கள். யாருடனும், எந்த விஷயத்திலும் தர்க்கிக்க மாட்டார்கள். மிக மெதுவாகப் பேசுவார்கள். நல்ல குணமுடையவர்கள். அவர்களின் பார்வை கவர்ச்சியாக இருக்கும். அவர்கள் கொழும்பில் இருக்கும்போதும், பம்பாயில் இருக்கும்போதும் சென்னையில் சிகிச்சைக்காக வந்த சமயங்களிலும், அவர்களுடன் நான் மிக நெருக்கமாகப் பழகி இருக்கிறேன். காயல்பட்டினத்தில் சுகக் குறைவு ஏற்பட்டு 1987 மார்ச் 21ம் தேதி அன்று காலமானார்கள்!

1. நினைவு மலர்கள் - எம். இத்ரீஸ் மரக்காயர். பக். 226 (1996)



இதே போல, மர்ஹூம், ஹாஜி **பி.எஸ். அப்துல்காதிர்** அவர்களைப் பற்றியும் அன்னார் தெரிவித்துள்ளார்கள்.

- நான் முதன் முதல் 1915 ல் காயல்பட்டினம் சென்ற நாள் முதல் நெருங்கிய நட்புடையவர்களும், நான் தனித்து இரத்தின வர்த்தகத்தை ஆரம்பம் செய்தது முதல், எனக்கு உதவியாகவும் வழிகாட்டியாகவும் இருந்து வந்தவர்களுமாகிய அல்ஹாஜ் P.S. அப்துல் காதிர் மச்சான் அவர்கள் சிறுவயது முதற்கொண்டே கொழும்பில் P.S.K.V. பல்லாக்கு லெப்பை என்னும் அவர்களின் கம்பெனியை இறுதிக் காலம் வரை திறம்பட நடத்திப் புகழ் பெற்றவர்கள் இவர்களது மறைவு : 1981 ஜூலை 14.[2]

**அன்னாரது காலத்தில், இரு முக்கிய நிகழ்வுகள் இப்பல்லாக்குக் கட்டடத்தில் நடந்தேறியுள்ளன.**

- ஒன்று **'ஆசிய ஜோதி'**யாகிய, மறைந்தும் மறையாத **பண்டித ஜவஹர்லால் நேரு 'தரிசனம்'**
- மற்றது - **சவூதி அரேபியப் பஞ்சத்திற்கு நிதி சேகரிப்பு!** ('மக்கா - மதீனா பஞ்ச நிவாரணக் கமிட்டி')

  பண்டித ஜவஹர்லால் நேரு 17.7.39 அன்று, இலங்கையிலிருந்து இந்தியத் தினச்சம்பளக்காரர்களை நாடு கடத்தும் திட்ட விசயமாகக் கொழும்பு ரத்மலானை ஏரோடிரோமில் பறந்து வந்திறங்கினார்.

2. நினைவு மலர்கள் - எம். இத்ரீஸ் மரக்காயர் பக். 217 (1996).

இந்தியர்களாலும், சிங்களவர்களாலும் ஐரோப்பியர்களாலும் இதற்கு முன் யாருக்கும் செய்யப்படாத வரவேற்பு மரியாதைகள் செய்யப்பட்டன. பல இடங்களில் பிரச்சாரங்களும் அவர் செய்தார்.

24.7.39ல் அவரும், அவருடைய சகோதரி ஸ்ரீமதி ஹத்திசிங்கும் தைக்காக் கிட்டங்கிக்கு விஜயம் செய்து, மாணிக்கங்களையும், முத்து முதலான விலையேறப் பெற்ற இரத்தினவாதிகளையும் பார்வைசெய்து களித்தார்கள். அவ்வமயம் அவருக்கு நல்வரவேற்பு அளிக்கப்பட்டது.

★ ★ ★

சென்ற 4, 5 வருடங்களாக (1940-45) யுத்தத்தினால் ஜனங்கள் ஹஜ்ஜுக்குப் போதிய அளவு போகவில்லை. இதனால் ஹிஜாஸில், குறிப்பாக, மக்கா - மதீனா நகரச் சுற்றுப்புறங்களில் வசிக்கும் ஹஜ் கால வரும்படியையே எதிர்பார்த்து வாழக்கூடிய அரபிகளுக்குக் கஷ்டமேற்பட்டுப் பஞ்சநிலைமை ஏற்பட்டிருப்பதாக நாமும் அறிந்து நமது முயற்சியின் பேரில் கொழும்பிலும், "மக்கா - மதீனா பஞ்ச நிவாரணக் கமிட்டி" என்ற பெயரால் ஒரு கமிட்டி ஏற்படுத்திப் பண வசூல் செய்தோம். மொத்தம் ரூ. 71,832/ 81 வசூலானது, கொழும்பு உட்பட 86 ஊர்காரர்கள் நிதி அனுப்பி வைத்தனர். மாட்சிமிக்க சுல்தான் அப்துல் அஸீஸ் இப்னு சுஊது மன்னர் அவர்கட்கு முதன்முறையாக ரூ.50,000/-மும், இரண்டாம் முறையாக ரூ. 20,000/-மும், ஆக ரூ. 70,000/- கொழும்பு, ஈஸ்டர்ன்பேங் மூலமாக அனுப்பிக் கொடுத்தோம். ஒப்புக்கொண்டு நன்றி பாராட்டித் தந்தி சொல்லியிருந்தார்கள்.



- மேற்படி கமிட்டித்தலைவர்

டாக்டர் **எம்.சி.எம். கலீல்**, எம்.எம்.சி.

காரியதரிசி : பி.எஸ். அப்துல்காதர்.

ஆபிஸ் : 163, 2ம் குறுக்குத்தெரு, கொழும்பு.

30-9-1945.

என் அபிமானிகளுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டிருக்கலாம். திடீரென்று என்ன, பேனாவின் நடை இப்படி, பழையகாலத்திற்குப் போய்விட்டதே என்று யோசிக்கலாம்.

அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. மேற்கண்ட வரலாற்றுக்குறிப்புகளின் நடை என்னுடையது அல்ல. அக்காலத்து நாளேடுகளில் வந்தவையுமல்ல. ஆண்டாண்டுகாலமாகப் பல்லாக்கு நிறுவனத்தில், தைக்காக் கிட்டங்கியில், பேனிப் பாதுகாத்து நடைமுறைப் படுத்தப்பட்டு வந்த நாட்குறிப்பில் காணப்படும் தகவல்களே மேற்கண்டவை.

(இந்தக் குறிப்பேட்டுக்கு **தப்தருல் அஜாஹிப்** எனப் பெயரிட்டிருந்தார்கள். **புதினப்பதிவு** எனத் தமிழ்ப் படுத்தலாம்.)

மிகவும் தூரதிருஷ்டியுடன், அக்காலத்து முக்கிய நிகழ்வுகளைப் பதிந்து வைக்கத்திட்டமிட்டு, அவ்வாறே செய்த காயல்பட்டின மண்ணின் மைந்தர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இன்றைக்கும் இந்த ஆவணத்தை - நாட்குறிப்பேட்டை - பல்லாக்கு லெப்பை நிறுவனத்தில் யாரும் பார்க்கலாம். 50-60 ஆண்டுகளுக்கு முன்னுள்ள ஊர்ச்செய்திகள் பலவும், உலகச்செய்திகள் பலவும் இதில் பதியப்பட்டுள்ளன. தற்சமயம், ஜனாப் **பி.ஏ.எம். பல்லாக்கு** அவர்கள் பொன்னாகப் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள். அவருக்கு நன்றி சொல்லுவோம்.

மேலும், மர்ஹூம் பி.எஸ். அப்துல்காதர் அவர்கள் இலங்கை முஸ்லிம்களது கல்வி வளர்ச்சியில் மிகுந்த அக்கறைக் கொண்டவர்களாக, பேரறிஞர் **ஏ.எம்.ஏ. அஸீஸ்** நிறுவிய ***இலங்கை முஸ்லிம் கல்விச் சகாயநிதி*** அமைப்பில் மிகுந்த ஆர்வம் காட்டி நிதி வசூலித்தளிப்பதில் வல்லவராகவும் திகழ்ந்துள்ளார்கள்.

சற்று முன் தெரிவிக்கப்பட்ட, **மக்கா - மதீனா பஞ்ச நிவாரண** நிதி சேகரிப்பில் எஞ்சிவிட்ட ஒரு தொகையை (ரூ. 876-38) மர்ஹூம் டாக்டர் கலீல் மற்றும் பிரமுகர்களுடைய சம்மதத்துடன் நிதியத்திற்குச் சேர்ந்த தகவலையும் மேற்படி தப்தருல் அஜாஹிப் புதினப்பதிவில் பார்க்க முடிகிறது.

பல்லாக்கு லெப்பை நிறுவனத்தின் மற்றொரு பங்காளியான, மர்ஹூம் ஹாஜி, **எஸ்.ஒ. ஹபீப் முஹம்மது** அவர்களுக்கும் ஒரு சிறந்த புகழாடை போர்த்தப்பட்டுள்ளது. அதனையும் பெரியவர் இதிரீஸ் மரக்காயர் அவர்களே செய்துள்ளார்கள்.



- **சிறு வயதிலிருந்தே வியாபாரத்தில் திறமை வாய்ந்தவர்கள். நான் கொழும்பு செல்லும் காலங்களில் அவர்களுடன் நெருக்கமான வியாபாரத் தொடர்பும் இருந்து வந்தது.**

**அவர்கள் தர்மசிந்தனை உடையவர்களாகவும், நல்ல புத்தி கூர்மையுள்ளவர்களாகவும் இருந்தார்கள்.**

1984, மார்ச் 19ம் தேதி ஊரில் வபாத்தானார்கள்.[3]

இந்த எஸ்.ஒ. ஹபீப் முஹம்மது மர்ஹூம் அவர்களும், எஸ்.எம்.ஷிஹாபுதீன் மர்ஹூம் அவர்களும், காயல்பட்டினம் எல்.கே. பள்ளிகளின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்களாக ஹாஜிகள், பி.எஸ்.எம். சுலைமான், பி.எஸ். அப்துல் காதிர் மர்ஹூம்களுடன் பக்கபலமாக நின்று தொண்டாற்றியுள்ள தகவல்களை, 'எல்.கே. பள்ளிப் பொன்விழா' மலரில் (1999) காணக்கூடியதாக உள்ளது.

குறிப்பாக, இந்து - முஸ்லிம் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக, ஒருமைப்பாட்டு உணர்வுக்கோர் அடையாளமாகத் திகழ்ந்து கொண்டிருக்கும் காயல்பட்டினம் - ஆறுமுகநேரி உயர்நிலைப்பள்ளி நிர்வாகியாக மர்ஹூம் எஸ்.ஒ. ஹபீப் முஹம்மது அவர்கள் ஒருபொழுது செயல்பட்டுள்ளார்.

அதே நேரத்தில், பல்லாக்குப் பங்காளிகள் இலங்கையிலும் கல்வி வளர்ச்சியில் அக்கறை கொண்டு

*3. நினைவு மலர்கள் - எம். இத்ரீஸ். மரக்காயர், பக். 223. (1996).*

சேவைகள் புரிந்துள்ளனர். கொழும்பு, ஸாஹிராக் கல்லூரியை ஒரு தனித்துவமிக்க கல்விக்கூடமாக உருவாக்குவதில் ஈடுபாடுகொண்டு, அன்றைய முதல்வர்களான மர்ஹூம்கள் **டி.பி. ஜாயா, ஏ.எம்.ஏ. அஸீஸ்** போன்றவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்துப் பொருளுதவிகளையும் அள்ளி வழங்கினர். முக்கியமாக - கல்லூரி விடுதிக் கட்டடமொன்றை, அல்ஹாஜ், மர்ஹூம் **என்.டீ.எச். அப்துல் கபூர்,** வாழும் வள்ளல் வேர்விளை **எம்.ஐ.எம். நளீம்** ஹாஜியார் ஆகியோருடன் இணைந்து கட்டிக் கொடுத்துள்ளனர்.

இவ்வாறு கொழும்பு ஸாஹிராவிடுதிக் கட்டடத்துடன் மட்டும் இவர்கள் பணி நின்று விடவில்லை. **மாத்தளையில்** இயங்கிக் கொண்டிருக்கும் ஸாஹிராக் கல்லூரி மாணவர்களின் தொழுகைக் கடமைகளுக்காகத் அக்காலத்தில் அவசியப்பட்ட பள்ளிவாசல் ஒன்றினையும் நிர்மாணித்துக் கொடுத்தார்கள். அப்பகுதியில் மாணவர்களுக்கென அமைந்த முதல் பள்ளி. நிகழ்வு 1980களில் (இத்தகவலை, மாத்தளைப் பகுதிக் குறிப்புகளிலும் கண்டிருப்பீர்கள்).

மேலும், இன்று நாம், 163ஆம் இலக்க இரண்டாம் குறுக்குத்தெருவில் காண்கின்ற பல்லாக்குக் கட்டட **'தக்கியாக் கிட்டங்கி'**யில் நூற்றாண்டு கால ஆன்மிகச் சுடரொளி வீசிக்கொண்டிருப்பதையும் காண்கின்றோம்.

ஒவ்வொரு வாரமும் திங்கள் வெள்ளி இரவுகளில் மக்ரிபின் பின், வித்ரியாவும், ராத்திபும், மல்லிதும் நடந்தவண்ணமே உள்ளன. சமீபகாலம் வரையில் - 2000ல் ஓய்வுறக்கம் கொள்ளும் வரையில் - இந்த **'ஹல்க்கா'** அமைப்பின் தலைவராக இருந்த மர்ஹூம் **எம்.கே.எஸ்.டி. சுலைமான்** அவர்களை நானும் என் பேனாவும் நினைத்துப் பார்க்கிறோம். அவரை ஒரு 'நடமாடும் கலைக்களஞ்சியம்' எனப் பலரும் வர்ணிப்பர்.



தற்சமயம், பல்லாக்கு லெப்பை நிறுவனத்தின் அருமை பெருமைகளைக் கட்டிக் காப்பதில் மர்ஹூம்கள் பி.எஸ். முகம்மது சுலைமான், பி.எஸ், அப்துல்காதிர் சகோதரர்களின் தலைமுறையினரும் மருமக்கள்மாரும் கருத்துடன் செயல்படுத்துகின்றனர். குறிப்பாக, ஹாஜி பி.எஸ். அப்துல்காதர் மருமகனார் **பி.ஏ. சதக்** ஹாஜியாரும் அவர்தம் குடும்பத்ினரும் கொழும்பில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

**இவர்கள் சிலரது படங்கள் ஆரம்பப் பக்கங்களில் பதியப்பட்டுள்ளன.**

## எம்.கே.எம்.ஆர். ஹஸனா லெப்பை கம்பெனி

முன் குறித்த இரு நிறுவனங்களுடன் ஒப்பிடக்கூடிய மற்றொரு பழம்பெரும் நிறுவனம் இது. இரண்டாம் குறுக்குத்தெருவிலேயே இயங்கியது. **''மு.கா.மீ.ரா. முகம்மது ஹஸனா லெப்பைக் கம்பெனி''** என்றும் அழைக்கப்பட்டது.

**முத்து காதர் சாகிபு** (மு.கா - எம்.கே.) அவர்களது மகனார் **முஹம்மது ஹஸனா லெப்பை, முகம்மது மீரா சாகிபு** (மீ.ரா - எம்.ஆர்.) மகனார் தோல் சாப்பு **மீ.ரா**

**முகம்மது அப்துல் காதிர்** அவர்களும் பங்காளர்களாக நடத்திய நிறுவனம்.

ஆரம்பித்த ஆண்டு ஏறத்தாழ 1900ல்.

அச்சமயம் **ஒத்துமுத்து ஹாஜி மூனா கானா ஊனா முஹம்மது மீரா சாகிபு** அவர்களைப் போலவே, பெரிய மாணிக்க நிறுவனங்களான **என்.டி.ஹெச். அப்துல் கபூர், மாகான் மாகார், சீனங்கோட்டை சாலிஹ் அன் சன்ஸ் பி.எஸ்.கே.வி. பல்லாக்கு லெப்பை, மிஸ்கீன் சாகிபு அன் சன்ஸ்** போன்றவற்றுடன் தொடர்பு உடையவர்களாக இருந்தார்கள்.

இவர்களிருவருக்கும் பின்னர், முஹம்மது ஹஸனாலெப்பையின் மகனார் **செய்யது அப்துர் ரஹ்மான்** அவர்களும் அவர்களது மகன் **எஸ்.ஏ. ஜவாஹிரும்,** அதேபோல, **மீ.ரா. முஹம்மது அப்துல் காதிர்** (தோல்சாப்பு) அவர்கள் மகன் **எம்.ஏ. மீராசாகிபு** அவர்களும், அவர்களுடைய பிள்ளைகள், **எம்.ஆர். முகம்மது அப்துல் காதிர்** (தோல்சாப்பு) **எம்.ஆர். முகம்மது ஹஸனா லெப்பை** (தோல்சாப்பு) முதலியோரும், ஜனாப் **முத்து காதர் சாகிபும்** (எம்.ஆர். முகம்மது ஹஸனா லெப்பை மகன்) இந்நிறுவனத்தின் பெருமைக்குச் சான்று பகர்கின்றனர்.

முக்கியமாக, இந்த வம்சாவளிகளில் இளந்தலைமுறைகளைச் சேர்ந்த ஜனாப்கள் **எஸ்.ஏ. ஜவாஹிரையும், முத்து காதர் சாகிபு** அவர்களையும் கொழும்பிலே மாணிக்க வியாபாரிகளாகக் கண்டு மகிழ்கிறோம்.



இதேபோல, எம்.கே.எம்.ஆர். ஹஸனா லெப்பைக் கம்பெனியின் இரண்டாவது பங்காளியாகத் திகழ்ந்த 'தோல்சாப்பு' **மீ.ரா. முகம்மது அப்துல் காதிர்** அவர்களது மருமகன் **க.வி. முஹம்மது நூஹு** அவர்கள் (கறுத்த நூஹு ஹாஜியார்) எஹலியகொடை என்ற மாணிக்கத் தொழிலுக்குப் பிரபலமான நகரில் **தையூப்** ஹாஜியார், **அப்துல்லா** ஹாஜியார் ஆகிய பிரபலஸ்தர்களுடன் தொழில் பார்த்தார்.

பின்னர் , இந்தக் '**க.வி.**'யின் மக்களான '**ஹாஜி காக்கா**' என்றழைக்கப்பட்ட **முகம்மது மீராசாகிபு** ஹாஜி **முகம்மது அப்துல் காதர்** ஹாஜி (தங்கள்) முதலியோர் தொழிலில் பிரகாசித்தனர். இவர்களது இளையதம்பி **முஹம்மது உவைஸ்** ஹாஜி சிறுவயதில் இங்கு படித்து தொழில் பழகினார். தற்சமயம் ஹாங்காங்கில் '**விளக்கு ஜெம்ஸ்**' நிறுவனத்தை நடத்திவருகிறார்.

இப்பொழுதும் கொழும்புமாநகரில், 75 வயது எனச்சொல்ல முடியாதபடி ஹாஜி **எம்.என். முஹம்மது அப்துல் காதர் - 'தங்கள்'** அவர்கள் மிகவும் ஆன்மிக ஈடுபாட்டுடன் இருப்பதைப் பார்க்க முடிகிறது. அன்னாரது மைந்தர் ஹாஜி **முஹம்மது** 'தங்கள்' **நூஹு** அவர்களும் இளைய தலைமுறை தொழில் வித்தகராகத் திகழ்கிறார்.

இந்தத் தந்தையாரும் மகனாரும் எனது ஆய்வுப்பணிகளில் மிகவும் ஈடுபாடுகொண்டவர்களாக எனது வேலைப்பளுக்களைக் குறைப்பதில் மிகவும் சிரத்தை எடுத்துக்கொண்டார்கள் என்பதை நான் இந்த இடத்தில்

நன்றிப் பெருக்குடன் பதிக்கக் கடமைப் பட்டவனாகின்றேன். குறிப்பாக, கடந்த மே மாதத்துக் கத்திரி வெயிலில் காயல்பட்டின இல்லந்தோறும் வாவு **எம்.எம். சம்சுதீன்** ஹாஜியுடன் சென்று பழம்பெரும் நிழற்படங்களைச் சேகரித்த ஹாஜி முஹம்மது **'தங்கள்'** நூஹூவுக்கு சமுதாயம் கடமைப் பட்டுள்ளது.

இப்பொழுது நான், இந்தக் கொழும்புப்பகுதி ஆய்வை நிறைவு செய்து கொள்ள வேண்டும்.

பக்க அதிகரிப்புக்கு அஞ்சி, மூன்று பழம்பெரும் நிறுவனங்களைப் பற்றி மட்டுமே விவரங்களைத் தர முடிந்தது. நான், எனது 13 ஆவது வயதில், தந்தையாரது (முத்து முகம்மது) அகால மறைவின் காரணமாகத் தொழில் பார்க்க நுழைந்த **'ஆனா கானா'** (ஏ .கே. முகம்மது அப்துல் காதர் அன் கோ) நிறுவனத்தையோ, மற்றும் **கத்தீப் சன்ஸ் எம்.ஏ.பி. சுலைமான்** போன்ற வேறுபல நிறுவனங்களைப் பற்றியோ விவரமான குறிப்புகளை வழங்க வசதிப்படாது போனேன்.

இன்ஷா அல்லாஹ், இரண்டாம் பாகத்தில் அதனை நிறைவேற்றுவேன்.

இங்கே, கடைசியாக இரு குறிப்புகள்:

முன்பு குறிப்பிடப்பட்ட கொழும்பு - மருதானை ஸாஹிராக்கல்லூரியில் காயல்பட்டின - கீழக்கரை மாணவர்கள் நிறைந்து காணப்பட்டனர். அங்கு நானும் கற்ற காரணத்தினால் என் நினைவில் வரும் சில பெயர்களைத் தரவிருப்பம்.



தற்சமயம் லண்டனில் டீ.ஜி.ஓ.வாகவுள்ள **டாக்டர் செய்யது அஹமது** (மர்ஹூம், ஹாஜி எஸ். ஓ. ஹபீப் அவர்களது இளையவர்) மர்ஹூம் **டாக்டர் எம்.எஸ். சுலைமான்** (எம்.ஏ.பி.சுலைமான் கம்பெனி) மர்ஹூம் ஹாஜி முகம்மது மீரா சாகிபு மகனார் ஹாஜி **எம்.எம். உவைஸ்** (தலைவர், கே.எம்.டி. மருத்துவமனை), மர்ஹூம் ஹாஜி எஸ்.எம். முஹியத்தீன் மகனார் ஹாஜி **எம்.எம். முத்துவாப்பா,** மர்ஹூம், ஹாஜி பி.எஸ். அப்துல் காதிர் நெய்னா மகனார் **பி.எஸ்.ஏ. பல்லாக்கு லெப்பை** பி.எஸ்சி. (துணைச்செயலர், எல்.கே. பள்ளிகள், - பொருளாளர், பாளையங்கோட்டை, சதக்கத்துல்லா அப்பாக்கல்லூரி) ஹாஜி கத்தீப் செய்யது அஹமது மகனார். ஹாஜி **கத்தீப் சலீம்** (எல்.கே.எஸ். ஜூவலர்ஸ் எஜூகேசனல் டிரஸ்ட்)

இவர்களைப் போன்ற இன்னும் பலர். இவர்களனைவரும் புத்திஜீவிகளாக, பேரறிஞர்களாக, சமூக சேவையாளர்களாகத் திகழ்வதற்கும், 'இலங்கை ஆங்கிலம்' பேசுவதற்கும் கொழும்பு ஸாஹிரா ஒரு காரணமாகும்.

மேற்கண்ட பட்டியல் மிகவும் சிறியது என்பதை உணர்கிறேன். பலர் விடுபட்டுள்ளனர். மன்னியுங்கள்.

நல்லது. இப்பக்கம் ஒரு பிரபலமான இறையில்ல விவரத்துடன் இனிதே நிறைவாக உள்ளது. **ஜாமி உல் அழ்பர்**! இப்பள்ளிவாசல் புறக்கோட்டையில் தான்! அடையாளம் காண்பீர்களா? ஆனால் **சம்மாங்கோட்டுப் பள்ளி** என்றால் புன்னகைப்பீர்கள்!

இந்தப் பெயரிலேயே அதன் தமிழகத் தொடர்புகளை யாரும் தெரியலாம். தெரியாது என்று யாரும் சொல்லவும் மாட்டார்கள். 'ஜாமில் அழ்பர்' பதிவில் மட்டுமே. இது, அனைத்துத் தமிழ்நாட்டு முஸ்லிம்களினதும் பெருமை பேசி தலைநிமிர்ந்து நிற்பதை மறக்கவோ மறைக்கவோ முடியாது.

அவ்வாறு மறக்கவும் மறைக்கவும் விரும்புகின்ற ஒரு சிலர் இலங்கையில் இல்லாமலும் இல்லை.

இதை என் பேனாதான் தயக்கமில்லாமல் தெரிவிக்க வேண்டும்.

இந்தச் சம்மாங்கோட்டுப் பள்ளியானது, கொழும்பின் இதயமான புறக்கோட்டை வணிகக் கேந்திரத்தில், பிரதான பஸாருடன் (மெயின் வீதி) இணைந்துள்ள இரண்டாம் குறுக்குத் தெருவின் இறுதி எல்லையில் இலங்குகிறது.

தினமும் சகல இன மக்களும் சங்கமிக்கும் இடத்தில் உள்ள பள்ளிவாசலைக் கண்குளிரக் கண்டவாறு தான் அனைவரும் தத்தம் காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றனர்.

இந்த இறையில்லத்துடன் காயல்பட்டின மக்களுக்கு நீண்டகாலத் தொடர்பு உண்டு. அதே நேரத்தில், அன்றைய **'மிஅஃபர்'** (மாபார்) ஊர்களான அதிராம்பட்டினம், அம்மாப்பட்டினம், தேவிப்பட்டினம், கீழக்கரை, தொண்டி பெருமக்கள் முதற்கொண்டு கேரளக்கரை - கண்ணனூர் பொழியூர் வரையில் இதன் உயர்வுக்கும் உன்னதத்திற்குப் காரணகர்த்தர்களாக உள்ளனர்.



தற்சமயம், பள்ளிவாசல் நம்பிக்கைப் பொறுப்பாளர் சபைத் தலைவராகப் பிரபல உலமாப் பெருமகனார், அதிராம்பட்டினம் **அப்துல்லா ஆலிம்** அவர்களும், செயலாளராக காயல்பட்டினம் ஹாஜி **பி.ஏ. முகியித்தீன்** மகனார் ஜனாப் **பி.ஏ.எம். பல்லாக்கு** அவர்களும் சேவையாற்றுகின்றனர்.

இருபதாம் நூற்றாண்டுப் பிற்பகுதியில் சம்மாங்கோட்டுப் பள்ளிவாசல் மிகவும் புகழடைவதற்கு இமாம்கள் நால்வர் காரணமாக அமைந்தார்கள்.

★ மர்ஹூம் **உஸ்தாதுனா முஹம்மது லெப்பை ஆலிம்** (காயல்பட்டினம்)

★ மர்ஹூம் **ஸூபி ஹஸரத் செய்கு அப்துல் காதிர்** (காயல்பட்டினம்)

★ மர்ஹூம் **பதுருதீன் ஆலிம்** (அதிராம்பட்டினம்)

★ மர்ஹூம் **எம்.கே.ஈ. அபுல்ஹஸன் ஆலிம்** (காயல்பட்டினம்)

எம்மைப் போன்ற பலரது **'இதயக்கனி'யாகத்** திகழ்ந்த **காஹிரி அபுல் ஹஸன்** அவர்களைப் பற்றிய தனிக்குறிப்பு இந்நூலின் ஆரம்பப் பக்கங்களி லொன்றான 64ம்பக்கத்தில் உள்ளது. பார்த்திருப்பீர்களே!

மேலும், 1933 - 1950 - 1976 ஆகிய ஆண்டுகளில் ஒரு மாபெரும் ஆன்மிகச் சாதனை மீண்டும் மீண்டும் நிலைநாட்டப்பட்டது!

நூலின் ஆரம்பப்பக்கங்களைப் புரட்டினால் விவரம் புரியும். (பக். 61-63)

புரட்டியிருப்பீர்கள். அல்லது புரட்டுங்கள்.

இனி, 'அப்பாடா' என ஒரு பெரிய மூச்சு விட்டுக் கொள்வதற்கு அனுமதியுங்கள் அபிமானிகளே!

இந்த நூலின் பக்கங்கள் 258ஐத் தாண்டுகிறது.

ஆய்வுகள் இத்தனை பக்கங்களை விழுங்கத்தான் செய்யும்.

இன்னும் பக்கங்களைப் பறக்கவிட்டால் இலங்கையின் பட்டிதொட்டி முழுவதிலுமே காயல்பட்டின மணம் நுகரலாம்.

ஆனால், இன்றைய அதிவேகக் கால கட்டத்தில் ஒரு புத்தகத்தின் பக்கங்கள்இப்படி நீளுவது சிறப்பல்ல, படிக்கப் படாமல் - புரட்டப் படாமல் 'கன்னித் தன்மையோடு' நூலகத்திற்குள்ளோ இல்லத்திற்குள்ளோ முடங்கிப் போய்விடும்!

என் ஆய்வுநூல் அப்படி ஆகக்கூடாது.

அடுத்தடுத்த சில பக்கங்களில் வேறுசில ஊர்களில் இருந்த செல்வாக்கைச் சிற்சில பத்திகளிலே வரிசைப்படுத்தி விவரமான குறிப்புகளைத் தவிர்க்கிறேன். இந்நூலை 304 பக்கங்களில் முடிக்கிறேன்.



**எஹலிய கொடை**

இலங்கையில் இரத்தினக்கற்களுக்கு பெயர் பெற்றது இரத்தினபுரி. இந்த நகரை அண்மிக்கும்போது எதிர்ப்படுவது எஹலிய கொடை.

**என்.கே. எம்.ஏ. மிஸ்கீன் ஸாஹிபு ஆலிம் அன் சன்ஸ்** நிறுவனம் இங்கு மட்டுமல்ல, கொழும்பிலும் பிரபலம். இவர்களது வழிவந்த தலைமுறையினர் ஒவ்வொரு வகையிலும் வாழ்ந்து சிறந்தவர்கள்.

மிஸ்கீன் ஸாஹிபு அவர்களுக்கு **முஹம்மது நூஹு ஆலிம் - செய்யது முகம்மது ஆலிம் - அபுல்ஹஸன் ஆலிம்** என மூன்று ஆண் மக்கள்.

மூத்தவர் முஹம்மது நூஹு ஆலிம் அவர்களது மருமகனாக **முகம்மது அப்துல் காதர் ஆலிம்** அவர்கள் விளங்கினார்கள். இவர்களும் ஒரு மாணிக்க மனிதரே!

இன்றைக்கும் காயல்பட்டினம் அம்பல மரக்காயர் தெருவில் அந்திமந்தாரை நிலையில் பார்க்கிறோம்,

நூற்றாண்டை நெருங்கிக் கொண்டிருக்கும் பெரியவர் அவர்கள்.

'வாழ்நாளெல்லாம் பணம் பண்ணிக் கொண்டிருக்க மட்டும் பிறந்தவனல்லன் மனிதன். சம்பாதிப்புக்கும் ஓர் எல்லை வகுத்துக் கொள்ள வேண்டும். அவனே சிறப்பானவன்' என்ற அற்புதமான

கருத்தைக் கொண்டிருக்கும் அமைதியான வாழ்க்கை அவர்களுடையது.

எஹலிய கொடையில் ஜும்ஆப் பள்ளி நிறுவப்பட காரணகர்த்தா. தொழுகையும் நடத்தி வந்தார்கள். அவர்களது இளமைக்காலப் படத்தை பவளம் கண்டவர்களில் பார்த்திருப்பீர்கள்.

''**ஹாஜிக்கடை**' யாக அவர்கள்தம் நிறுவனம் இங்கு இயங்கியது.

மேலும், மிஸ்கீன் ஸாஹிபு ஆலிம் அவர்களது இரண்டாவது புத்திரர் செய்யிது முஹம்மது ஆலிம் அவர்களது மைந்தர் **பாஸி ஹாஜி** அவர்களையும் இன்றும் நேர் முகம் காணலாம் - ஒரு பிரபல சமூக சேவையாளராக. காயல்பட்டின கே.எம்.டி. அவர்களுடன் பின்னிப் பிணைந்துள்ளது. (அது என்ன கே.எம்.டி? ஏற்கெனவே 71ஆம் பக்கத்தில் தந்துள்ளேன்.)

மூன்றாவது புத்திரரான **அபுல் ஹஸன் ஆலிம்** அவர்கள், பிரபலமான ஒரு வேர்விளைப் பெருமகனாருக்குத் தொழில் ஆசானாகத் திகழ்ந்துள்ளார்கள்.

உங்கள் யுகம் சரி! பெரும் புரவலர் - கல்வித்தந்தை **அல்ஹாஜ் எம்.ஐ.எம். நளீம் ஹாஜியார்** அவர்களது ஆசான் அபுல்ஹஸன் ஆலிம் அவர்களே!

இவர்களுக்கு அடுத்ததாக தோல்சாப்பு **அஹமது சுலைமான்** அப்பா அவர்களையும் நினைவுகூறவேண்டும்.



தோல்சாப்பு **முஹம்மது அப்துல்காதர்** அவர்களது பராமரிப்பில் வளர்ந்து வியாபாரத்தில் ஈடுபட்டவர்கள்.

எஹலிய கொடையிலும் கொழும்பிலும் மட்டுமல்லாமல், இரத்தினபுரி - வேர்விளை - சீனன் கோட்டை, காலி முதலான ஊர்களிலும் மாணிக்க வியாபாரத்தில் ஈடுபட்டு, அனைவரராலும் - குறிப்பாக சிங்கள மக்களாலும், '**அப்பா**' என அழைக்கப்பட்டு வாழ்த்தப்பட்டார்கள்.

ஏழை மக்களிடம் கருணையும் பற்றும் பாசமும் வைத்திருந்தார்கள். தப்லீக்கிலும், தரீக்காவிலும் (ஷாதுலிய்யா) ஈடுபாடு. ஓய்வுறக்கம் ஊரில் : 1979 ரமழான் 19.

அன்னாருடைய ஆண் மக்கள் நால்வரில் இருவர் யாழ்ப்பாணத்தில் காலூன்றிய ஜனாப் டி.ஏ.எஸ். முஹம்மது அப்துல் காதர், முஹம்மது அபூபக்கர் ஆகியோர் ஆவர்! மேலும் தகவல்களுக்கு 7ஆம் அத்தியாயம் இருக்கவே இருக்கிறது. (ஜனாப் டி.ஏ.எஸ். அப்துல் காதர் மகனார் ஏ.கே. **அஹமது சுலைமான்** தற்பொழுது கொழும்பில் தொழில் பார்க்கிறார்.)

மற்றும் மாணிக்க வணிகத்தில் ஈடுபட்டு இவ்வூரில் சிறப்பெய்தியவர்களாக **கம்பல் பக்ஷ் அப்பா, செய்யிது முஹம்மது தீன், (செய்மின் காக்கா), புல்லாலி செய்யிது இப்ராகீம், முத்து முஹம்மது** மற்றும் அவர்களது மக்களும் **எம்.ஏ.எம். மீரா லெப்பை** முதலியோரும் திகழ்கிறார்கள்.

அன்னாரது புதல்வரே ஹாஜி **எம்.எல். சேக்னா லெப்பை** அவர்கள். சமூக சேவைகள் என்பது இவரது

உயிர் மூச்சு. இவர் நடத்திவரும், **'அகில உலக இசுலாமியக் கண்காட்சி'** இடம்பெறாத ஆன்மிக - இலக்கிய விழாக்கள் இல்லை. என் எழுத்துக்களின் நெருங்கிய அபிமானி. கொழும்பில் கேரிக்கல்லூரியில் ஆரம்பக்கல்வி பயின்றவர்.

மேலும் **ஹாஜியார்ஸ், கே.வி. முஹம்மது நூஹூ அன் சன்ஸ், செய்யிது முஹியித்தீன் செய்யிது இப்றாஹிம் அன் கோ, பி.எம்.எஸ். இப்ராஹிம் ரப்பர் ஸ்டோர்ஸ்** குறிப்பிடப்படவேண்டிய நிறுவனங்கள்.

இங்கு வாழ்ந்து சிறந்த பலருள் சிலரது நிழற்படங்களை 18ஆம் பக்கத்தில் சேர்த்துள்ளேன்.

## இரத்தினபுரி

இங்கு இயங்கிய நிறுவனங்களாவன :

★ **ஜெம் பாலஸ்** (எஸ்.கே.எம். முஹியித்தீன், எஸ்.கே. ஸெய்னுல் ஆப்தீன் அன் கோ)

★ **ஜுவல்லரி பாரடைஸ்** (புல்லாலி செய்யிது இப்ராஹிம் அன்கோ)

★ **வாவூ ஷாஹுல் ஹமீது அன் கம்பெனி**

★ **பி.எம்.கே.ஷெய்க் நூர்தீன் அன் சன்ஸ்**

★ **பி.எஸ்.கே.வி. பல்லாக்கு லெப்பை அன் கோ**

வணிகப்பெருமக்களது பிள்ளைகள் சென். அலோசியஸ் கல்லூரியில் கற்றனர்.

ஜென்னத் ஜும்ஆப் பள்ளிவாசலுடனும், பஸார் தைக்காவுடனும் ஆன்மிகத்தொடர்புகள் அமைந்திருந்தன.



யாரும் மறக்கமுடியாத ஒரு பெரியவரைப் பற்றியும் தெரிவித்தாகவேண்டும். ஏககாலத்தில், இரத்தினபுரியிலும் கொழும்பிலும் கொடிகட்டிப் பறந்தார்.

அவர்கள் **சாவன்னா** என அன்பாக அழைக்கப்பட்ட **வாவு ஷாகுல் ஹமீது** அவர்களாகும்.

வாவு என்ற பெயரின் மகத்துவத்தை இன்று தமிழகம் மட்டுமல்ல, தென்கிழக்காசிய நாடுகளும் அறிந்துள்ளன.

70-80 ஆண்டுகளுக்கு முன்னால் இரத்தினபுரியில் இரத்தினக்கல் தொழில் இவர்களால் பெரும் சிறப்புப் பெற்றது.

அன்னாரது ஏழு புதல்வர்களில் மூத்த புதல்வர் மர்ஹூம் ஹாஜி **வாவு எஸ். மொகுதூம்** அவர்கள் இலங்கையிலும் தமிழகத்திலும் நல்ல இலக்கிய ஆர்வலராகவும் சமூக சேவையாளராகவும் விளங்கினார்கள். அவர்களது சகோதரர்களான **வாவு எஸ். முஹமது சுலைமான் - வாவு எஸ். செய்யது அப்துல் ரஹ்மான் - வாவு எஸ். சித்தீக் - வாவு எஸ். அப்துல் கஃபார் - வாவு எஸ். ஜெய்னுல் ஆப்தீன் - வாவு எஸ். காதர்** முதலியோர் தொழில் வித்தகர்களாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மேலும், மர்ஹூம் வாவு எஸ். மொகுதூம் அவர்கள் விட்டுச்சென்ற சமூகசேவைப் பணிகளை அன்னாரது புதல்வர்கள் தொடர்கின்றார்கள்.

**வாவு எம்.எம். ஷம்சுதீன்** அவர்கள் காயல்பட்டினம் பைத்துல்மால் தலைவராகவும், இந்திய யூனியன் முஸ்லிம்

லீகின் காயல்பட்டினப் பிரிவு இளைஞரணித் தலைவராகவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பழகுவதற்கு இனியவர்; பண்பாளர். இந்த ஆய்வுக்கு அவரும் ஒரு தோன்றாத்துணை.

மேலும், இரத்தினபுரியில் தொழில்புரிந்த **அபூபக்கர் நாசர்** அவர்களும் குறிப்பிடப்பட வேண்டியவர்.

### வேர்விளை - காலி - மாத்தறை

விவரிக்க வேண்டியதேயில்லை!

விலைமதிப்பற்ற மாணிக்கக்கற்களை நம்பிக் கொடுத்து, விற்பனை செய்துவர அனுப்பும் பலரை இப்பகுதியில் காயல்பட்டினவாசிகள் சம்பாதித்துள்ளனர். அவர்களது நாணயத்தில் அவ்வளவு நம்பிக்கை!

நூற்றாண்டுகளுக்கு முந்திய் சி.எம்.எச். **சாலிஹ் அன் சன்ஸ்** முதற்கொண்டு, தொழில் அதிபராகவும் கல்வித் தந்தையாகவும் ஆகிவிட்ட **எம்.ஐ.எம். நளீம்** ஹாஜியார் வரையில் கிந்தோட்டை **ஹுசைன் ஹாஜியார். அன்வர்** ஹாஜியார் ஈறாகப் பெரிய பட்டியல் போடலாம்.

காலிமாநகரில்மேயர், **மர்ஹூம் ஏ.ஆர்.எம். தாஸிம் ஏ.எல்.எம். மாகான் மாகார், கொழும்பு ஜுவலரி தாஹா காசிம், மதராஸ் ஹனீஃபா** நாநா, **ஜவ்வாது** நாநா போன்ற முக்கியப் பிரமுகர்களுடனும் தொடர்பு கொண்டவர்களாக இருந்தார்கள். அங்கே **மீராசாகிபு காக்கா** போன்றவர்கள் தொழில்புரிந்தார்கள்.



மாத்தறையைப் பொறுத்தவரையில், 16ஆம் நூற்றாண்டின்பின், அறபியர் தொடர்பு குறைந்து தமிழக, பண்பாட்டுக் கோலங்கள் வலுத்தன. குறிப்பாகக் காயல்பட்டினம் - கீழக்கரை - கன்னியாகுமரி - காரைக் கால் பகுதிகளிலிருந்து வந்த வர்த்தகர்கள் இப்பகுதியில் குடியமர்ந்தனர். அம்பாந்தோட்டை கடற்கரைப்பிரதேசம் வரையில் செல்வாக்கு செழித்தது.

'மாத்தறை மாவட்ட முஸ்லிம்களுக்கும் காயல்பட்டினம் - கீழக்கரை - தஞ்சாவூர் பகுதி முஸ்லிம்களுக்குமிடையில் வணிக ரீதியாகவும் - கலாசார பண்பாட்டு ரீதியாகவும் நிலவிய தொடர்புகளும், அதனிடையாக ஏற்பட்ட தாக்கங்களும் மிக ஆழமான ஆய்வினை வேண்டி நிற்கும் ஒரு துறை ஆகும்' எனத் தெரிவித்துள்ளார். கலாநிதி (முனைவர்) **எம்.ஏ.எம். சுக்ரீ**[1] அந்த ஆய்வுக்கு இந்நூலில் இடமில்லாதுள்ளது.

எவ்வாறாயினும், மாத்தறை மாநகரில் இன்றைக்கும் சீரும் சிறப்புடன் திகழும் தைக்கா ஒன்று காயல்பட்டினம் தைக்கா சாகிபு (ஒலி) புகழ்பாடித் திகழ்கிறது. அதுபோலவே மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களது பெருமையும்.

இந்நகரின் பெரியார் **அப்துஸ் ஸலாம்** நாநா (இஸ்ஹாக் அன் கம்பெனி அதிபர்) அவர்கள் காயல்பட்டின வாசிகளுடனும் ஏற்படுத்திக்கொண்ட வணிகத் தொடர்புகளும் பிரசித்தமானவை.

*1 'வரலாற்றுப் பாரம்பரியம்' - கட்டுரை. பக். 31-32. மாத்தறை மாவட்ட முஸ்லிம்கள் - ஆய்வுத் தொகுப்பு. 1995.*

நல்லது, எனது பேனா எந்த இடத்திலிருந்து வரலாற்றைப் பதிக்க ஆரம்பித்ததோ (3-வது அத்தியாயம்) அதே வடமேற்குப் பகுதிக்கு மீண்டும் போய் இதை நிறைவு செய்வது மிகப் பொருத்தமாகும்.

**சோழன் ஆண்ட பூமியும்** முதலாம் பராக்கிரமபாகு **கண்ட** ரஜரட்டையுமான அநுராதபுரத்தில் காயல்பட்டின வாசிகள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பேயே முக்கியத்துவம் பெற்றிருந்தனர். அவர்கள் வணிகர்களாகவே வாழ்ந்துள்ளனர்.[2]

ஆனால் எனது அவசர ஆய்வுக்குள் தென்படுவது ஒரே ஒரு **வி.எஸ். ஹாஜி பிரதர்ஸ்** மட்டுமே. அதன் நிறுவனர் மர்ஹூம் வா.செ. **உமர் அப்துல்காதர்** அவர்களாவர்.

இங்கே இறையில்லப் பணிகளை நோக்கும்போது, அநுராதபுர மாவட்டத்துப் பள்ளிவாசல்கள் பலவற்றின் பெயர்களில் ஒரு பெரிய ஒற்றுமை! **முஹியத்தீன்** என்ற அடைமொழியை அவைத் தாங்கி நின்கின்றன.

- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - மதவாச்சி
- ✪ **முஹியத்தீன் மஸ்ஜித்** - ரம்படவெவ
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - மரதன் கடவெல
- ✪ **முஹியத்தீன் ஜும்ஆப்பள்ளிவாசல்** - அநுராதபுரம்
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - தலகஹவெவ
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - மஹாவில

2. *அநுராதபுரம் தேசிய மீலாத் விழா மலர் - ஏ.பி.எம். ஹுசைன். 1992. பக். 33. இலங்கை அரசின் முஸ்லிம் விவகாரத் திணைக்கள வெளியீடு.*



- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - கரடிக்குளம்
- ✪ **முஹியத்தீன் ஜும்ஆப்பள்ளிவாசல்** - கெப்பிட்டி கொல்லாவ
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - கொமரங்க வெவ
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - மஹா சியம்பலஸ்கட
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - கல்லங்குட்டிய
- ✪ **முஹியத்தீன் பள்ளிவாசல்** - மரக்கல அடுவ

கௌதுல் அஃழம் ஹஸரத் முஹியித்தீன் **அப்துல்காதர் ஜீலானி** (ரஹ்) அவர்களது காதிரிய்யாத் தரீக்காவுக்கும் காயல்பட்டினத்திற்கு முள்ள தொடர்பு அபிமானிகள் அறிந்ததே.

இந்தப் பின்னணியை வைத்து மேற்படி அநுராதபுர மாவட்டப் பள்ளிகளை உற்று நோக்குங்கள். உண்மைகள் பளிச்சிடும்.

மேலும், புத்தளம் ஆய்வாளர் கலாபூஷணம் ஏ.என்.எம். ஷாஜஹான் தகவலின்படி -

**"பள்ளிவாசல்களையும், தர்ஹாவையும் அவைகளைச் சுற்றிக் கடைகளை வைத்திருந்த தென்னிந்திய வியாபாரிகளே பராமரித்து வந்துள்ளனர். அவர்கள் இறை இல்லங்கட்கு அளித்துள்ள பங்களிப்புகள் பல. ஆரம்பத்தில் உள்ளூர் வாசிகளுக்கு பள்ளிவாசல்களை நிறுவ ஊக்கம் அளித்து அவற்றைப் பராமரிப்பதற்கான வசதிகளையும் செய்தனர். பள்ளிகளில் பணிபுரியக் கூடிய இமாம்களையும், லெப்பைமார்களையும்,**

**முஹியித்தீன்களையும் தமது ஊர்களிலிருந்து அழைத்து வந்து அவர்களுக்குத் தேவையான வசதிகளையும் செய்து கொடுத்தனர். அவ்வாறு காயல்பட்டினம், கீழக்கரை, அதிராம்பட்டினம், குலசேகரன் பட்டினம், தொண்டி போன்ற இடங்களிலிருந்து வந்தோர் பலர்.**[3]

அதேநேரத்தில், புத்தளத்தில் உப்புச் செய்கையை அறிமுகப் படுத்தியவர்களாக உப்பளங்களைக் கொண்டவர்களாக இருந்திருப்போரையும் பார்க்கிறோம்.

"காயல்பட்டினத்திலிருந்தும் கீழக்கரையிலிருந்தும் வந்தவர்கள் இங்கு உப்பளங்களை உண்டாக்கி உப்புச் செய்கைக்கு வித்திட்டிருக்கலாம். அங்கு நடந்த முறைக்கும் புத்தளத்தில் நடைபெறும் முறைக்கும் நெருங்கிய ஒருமைப்பாடு காணப்படுகிறது" என்கிறார் ஷாஜஹான்.

அதனால்தானோ என்னவோ புத்தளத்தில் வணிக நிலையங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

விதிவிலக்காக ஒரு *சலாஹுத்தீன்* **பிரதர்ஸை** மட்டும் அடையாளம் காணமுடிகிறது.

எவ்வாறாயினும் இப்பொழுதும் வேறோர் அடையாளத்தை அங்கே காணலாம்.

3. *புத்தளம் வரலாறும் மரபுகளும் – ஏ.என்.எம். ஷாஜஹான் பக். 179.*



புத்தளத்து முஸ்லிம்களின் பழைய இல்லம் ஒன்றில் நுழைய அனுமதி கிடைத்தால் காயல்பட்டின வீட்டிற்குள் போய்விட்ட உணர்வு ஏற்படும்!

ஜன்னல் அமைப்பிலிருந்து, நிலைக்கதவு உட்புறக் கட்டமைப்பு எல்லாமே அக்கரையின் சாயலிலேயே அமைந்திருக்கும்!

இது எப்படி இருக்கு?

கலை – கலாசாரம், பண்பாட்டுக் கோலங்கள், உணவுவகைகள், ஆடை அலங்காரங்கள், மார்க்கம் பேணுதல் அனைத்திலுமே காயல்பட்டினத்தையும் கீழக்கரையையும் ஒத்ததாகவே இருக்கின்றன!

இது எப்படி இருக்கு?

வேறொன்றுமில்லை! படகுகளிலும், பாய்மரக் கப்பல்களிலும் இறக்குமதி, ஏற்றுமதியில் கொடிகட்டிப் பறந்தவர்கள், நாட்கள், மாதங்கள் எனத் தங்க நேர்ந்தபொழுது, இஸ்லாமிய நெறிமுறைகளுக்கொப்ப குடும்பங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள் எனக் குறிப்பதில் தவறில்லை.

அத்துடன், **'மரக்காயர்'** என்ற பதம், ஒவ்வொரு ஆணின் பெயருக்குப் பின்னாலும் தவறாமல் ஒட்டிக் கொண்டிருக்கும்! இந்த ஒன்றைக் கொண்டே வரலாற்றைப் புரியலாம். இன்றைக்கும் மரக்காயரை மறக்காமல் கொண்டிருப்பவர்கள் இலங்கையின் இப்பகுதியினரே!

கல்பிட்டிப்பகுதியில் காண்பவர்கள் அனைவரும் மரக்காயர்களே!

**"கடல்மார்க்கப் பாதையைப் பார்க்கும்போது காயல்பட்டினத்தில் இருந்து நேர்க்கோட்டில் கல்பிட்டி இருப்பது நோக்கத்தக்கது"** என்கிறார், காயல்பட்டின இலக்கிய ஆர்வலர், எனது எழுத்துக்களின் அபிமானி, திருச்சி ஹாஜி டி.ஏ.எஸ். அப்துல் காதிர் அவர்கள். இது யாரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தும்.

அவர் மட்டுமன்றி, புத்தளம் - கல்பிட்டி முதியவர்கள்கூட இப்படித்தான் சொல்கிறார்கள்.

கொஞ்சம் கல்பிட்டியை எட்டிப்பார்க்கத்தான் வேண்டும்!

இதை, மூன்றாம், நான்காம் அத்தியாயங்களில் செய்திருக்கலாம். புத்தளம் - அநுராதபுரம் - யாழ்ப்பாணக்குடாநாடு என்று வரலாற்றை நோக்கிப் போய்விட்டோம். இந்த ஊர் தனியாக இன்னொரு பகுதியில் பிரிந்திருப்பதும் ஒரு காரணம். (வரைபடம் மூன்றாம் அத்தியாயத்தில் இருப்பதாக நினைவு!)

கொழும்பு - புத்தளம் 132 கி.மீ.கள் நகரை அணுகுவதற்கு 5 கி.மீ. இருக்கும்பொழுது பாலாவி என்ற இடத்தில் ஒரு சந்திப்பைச் (ஜங்ஷன்) சந்திக்கிறோம். இங்கிருந்து ஆரம்பிக்கிறது கல்பிட்டிப் பாதை. தூரம் 40 கி.மீ. இப்பாதையும் பாலாவிப் பாலமும் அமைக்கப்படுவதற்கு முன் கல்பிட்டி ஒரு தீவாகவே கருதப்பட்டது. ஏனையப் பகுதிகளுடன் தொடர்பற்று இருந்தது. இந்து



சமுத்திரக்கடலால் சூழப்பட்டிருப்பது. போர்த்துக்கேயர் இலங்கையை ஆக்கிரமிக்கும் வரையில் அப்படியே. பூர்வீக மக்கள் **'கல்புட்டி'** என்றனர். டெனன்ட், ரோபர்ட் போன்ற ஆய்வெழுத்தாளர்கள் **'கல்பெண்டைன்'** என்றனர். றெபிரோ என்பவரின் வரைபடத்தில் **'இல்ஹா டி காடினா!'**

இவையெல்லாம் இக்குடாப்பகுதியின் தொன்மையைப் பறை சாற்றுகின்றன.

**'புத்தளத்தின் கடல்வாசல்'** எனக் கல்பிட்டியை வரலாற்றாசிரியர்கள் வர்ணிப்பர். கடற்கோள்கள் பற்றி முன் கூறப்பட்டுள்ளது. குதிரைமலைப் பகுதியுடன் இணைத்துக் கல்பிட்டிக் குடாநாடு ஒரே தரைப் பாகமாக இருந்துள்ளது.[4]

பூர்வீகமாகக் கல்பிட்டியின் மக்கள் தமிழ் பேசும் மக்களாகவே இருந்துள்ளனர். காலத்துக்குக் காலம் வியாபார நோக்கமாக அறபிகளும் தென்னிந்திய முஸ்லிம்களும், தமிழர்களும், மலையாளிகளும் இங்கு வந்து குடியேறியுள்ளனர். காயல்பட்டினம் - கீழக்கரை - அதிராம்பட்டினம் போன்ற ஊர்களிலிருந்து வந்த முஸ்லிம் வணிகர்களின் தொடர்பு நீண்டதொரு வரலாற்றைக் கொண்டதாகும். வேர்விளைப் பகுதியிலிருந்தும் ஒருசிலர் இங்கு வந்து குடியேறியதாகவும் தெரிகிறது.[5]

*4. 'புத்தளம் வரலாறும் மரபுகளும்' - ஏ.என்.எம். ஹாஜஹான் பக் : 101 (1997)*

*5. மேற்படி. பக் : 106 - 107.*

- இக்குறிப்புகளுக்கு உரியவர், நாம் நூலின் ஆரம்பத்தில் அறிமுகப்படுத்திக் கொண்ட காலபூஷணம் ஏ.என்.எம். ஷாஜஹான் அவர்களே!

போர்த்துக்கேயருக்குப் பின்னர் மலாய் முஸ்லிம்களும் (ஜாவா) இங்கு கால்பதித்தனர். (1644). அவர்கள் டச்சுப் (ஒல்லாந்தர்) படைப்பிரிவின் ஓர் அங்கம்.

டச்சுக்காரரே கல்பிட்டியின் முன்னேற்றத்திற்கு அதிகப் பங்காற்றியவர்கள்.

அவர்களால் கட்டப்பட்ட கடற்கரைப் பாலம் (இப்பொழுதும் பார்க்கலாம்) ஏனைய நாடுகளை இணைத்தது.

சென்னப்பட்டினம் - சோழமண்டலம் (கோரமண்டல்), - சிங்கப்பூர் - பினாங்கு முதலிய இடங்களுக்கும் கல்பிட்டிக்கும் இடையில் சிறு படகுச் சேவை மூலம் ஏற்றுமதி - இறக்குமதிகள் நடைபெற்றுள்ளன.

உப்பு விளைச்சலும், சுண்ணாம்புக் கற்களும், சிப்பிகளும், அம்பர்களும், மீனும், தேனும், தெங்குப் பொருட்களும் ஒரே இடத்தில் காணப்பட்டால் அங்கே காயல்பட்டினம் - கீழக்கரை மக்களைக் காண முடியாது போகுமா?

புரிந்து கொள்ளுங்கள்.

கல்பிட்டியின் பேருந்து நிலையத்திற்கு அண்மிய சின்னக்குடியிருப்புக் கடைத்தெரு பெரும் பெரும் வரலாற்றுக் கதைகளை வைத்துள்ளது.



*'இலங்கைச் சுதந்திரம் அடைவதற்கு முன் கல்பிட்டியின் பெரும் வியாபாரங்கள் தமிழக முஸ்லிம்களிடமும், மலையாள முஸ்லிம்களிடமும் இருந்து வந்தன. சின்னக்குடியிருப்புக் கடைத்தெரு அவர்களது ஆதிக்கத்திலேயே இருந்து வந்தது. பிரஜா உரிமைச் சட்டம் காரணமாக அவர்கள் தாயகம் சென்றுவிடவே, வியாபாரம் கல்பிட்டி முஸ்லிம்களின் கைக்கு மாறிவிட்டது.'*

- என, 1980களில் சித்தி லாபிறா என்ற ஓர் உயர்வகுப்பு மாணவி இங்குள்ள அல் - அக்ஸா மகா வித்தியாலயத்தின் வெள்ளிவிழா மலரில் பதித்திருக்கிறார்.

**உண்மை! உண்மை!**

1970களில் முழுக் காயல்பட்டினவாசிகளுடன் வேறு பல தமிழக முஸ்லிம்களும் இலங்கையிலிருந்து பிரியா விடை பெற்றுக்கொண்டனர்.

என் ஆய்வுக்கு இந்த இடத்தில் முற்றுப்புள்ளி இடுகின்றேன் - சொல்லுதற்கரிய சோகச் சுமைகளுடன்!



# கல்விக்குக் காணி!



மர்ஹூம் என்.எம்.எம். ஹனீபா

இந்திய (தமிழகம்) - இலங்கை முஸ்லிம் கல்வி மேம்பாட்டுக்கு எவ்வாறு இருகரை முஸ்லிம்களும் முன்னின்றார்கள் என்பதற்கு ஒரு சான்றாக விளங்குபவர் இங்கு காணப்படும் கணவான் **என்.எம்.எம், ஹனிஃபா** மர்ஹூம் அவர்கள்.

தொழில் அதிபரான தந்தையார் **ஏ.எம். நாகூர்மீரா** அவர்கள் வழியில், 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பொழுதுகளில் இஸ்லாமியச் சேவையுடன் முஸ்லிம் தமிழ் இலக்கியங்களின் அபிமானியாகத் திகழ்ந்தார். ஒரு சட்டத்தரணி (வக்கீல்)யாகவும் மிளிர்ந்தார்.

இவர்கள்தம் ஐந்தாவது செல்வப்புதல்வரே, இலங்கை இன்றும் போற்றிப் புகழும் முன்னைநாள் சபாநாயகர்,



இந்நாள் நாடாளுமன்ற உறுப்பினர் அல்ஹாஜ் **எம்.எச். முஹம்மது** அவர்கள்.

1946ல் ஜனாப் ஹனிஃபா அவர்கள் துணைவியார் சகிதம் காயல்பட்டின விஜயமொன்றை மேற் கொண்டார்கள். தமது முன்னோர்களின் மண்ணாகிய கொங்குராயக்குறிச்சிக் கிராமத்தின் (ஏரலுக்கு அருகில்) கால் பதித்துவிட்டு அங்கு சென்ற அவர்களுக்கு, காயல்பட்டினப் பிள்ளைகள் பொதுக் கல்வி அறிவில் பின்தங்கியிருப்பதைப் புரிந்து பெருங்கவலை சூழ்ந்தது.

அக்கணமே ஒரு தமிழ்ப்பாடசாலையும் மத்ரஸாவும் அமைய ஆக்கபூர்வ நடவடிக்கை எடுத்தார்கள். நிலம் வாங்கத் தேவைப்பட்ட தொகையை உடன் வழங்கினார்கள். (M.H. Mohamed - A Life Sketch. By A.C.M. saly p.56 (1996)).

இன்று தீவுத்தெருவில் உள்ள கல்விக்கூடம் அவர்கள் நிதியுதவி நிலத்திலேயே இயங்குவதாய் சிலரால் ஊர்ஜிதப் படுத்தப்படுகிறது.

**ஓர் அடிக்குறிப்பு :**

'சிராஜுல் மில்லத்' **ஆ. கா. அ. அப்துஸ்ஸமத்** அவர்களது தந்தையார் மவ்லவி **ஆ.கா. அப்துல் ஹமீது** பாகவி அவர்களின் தர்ஜுமாப் பணிகள் மேலும் தொடர மர்ஹூம் ஹனீபா ரூ.50,000/- வழங்கிட, அது 'அழகாக இறுக்கப்பட்ட கட'னாக அமைந்து போனது. நிதியின் ஒரு பகுதி அல்-குர்ஆன் தர்ஜுமாப்படிகளை அளிப்பதன் மூலம் செலுத்தப் பட்டதாகவும் அறிய முடிகிறது. (1949)



## இலங்கை வள்ளலின் கட்டடம்



*எல்.கே. தொடக்கப் பள்ளிகளுக்கு ஒரு தனி கட்டடம்*

மர்ஹூம் என்.எம்.எம். ஹனிஃபா அவர்களைப் போல, மற்றொரு வள்ளலும், 'வலது கை செய்வதை இடது கையே புரியாதபடி' எம் மத்தியில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

ஒரு மாணிக்க விற்பன்னராக வாழ்க்கையை ஆரம்பித்த அந்த இலங்கை - வேர்விளைப் பெருமகனார், வள்ளல் **எம்.ஐ.எம். நளீம் ஹாஜியார்** அவர்கள், அதிகம்



கற்றுத்தேறக் கொடுத்து வைத்தவர்களல்லர். அதன் காரணமாகவே சமுதாயத்தின் கல்வி உயர்விலேயே சதாசர்வகாலமும் சிந்தனையும், செயற்பாடுகளும் கொண்டவர்களாக ஆகிக்கொண்டார்கள். ஒரு **'ஜாமிஆ நளீமிய்யா'**வை அவர்களது மண்ணிலே பார்க்கிறோம்.

இந்நிலையில், 1969-ல் அச்சம்பவம் நிகழ்ந்தது.

தாம் நெருங்கிப்பழகிய காயல்பட்டின மக்களது பரம்பரையினரின் கல்வி வளர்ச்சிக்குப் பல கல்விக்கூடங்கள் அமைய வேண்டியதன் அவசியம் அவர்கள்தம் காதுகளில் விழ, எல்.கே. தொடக்கப் பள்ளிகளுக்கு ஒரு தனிக்கட்டடம் அவர்கள் அள்ளி வழங்கிய நிதியிலிருந்து உருவானது.

கொழும்பு, பல்லாக்கு லெப்பைப் பங்காளர் மர்ஹூம், ஜனாப் **எஸ்.ஓ.ஹபீப் முஹம்மது** அவர்கள் நன்கொடையாக அளித்த நிலத்தில் அமைந்த அக்கட்டடம், மற்றொரு பாகஸ்தரான வள்ளல், மர்ஹூம் ஹாஜி **பி.எஸ். அப்துல் காதர்** அவர்கள் தலைமையில் 12.10.1969ல் திறக்கப்பட்டது. அழகு மிளிரும் அற்புதமான தோற்றம் அது! எதிர்ப்பக்கத்தில் பிரசுரம்.



# இலக்கிய இணைப்புகள்

'சின்னச் சீறா'வை உருவாக்கியதன் மூலம் 'சீறாப்புராண'த்தை முழுப்பெருங்காப்பியமாக்கினார் **பனீ அஹமது மரக்காயர்** புலவர்.

இக்காயல்பட்டினப் புலவருக்கு உதவிக்கரம் நீட்டினார் ஒரு யாழ். முஸ்லிம்.

அவர் **பக்கீர் முஹியித்தீன். பரிகாரி (வைத்தியர்) மரக்காயர் என்ற உதுமான் லெப்பையின்** குமாரர். ஹிஜ்ரி 127 ல் (கி.பி. 1855) நூலைப் பரிசோதித்துப் பதிப்பித்தவர் அவரே!

இதே போல், காயல்பட்டினம் வித்துவ சிரோமணி காசிம் புலவர் நபிநாதர் மீது பாடிய **'திருப்புகழ்'** காயல்பட்டினம் மகாவித்துவான் **செய்கு அப்துல் காதிர் நயினா லெப்பை ஆலிம் புலவர் நாயகம் முகியித்தீன் ஆண்டவர்கள்** பேரில் பாடிய **குத்புநாயகம்** என்னும் கிடைப்பதற்கரிதான நூல்களைத் தேடிப் பரிசோதித்து அச்சிட்டு வெளியிட்ட பெருமையும் மேற்படி பரிகாரி மைந்தர் பக்கீர் முஹியத்தீனுக்கே சாரும். அவை முறையே ஹி. 1269, 1271ம் ஆண்டுகளில் பதிப்பிக்கப் பெற்றன.



இப்பணிகள் தமிழ்த்தாத்தா உ.வே.சா. யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளை போன்றவர்களது தமிழிலக்கியப் பதிப்புகளுக்கெல்லாம் முன்னோடியாக அமைந்தன.

### விளக்கு ஹாஜியாரின் நூல்

காயல்பட்டினத்தில் பிறந்து யாழ்ப்பாணம் வந்து வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்தவரும், தமிழ்ப் புலமை சான்றவருமான ஹாஜி **முஹம்மது முகியித்தீன் லெப்பைப்** புலவர் அவர்கள் **'சாதுலி நாயகம்'** என்னும் அரியதொரு புராண காவியத்தை இயற்றினார். உற்பவ காண்டம், அற்புதகாண்டம் என்னும் இருகாண்டங்களாகவும், இருபது படலங்களாகவும் வகுக்கப்பட்டுள்ள இந்நூல் **செய்கு முகம்மது சாலிகு ஒலியுல்லா** என்னும் ஞான வள்ளலின் பிரதிநிதியாகவும், **குத்பு நாயக மான்மியம்** முதலியவற்றின் கர்த்தாவாகவும் விளங்கிய யாழ்ப்பாணம் மு. சுலைமான் லெப்பைப் புலவரவர்களாற் பரிசோதிக்கப் பட்டு, 1914ஆம் ஆண்டிற் பிரசுரிக்கப்பட்டது. இதன் இரண்டாம் பதிப்பு யாழ்ப்பாணம் **ஏ.கே.எஸ். (மொகுதூம் முஹம்மது)** ஸ்தாபனத்தினால் 1964 ஆம் ஆண்டில், கொமர்சல் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது.

(மேற்படிப்புலவர், விளக்கு அஹமது முஹியித்தீன் லெப்பையின் மகனாராவார்).

### செய்தப்துல் காதிர் லெப்பை நூல்கள்

ஹிஜ்ரி 1273 ஆம் ஆண்டில், களத்தூர் இலக்கணக் களஞ்சிய அச்சுக்கூடத்திலே **நசீகத்து விளக்கம்**

பதிப்பிக்கப்பட்டது. காயல்பட்டனம் **செய்தப்துல் காதிர் லெப்பை** அவர்களால் இயற்றப்பட்டு, இலங்கை காலி நகரைச் சேர்ந்த **செய்துனா மீரா லெப்பை** மைந்தர் **யூசுப் லெப்பை ஆலிம்** சாகிபு அவர்களால் பார்வையிடப்பட்டது.

**செய்தப்துல் காதிர்** லெப்பை அவர்களால் இயற்றப்பட்ட பிறிதொரு நூல் **'தவத்தூது ஹதீது விளக்கம்.'** இந்நூல் இலங்கை கண்டியைச் சார்ந்த அக்குறணைவாசி **முஹம்மது லெப்பை** ஆலிம் ஹாஜி சாகிபு அவர்களாற் பார்வையிடப்பட்டு, ஹிஜ்ரி 1296 ஆம் ஆண்டில் கல்வி விளக்க அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

**வேர்விளை செய்கு முஸ்தஃபா (ஒலி) நூல்**

வேர்விளை செய்கு முஸ்தஃபா (வலி) அவர்கள் காயல்பட்டினம் உமர் (ஒலி) பேரில் **'மெய்ஞ்ஞானத் துதி'** என்னும் 43 திருப்பாடல்களை இயற்றியுள்ளார். இதனைப் பதிப்பித்தவர் மேற்படி உமர் (ஒலி) அவர்களின் பௌத்திரர் **ஷெய்கு முஹம்மது சாலிஹ்** (ஒலி) அவர்களிடம் ஞானத்தீட்சை பெற்ற அய்யம்பேட்டை **அப்துல்கனி சாயபு.** இவர், இலங்கையிலே பெரும் வணிகராகத் திகழ்ந்தவர்.

மேற்படி உமர் ஒலியில்லாஹ் அவர்களின் கலீபாவாக விளங்கிய **முகம்மது** ஆலிம் சாகிபு **'மெஞ்ஞான அருமை காரணமாலை'** என்னும் நூலை இயற்றினார். இந்நூல் கொழும்பு **எம்.எஸ். முகியித்தீன்** முயற்சியால் 1904ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது.



இலங்கையிற் பிறந்த **ஷிஹாபுத்தீன்** அவர்கள் காயல் நகரில் வாழ்ந்த பொழுது 183 விருத்தப் பாக்களில் அமைந்த **'பீருசா அம்மாள் ஹதீது'** என்னும் காவியத்தை இயற்றினார். காயல்பட்டினம் **காமிலொலி சாமு நயினா லெப்பை ஆலிம்** சாஹிப் பீருசா அம்மாள் ஹதீதின் தொடர்ச்சியாக 40 விருத்தப்பாக்களில் அமைந்த தோகை மாலையை இயற்றினார். இந்த இரண்டு காவியங்களையும் தழுவி **அகுமது லெப்பை** ஆலிம் **சாஹிபு 'ஏசல் பீருசா அம்மாள் ஹதீது'** என்னும் நூலை இயற்றினார்.



## முத்துவாப்பாவும் - முத்து ஹாஜராவும்

காயல்பட்டினத்தில் பலருக்கும் சூட்டப்பட்டுள்ள பெயர் **'முத்து வாப்பா!'** இப்பெயரில் இரு பெரும் மகான்களும் அங்கு ஓய்வுறக்கம் கொண்டுள்ளனர். இதேபோலவே பெண்மணிகளுக்கும் **'முத்து ஹாஜரா!'** பல ஊர்களிலும் கட்டப்பட்டுள்ள அவர்களது தங்கும் விடுதிகளுக்கும் பெயர் **'முத்துச் சாவடி!'** (ஜனாப் எஸ்.டி. வெள்ளைத் தம்பி இதன் செயலர்.)

இந்தளவுக்கு 'முத்து'வில் 'காதல்' ஏற்படக்காரணம், அவர்களது முத்துக்குளிப்பும், உலகளாவிய முத்து வணிகமுமே!

(ஒரு கொசுறுத் தகவல் : என்னருந்தந்தையாரது பெயரும் **முத்து முகம்மது**தான்! ஆனால் காயல் வாசியல்லர்!)

# இஸ்லாமிய இலக்கிய மாநாடு



**நெஞ்சை விட்டகலாத நிழற்படம்**

*மாநாட்டுக்கு விஜயம் புரிந்த அன்றைய இலங்கைக் கல்வி அமைச்சர், புத்திஜீவி நிஸங்க விஜேரத்ன, 'வேர்விளைத் தந்தை', சபாநாயகர் ஹாஜி எம்.ஏ. பாகீர் மாக்கார் (மர்ஹூம்) ஆகியோருடன் ஹாஜி பி.ஏ. சதக் (பல்லாக்கு லெப்பை) ஜனாப் எஸ்.ஐ.எம். முஹியித்தீன் (எஸ்.கே.எஸ். இப்ராகிம் ஜுவல்லர்ஸ் - கண்டி) ஆகியோரை முன்வரிசையில் பார்க்கிறீர்கள். பின் இருப்பவர்கள் : மர்ஹூம்கள் எஸ்.எம். ஸஹாப்தீன் (பல்லாக்கு லெப்பை), எஸ்.எம். ஸஹாப்தீன் ஜே.பி. (குலசேகரப் பட்டினம்), முன்னை நாள் செனட்டர் அல்ஹாஜ் எஸ்.இஸட்.எம். மஸூர் மவ்லானா மற்றும் பலர்.*



1978 - ஜனவரி 13, 14, 15ஆம் தேதிகளை நினைத்துப் பார்க்கிறேன். காயல்பட்டின மண்ணில், அனைத்துலக இஸ்லாமியத் தமிழாராய்ச்சி மாநாட்டின் மூன்று நாட்கள் நிகழ்வில் நானும் ஒரு சிறு பிள்ளையாகத் தவழ்ந்தேன் - ஆனால் தினகரன் (இலங்கை) சிறப்பு நிருபராக!

இலங்கைக்குச் சரிசமமான பங்கு வழங்கப் பட்டிருந்தது.

மூன்று அரங்குகளில், **'ஏ.எம்.ஏ. அஸீஸ்'** அரங்கும் ஒன்று. அதிலே மூன்று நாட்களும் இரவு பகலாக நிகழ்வுகள். அப்பொழுது இலங்கைக் கல்வி அமைச்சராக இருந்த புத்திஜீவி **நிசங்க விஜேரத்தின,** துணை சபாநாயகர் (பின்னர் சபாநாயகர்) வேர்விளைப் பெருமகனார் அல்ஹாஜ் **எம்.ஏ. பாகீர் மாக்கார்** முதலானோர் தலைமையில் சென்றிருந்த ஒரு பெரிய குழுவினரைக் காயல்பட்டின மக்கள் வரவேற்றவிதமும் உபசரித்த பண்பும் நெஞ்சங்களை விட்டகலாதவொன்று.

14.1.1978ல் நடந்த ஒரு கருத்தரங்குக்கு இலங்கைப் பேரறிஞர் கலாநிதி **எம்.எம். உவைஸ்** (மர்ஹூம்) அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

15.1.78ல் கிழக்கிலங்கையின் முதுபெரும் கவிஞரும், முதிய வயதில் இவ்வாண்டு (2001) ஓய்வுறக்கம் கொண்டவருமான புலவர்மணி **ஆ.மு. ஷரீஃப்புத்தீன்** அவர்களுக்குப் பொற்கிழி வழங்கிக் கௌரவித்தனர்.

இலங்கையில் நெடுங்காலம் தொழில் புரிந்து இலக்கியவாழ்வு வாழ்ந்தவர்களான, மர்ஹூம் ஹாஃபிஸ் **எம்.கே. செய்யது அஹமது** அவர்கள் மாநாட்டுத் தலைவராகவும், அன்பருக்கு அன்பர் அல்ஹாஜ் **எஸ்.டி. வெள்ளைத்தம்பி** அவர்கள் செயலாளராகவும் திகழ்ந்து இலங்கையுடன் ஒரு சிறந்த இலக்கியப்பாலத்தை அமைப்பதில் பெரும் வெற்றிகண்டார்கள்.

அவர்களுடன் மாநாட்டுக் குழு அங்கத்தவர்களாகச் செயல்பட்ட மர்ஹூம்கள், ஹாஜிகள் **பி.எஸ். அப்துல்காதிர், எஸ்.ஒ. ஹபீபு முகம்மது, எல்.கே. லெப்பைத்தம்பி, எஸ்.ஏ. சுலைமான்**...கதீப் **ஏ.கே. முகம்மது அபூபக்கர், எஸ்.ஈ. முஹியித்தின் தம்பி, மற்றும் ஜனாப்கள் வி.எஸ். தாவூது, எஸ்.என். சுல்தான் அப்துல்காதிர், எஸ்.ஏ. அமீன் அப்துல் காதிர், எஸ். செய்யது அகமது, அமானுல்லாஹ், புரவலர் எஸ்.ஏ.பி. யூசுப், காயல் மவ்லானா** முதலியோருடன், பல்லாக்கு **பி.ஏ. சதக்** ஹாஜி, பி.ஏ. **முகியீத்தீன்** ஹாஜி, குலசேகரப் பட்டினம் மர்ஹூம் **எஸ்.எம். ஸஹாப்தீன்,** ஜே.பி. முதலியோரையும் இம்மாநாடு நடைபெற காரணமாக அமைந்த **முத்துக் காக்கா நெ.ஈ. முத்து முஹம்மது** அவர்களையும் மறக்கமுடியாத பேனாவே என் போன்றவர்கள் உடையது.





# இலங்கை முஸ்லிம்கள் தமிழ் பேச என்ன காரணம்?

இலங்கையின் தனிச் சிங்களம் பேசும் பகுதிகள் உள்பட எல்லாப் பகுதிகளிலும் வசிக்கும் முஸ்லிம்கள் தமிழையே பேசிவருகின்றார்களென்றால் அதற்குக் காரணம் இருக்க வேண்டும்.

அறபிகள் இலங்கையை அடைந்தபோது அவர்களை வரவேற்று உறவாடியவர்கள் தமிழ்பேசிய சமூகத்தினரே. அதனால் அறபிகள் தமிழ் பேசக் கற்றதுடன், தமிழ் பேசியோர் அறபியையும் கற்றனர். பெரும்பாலோரின் மொழியான தமிழ் மொழியே நாளடைவில் அறபிகளின் வழித்தோன்றலின் மொழியுமாகியது.

கரையோரங்களில் செறிந்து வாழ்ந்த தமிழ் பேசும் மக்களுடன் முஸ்லிம்கள் நெருங்கி உறவாடி தொடர்பு கொண்டிருந்தது போல, வியாபாரத்தில் அக்கரையின்றி, வெளிநாட்டவரின் தொடர்புக்கு விருப்பமின்றி, உள்நாட்டில் விவசாயத்தில் ஈடுபட்டு அமைதியுடன் வாழ்ந்த சிங்கள மக்களுடன் அதிகம் தொடர்பு கொண்டிராமையே முஸ்லிம்கள் சிங்கள மொழியைவிட தமிழ்மொழியைப் பேச்சு மொழியாகக் கொண்டமைக்குக் காரணமாகும்.

அத்துடன், தென்னிந்திய முஸ்லிம் சமூகத்தினர் தமிழ் மொழியையே தாய் மொழியாகக் கொண்டிருந்ததாலும், அவர்களுடனுள்ள சமூக, கலாசார, மதத் தொடர்புகளாலும் இலங்கை முஸ்லிம்களின் தாய்மொழி தமிழ் மொழியாக நிலைத்தமைக்குக் காரணமாகியது.

## தாமிரபரணி - தப்ரபேனா!

நமது இந்த ஆய்வுக்கு முழுமுதற் 'கதாநாயகி'யாகத் திகழ்கின்ற '**தாமிரபரணி**' பொதிகை மலையில் பிறந்தவள். குற்றாலச் சாரல்கள் பொழிவது தாமிரபரணி தோன்றும் பகுதிகளில் தான்!

மூலிகை மருத்துவக் குணங்கள் கொண்ட செடிகொடிகள் வேர்கள் வழியாக தாமிரபரணி தவழ்வதால், அதில் நீராடும் ஒருவருக்கு உடல்வளமும் மனவளமும் பெருகுகிறது. பாபநாசம் அருகே '**பாணதீர்த்தம்**' என அழைக்கப்படுகிறாள். குறுக்கே பாபநாசம் அணையும் பார்க்கப்பட வேண்டியவொன்று. இருள் சூழ்ந்த காடுகளுக்கிடையேயும் சலசலக்க அஞ்சுவதில்லை!

மலைப்பகுதிகளிலே பல துணையாறுகள் கலக்கின்றன. சமவெளியில் 96 கி.மீ. தொலைவை ஓடியாடி கடக்கும்பொழுதும் மேலும் பல துணையாறுகளுடன் கொஞ்சுதல்கள்.

இவளது ஓட்டம் முண்டந்துறையை அடையும் பொழுது சேர்வையாற்றுடன் ஒரு சங்கமம்.

பண்டைய இலங்கையுடன் இவள் கொண்ட தொடர்பை 3ஆம் 4ஆம் அத்தியாயங்களில் தெரிந்து பரவசப்படலாம்.





## கிழக்கிலங்கையில் காயல்பட்டின நூல்கள்

காயல்பட்டினத்தில் உருவான அறபுத்தமிழ்நூல்கள் பல. அவற்றில், கிழக்கிலங்கையில் மிகவும் செல்வாக்குப் பெற்ற முக்கியமான நூல்கள் :

- சின்ன ஹதீது மாணிக்க மாலை
  - ஷாமு ஷஹாபுத்தீன் ஒலி.
- பெரிய ஹதீது மாணிக்க மாலை
  - ஷாமு. ஷஹாபுத்தீன் ஒலி.
- புதூஹாத்துர் ரஹ்மானிய்யா பீ தப்ஸீர் கலாமிர் றப்பானியா - ஹபீபு முஹம்மது ஆலிம் (ஹி. 1296)
- தப்ஸீர் பத்ஹுர் ரஹீம் - ஹபீபு முஹம்மது ஆலிம் (ஹி. 1304)
- நான்கு மத்ஹபு விளக்கம் - ஹபீபு முகம்மது ஆலிம் (ஹி.1304)
- தப்ஸீர் பத்ஹுல் கரீம் - நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)
- பத்ஹுல் மஜீது - நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)

- குத்பா தர்ஜுமா - நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)
- கஸீதத்துல் புர்தா தர்ஜுமா - நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)
- வித்ரியா விரிவுரை - நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)
- அவுலியாக்கள் சரிதை- நூஹுலெப்பை இப்னு அப்துல் காதிர் ஆலிம் (ஹி. 1299)
- பர்ஸஞ்சி மவ்லிது தர்ஜுமா - முகம்மது அபூபக்கர் மிஸ்கீன் ஆலிம் (ஹி. 1310)

*- தகவல் உதவி : எஸ். ஏ. ஆர்.எம். செய்யது ஹஸன் மல்லானா (மருதமுனை)*



## இலங்கை - ஓர் இஸ்லாமிய ராச்சியம்?

*13ஆம், 14ஆம், 15ஆம் நூற்றாண்டுகளில் முஸ்லிம்களின் செல்வாக்கு வளர்ந்த வேகத்தை அவதானிக்கும்போது, அக்காலகட்டத்திலே போர்த்துக்கேயர் இலங்கைக்கு வராது இருந்திருந்தால், இலங்கை ஓர் இஸ்லாமிய இராச்சியமாக மாறியிருக்குமோ என்று சிந்திப்பது அறிவுக்குப் பொருத்தமான ஒன்றே!*

.... ஸர் எமர்சன் டெனண்ட்

('ஹிஸ்டரி ஆஃப் சிலோன்')



## ஆய்வில் ஒரு விநோதம்!

இப்பொழுது ஒரு விநோதமான ஆய்வு! அதுவும் ஆதாரமெதுவுமில்லாமல்!

முதலில் இப்பெயர்களைப் படியுங்கள் :

- யாழ். சு. மு. சுலைமான் **லெப்பை**
- யாழ். அசானார் **லெப்பை** புலவர்
- யாழ். முஹம்மது அப்துல்லா **லெப்பை** புலவர்
- காத்தான்குடி அஹ்மது **நயினார்** புலவர்
- காத்தான்குடி ஹமீது **லெப்பை ஆலிம்**
- சம்மாந்துறை இஸ்மாயில் **லெப்பை** புலவர்
- அட்டாளச்சேனை அப்துல்ரஹ்மான் **லெப்பை** ஆலிம்
- அக்கரைப்பற்று உமறு **லெப்பை** புலவர்
- கண்டி ஷெய்கு முஹம்மது **லெப்பை** ஆலிம் புலவர்
- அக்குறணை இஸ்மாயில் **லெப்பை** புலவர்
- தெல்தோட்டை ஆதம் **லெப்பை** புலவர்

✪ கொழும்பு ஹம்ஸா **லெப்பை** புலவர்

✪ வேர்விளை அகமது **லெப்பை** மரக்காயர்

- இப்பெயர்களின் தடித்த எழுத்துக்களை கொண்டு ஒன்றை யாரும் அனுமானித்து விடலாம்.

ஏதோவொரு வகையில், இப்புலவர்களில் ஒரு சிலருக்காவது காயல்பட்டினத் தொடர்பு இருந்திருக்கும் என அடித்துப் பேசலாம்!

நானே அதைச் செய்ய விரும்பி அச்சிட்டிருக்கிறேன்!

அத்தோடு, காயல்பட்டின ஹாஜி, கலாநிதி ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் அவர்களுக்கு ஒரு வேண்டுகோள் : இந்த இலங்கைப் புலவர்களது பெயர்கள் உங்களது ஊரார் யாருடனாவது தொடர்பு படுகிறதா? அல்லது எந்த சில்சிலாவிலாவது இடம் பெற்றுள்ளதா?







சுல்தான் லெப்பை ஆலிம்



ஜனாப் மா. செ. முஹம்மது லெப்பை



ஹாஜ் கே.எம். இஸ்மத் பி.எஸ்சி.



ஜனாப் செய்யது காக்கா



ஹாமீது ஆலிம்



மர்ஹூம் ஹாஜி எல்.கே. மானா தம்பி

## தமிழ்நாட்டில் காயல்பட்டினம் காணப்படும் இடம்

பெங்களூர்
சென்னை
பாண்டிச்சேரி
காரைக்கால்
மதுரை
தூத்துக்குடி
திருச்செந்தூர்
காயல்பட்டினம்
திருவனந்தபுரம்
கன்னியாகுமரி

## இலங்கை அபிமானிகள் தெளிவாகத் தெரிய இப்படம்!

தூத்துக்குடி மாவட்டம்

காமராஜர் மாவட்டம்
விளாத்திகுளம்
இராமநாதபுரம் மாவட்டம்
கோவில்பட்டி
ஒட்டப்பிடாரம்
தூத்துக்குடி
திருநெல்வேலி மாவட்டம்
ஸ்ரீவைகுண்டம்
காயல்பட்டினம்
திருச்செந்தூர்
சாத்தான்குளம்
மன்னார் வளைகுடா



இலங்கையை ஊடுருவும் தாமிரபரணி!
(பாடநூலில் உள்ள வரைபடம்)



## காயல்பட்டினப் பெண்மணிகள் பார்வைக்குத் தப்பக்கூடாத பக்கம்

### விடைபெறும்  வேளை...

*இறையருளாலும், இல்லத்து 'நிழல்' (துணைவியார்) இருகரமேந்தி கேட்ட துஆக்களாலும் இவ்வாய்வு இப்பொழுது நிறைவாகிறது - ஆனால் தற்காலிகமாக!*

*இன்னும் இன்னும் புதையல்கள் இலங்கை - காயல்பட்டினத் தொடர்புகளில் உண்டு. அதனை இன்னொரு இரண்டாம் பாகத்தில் பார்ப்போம். விடுபட்டவை களையெல்லாம் சேர்த்துக் கொள்வோம். இன்ஷாஅல்லாஹ்!*

*1999ம் ஆண்டில்* **'நீடூர் நெய்வாசல் நெஞ்சங்கள்'** *நூலை வழங்கிய பொழுது அதன் 199ஆம் பக்கத்தில் இப்படியொரு குறிப்பை எழுதியிருந்தேன்!*

> **'இலங்கை கீழக்கரை இனிய தொடர்புகள்'** *ஆயிரக்கணக்கான நல்லிதயங்களை இராமநாதபுரம் மாவட்டத்தில் பெற்றுத் தந்தது. தொடர்ந்து* **'நீடூர் நெய்வாசல் நெஞ்சங்கள்'** *தஞ்சை மாவட்டத்தில்*

ஆயிரக்கணக்கானோர் இதயங்களில் இருக்கப் போவது நிச்சயம். இனி, புதிய நூற்றாண்டில் வரப்போகிற/நூல் நெல்லை மாவட்டத்து மக்களின் நெஞ்சங்களில் குடியிருத்தும்.

எழுதியதைப் போலவே இரண்டாண்டுகள் ஆய்வுக்குப் பிறகு இதனை உங்களிடம் சமர்ப்பித்து உள்ளேன். ஆனால் நெல்லை மாவட்டம் என்பதை தூத்துக்குடி மாவட்டம் எனப் போடாமல் விட்டது தவறு.

எவ்வாறாயினும் நெல்லை - முத்து நகர் நெஞ்சங்களில் நிச்சயமாக நான் குடியிருப்பேன். 'அங்கு மட்டுமா' எனக் கேட்பீர்கள்! அதன் பதில் அவனிடம்!

இந்நூல் ஆய்வு சம்பந்தமாக, நூற்றாண்டை நோக்கி உள்ள பெரியவர்களையும் பவளம் பார்த்தவர்களையும் பார்த்துத் திரும்பிய நேரங்களில் அவர்கள் ஒன்றைத் திரும்பத் திரும்பச் சொன்னார்கள்.

- 'நீங்க இந்நூலில் யார் யாரைப் பத்தி எல்லாம் எழுதினீங்களோ, அவ்வளவு பேருடைய ஷஃபாஅத்துக்களும் நீங்கள் இருக்கும் காலமெல்லாம் உங்களுக்கு உள்ளது.'

இச்சமயத்தில், என் மகளார் **அஞ்சானா** நினைவில் வருகிறார். தற்சமயம் பங்களாதேஷ் நாட்டில் மருத்துவக் கல்விக்காக தனித்து விடப்பட்டுள்ள அந்த ஒரே புத்திரிக்கும் எனக்கு கிடைக்கக்கூடிய ஷஃபாஅத்துக்களில் கொஞ்சம் சேரட்டுமே! அவரது பொருளாதாரக் கஷ்டமும் நீங்கட்டுமே.



அவனிடமே கையேந்துகிறேன்.

நல்லது. இதன் கீழ் உள்ள நிழற்படத்தைக் கவனியுங்கள்.



காயல்பட்டின வணிகர் ஜனாப் **எம்.ஒ.எம். முஹியித்தீன்** அவர்களுடன் வேள்விளைவாசிகள் சிலர் மாணிக்கக் கற்களை பட்டைத் தீட்டும் தங்களது பாரம்பரியத் தொழிலைச் செய்து கொண்டிருக்கிறார்கள். பரவசமான காட்சி!

உண்மையில் இது, காயல்பட்டின மண்ணுக்கே உரிய ஒரு தனித்துவமான தொழில். பணத்தை அள்ளிக்கொட்டும் கைத்தொழில்.

ஆனால் இன்றைய நிலை என்ன? பெண்மணிகளே, உங்களைத்தான் கேட்கிறேன்.

பல நூற்றாண்டுப் பாரம்பரிய பட்டைத் தீட்டும் தொழிலை பார்க்க முடிகிறதா?

உயர்கல்வி அறிவாலும், தொலைக்காட்சி, கணினி - இண்டர்நெட் - இணைய தளம் - இ.மெயில் இவற்றால் சூழப்பட்டுள்ள நீங்கள், மாணிக்கக் கற்கள் பட்டைத் தீட்டல், அவற்றில் அறிவு பெறல் (Gemmology Courses), நகை ஆபரண வடிவமைப்புப் பயிற்சி போன்றவைகளிலும் ஏன் இறங்கக் கூடாது?

உங்கள் இல்லங்களில் இருந்துகொண்டே தொலைக்காட்சி பார்த்துக்கொண்டே, கணினியில் கைவைத்துக் கொண்டே இண்டர்நெட் - இ.மெயிலில் ஆழ்ந்துகொண்டே உங்களுக்கென ஒரு தனித்துவமான கைத்தொழிலைக் கற்று த்ன்னம்பிக்கையுடன் வாழலாமே?

பட்டைத் தீட்டும் தொழில் என்று மட்டுமல்ல, அதிக இலாபமூட்டும் வேறு கைத்தொழில்களும் உள்ளன. அவற்றில் ஈடுபட்டால் அடிப்படை செலவீனங்களைச் சமாளிக்கலாமே! சிந்தியுங்கள்! சிந்தியுங்கள்!

நான் விடைபெறும் வேளை வந்துவிட்டது.

நன்றியுடன் என்றும் எழுத்துப்பணியில்!





**நெஞ்சினிக்கும் காட்சி!** : காயல்பட்டின - வேர்விளை, சீனங்கோட்டைப் பெருமக்களது பாரம்பரிய மாணிக்க வணிகத் தொடர்புகளை நினைவுறுத்தவும் தொடர்ந்து நிலைநாட்டவும் இந்த நூலுக்காக ஒன்றிணைந்து நிழற்படம் எடுத்துக்கொண்ட எனது அபிமானிகளான வேர்விளை, சீனங்கோட்டை பெருமக்களைக் காண்கிறீர்கள். உண்மையிலேயே நெஞ்சினிக்கும் நிறைவான காட்சிதான்.

# ஆய்வில் பார்வை பதித்த நூற்பெயர்க்கோவை

## BIBLIOGRAPHY


1. இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் (1997) - எம். ஆர்.எம். அப்துற்றஹீம் (மர்ஹூம்)

2. இளைஞர் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் (1991) -கலைமாமணி மணவை முஸ்தஃபா,

3. முஸ்லிம் தமிழ்ப் பாரம்பரியம் (1968) - ஹாஃபிஸ் எம்.கே. செய்யிது அஹமது (மர்ஹூம்)

4. வான்புகழ் காயல் - மேற்படி ஆசிரியர்.

5. காயல்பட்டினம் (1993) - அல்ஹாஜ், கலாநிதி ஆர்.எஸ். அப்துல் லத்தீஃப் எம்.எ.

6. காயல்பட்டினத்தின் வரலாற்றுச் சுருக்கமும் தலைமுறையும் (1998) - மேற்படி

7. இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கட்டுரைக்கோவை (1978) - அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மூன்றாவது மாநாட்டுச் சிறப்பு மலர்.

8. புத்தளம் வரலாறும் மரபுகளும் (1992) - கலாபூஷணம் ஏ.என்.எம். ஷாஜஹான்.

9. யாழ்ப்பாண முஸ்லிம்கள் வரலாறும் பண்பாடும் (1979) - எம்.எஸ். அப்துல் ரஹீம். எம்.எட்.





10. ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சனைகள் (1997) - முகமது சமீம் பீ.எ. ஆனர்ஸ்.

11. இஸ்லாமும் தமிழும் (1975) - எஸ். பொன்னுத்துரை.

12. நினைவு மலர்கள் (1996) - எம். இத்ரீஸ் மரக்காயர்.

13. தமிழக தர்காக்களும் பள்ளிவாசல்களும் (1996)-முகவை முஸ்தஃபா

14. தமிழகத்தில் முஸ்லிம்கள் - போர்ச்சுகீசியர் வருகைக்கு முன்பும் பின்பும் (1985) - டாக்டர் பி.எம். அஜ்மல்கான், எம்.எ.

15. பாண்டியர் வரலாறு - டி.வி. சதாசிவப் பண்டாரத்தார்.

16. பிறைக்கொழுந்து (1979) - அனைத்துலக இஸ்லாமியத் தமிழலக்கிய 4-ஆம் மாநாட்டுக் கட்டுரைத்தொகுப்பு

17. இலங்கை - கீழக்கரை இனிய தொடர்புகள் (1998) - மானாமக்கீன்

18. தமிழ் தந்த தாத்தாக்கள் (1987) - க.சி. குலரத்தினம்.

19. நம் முன்னோரளித்த அருஞ்செல்வம் (1954) - பேராசிரியர் எஸ்.எ. பேக்மன், எம்.எ. ஜி.ஸி. மெண்டிஸ், பி.எ. பி.ஹெச்டி.

20. மாத்தளை மாவட்ட முஸ்லிம்கள் (1992) - இலங்கை அரசின் முஸ்லின் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

21. அநுராதபுர மாவட்ட முஸ்லிம்கள் (1993) - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

22. மாத்தறை மாவட்ட முஸ்லிம்கள் (1995) - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

23. கண்டி மாவட்ட முஸ்லிம்கள் (1996) - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

24. அம்பாரை மாவட்ட முஸ்லிம்கள் (1997) - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

25. தேசிய மீலாதுன் நபி விழா மலர் (1992). - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

26. தேசிய மீலாதுன் நபி விழா மலர் (1998) - இலங்கை அரசின் முஸ்லிம் சமயப் பண்பாட்டலுவல்கள் அலுவலக வெளியீடு.

27. காயிதே மில்லத் இளைஞர் சமூக அமைப்பின் சமய நல்லிணக்க மாநாடு சிறப்புமலர் (1999) -காயிதே மில்லத் இளைஞர் சமூக அமைப்பு (காயல்பட்டினம்)

28. அருட்சுடர் சிறப்பு மலர் (1998) -முஅஸகருர் ரஹ்மான் மகளிர் அறபிக்கல்லூரி (காயல்பட்டினம்)

29. காயல்பட்டினம் தேர்வுநிலை பேரூராட்சி நூற்றாண்டு நிறைவு சிறப்பு மலர் (1990) - காயல் மகபூப் தொகுப்பு

30. எல்.கே. பள்ளிகள் பொன்விழா மலர் (1999) - எல்.கே. பள்ளிகள் (காயல்பட்டினம்)

31. வரலாறு (9ம் ஆண்டு பாடநூல் (1990) - இலங்கை, கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

32. நிஜாம் ஓரியண்டல் அறபி உயர்நிலைப் பள்ளி வெள்ளிவிழா மலர் - 1995 - புதுக்கோட்டை, நிஜாம் ஓரியண்டல் அறபி உயர்நிலைப்பள்ளி.

33. கல்பிட்டி (இலங்கை) அல் - அக்ஸா மகா வித்தியாலய வெள்ளிவிழா மலர் (1980) - எம்.எ.எம். ஜவாத் மரக்காயர்.



1. Arabic, Arwi And Persian in Serandib and Tamilnadu (1993) Afdalul Ulama Dr. Taykashuaib Alim B.A. (Hons) M.A. Ph.D. M.F.A. (Kilakarai)

2. Muslims of Srilanka (1986) Dr. M.A.M. Shukri (Sri lanka)

3. Muslims in Ceylon (1964) - S. Araseratnam

4. Muslims of Srilanka under the British - Dr. Kamil Asad (Sri lanka)

5. Muslims in the Kandyam Kingdom - Lorna Devarajah (Sri Lanka)

6. A History of Srilanka (1981) - K.M. de. silva (Srilanka)

7. History of Ceylon (1932) - Fr. S.G. Perera (Srilanka)

8. Discovering Ceylon (1981) - R.L. Brohier (Sri lanka)

9. Monograph of the Batticaloa District of the Eastern province of Ceylon (1921) - S.O. Kanagarathnam (Sri lanka)

10. True and Exact Description of the Greater Island of Ceylon (1672) - Reverend Phillipps Baladus.

11. The portuguese policy in Ceylon (1972) 1617-1638 - Dr. Colvin R.De.Silva. (Sri lanka)

12. Portuguese policy Towards Muslims (Ceylon Journal of Historical and Social studies 1966) - Dr. Colvin R.De. Silva (Sri lanka)

13. The Portuguese and Pearl Fishing off south India and Sri lanka. (1978) - Dr. Colvin R. De.Silva.

14. The Portuguese Seaborne Empire 1415 - 1825 (1969)-C.R. Boxer

15. The portuguese Rule in Ceylon. (1594 - 1612) (1966) - Tikiri Abeysainghe (Sri lanka)

16. The Foundation of Dutch power in Ceylon 1638 - 1658 (1958)- Prof. K.W. Goonewardene (Srilanka)

17. Glimpses from the past of the Moors of SriLanka (Moors in the Datch Period) (1976) - Prof K.W. Goonewardene (Srilanka)

18. Secret Minutes of the Dutch political council (1954) - J.H.O. Paulusz.

19. Dutch power in Ceylon (1658 - 1687) (1958) - S. Arasaratnam.

20. Indian Economic and Social History Review. Vol. IV. No.2. (Dutch Commercial Policy and its Effects of Indo - Ceylon Trade 1690 - 1750. (1967) - S. Arasaratnam.

21. University of Ceylon Review Vol. XXI No. I. (The Nainativu Tamil Inscription of Parakramabahu I ) (1963) - Dr. Indrapala, (Srilanka).

22. The Travels of Marcopolo (1958) - R.E. Latham (London)

23. M.H. Mohamed - A life sketch (1996) A.C.M. saly.






TENNENT'S MAP